

திருப்புத்தூரில் 14-9-61 வியாழக்கிழமை எங்கள் புதல்வன் திருவளர் செல்வன் நாகராஜனுக்கும் திருவளர் செல்வி வசந்தா தேவிக்கும் நடைபெற்ற திருமணத்தின்போது பெரியோர்களிடமிருந்தும் அன்பர்களிடமிருந்தும் ஆயிரத்திற்கும் மேற்பட்ட வாழ்த்துச் செய்திகள் கிடைத்துள்ளன. இத்துடன் திருமண நிகழ்ச்சிகள் அனைத்திலும் பல்லாயிரக் கணக்கான மக்கள் சீரும் சிறப்புடன் கலந்துகொண்டு மணமக்களை வாழ்த்தி அருளிய தமிழ்ப் பெருமக்கள் எல்லோருக்கும் நாங்கள் தனித் தனியே நன்றி தெரிவிக்க இயலாமையால் இதன் மூலம் எல்லோருக்கும் எங்களது உளங்கலந்த நன்றி வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மக்கள் அன்பு மறவாத நா. ஆறுமுகம் பிள்ளை தம்பதிகள்

பிலவ, ஐப்பசி 6

# கல்கி

அக்டோபர் 22, 1961

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 12

# நீதியை மீறிய நிலவரம்பு

மாற்றங்கள் பெற்றுப் புது வேஷத்துடன் வந்துள்ள தமிழ்நாட்டு நிலவரம்பு மசோதாவைக் காணும்போது நெஞ்சு கொதிக்கிறது. நேர்மையுணர்ச்சி உள்ளவர்கள் யாவருக்கும் நெஞ்சு கொதித்திருக்கிறது என்பது டாக்டர் ஏ. எல். முதலியார், திரு பி. டி. ராஜன், திரு ஓமந்தூரார், திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர் முதலியவர்கள் மேல் சபையில் நிகழ்த்திய உரைகளிலிருந்து தெரிகிறது.

ஒருவர் எந்தமுறையில் நிலம் வாங்கினர், என்னென்ன ஆசை அபிலாஷைகளோடு அதனை வளமுறச் செய்தார், அதன் வளத்தோடு தம் முன்னேற்றத்தையும், தம் குடும்பத்தின் மேன்மையையும், வரப்போகும் வாரிசுகளின் வாழ்வையும் எவ்விதத்தில் பிணைத்திருந்தார் என்பதையெல்லாம் சற்றும் எண்ணிப் பாராமல் அவரது சொத்துக்கு வரம்பு விதிப்பது எந்த நீதிக்கு ஏற்றும்? தம்முடைய உண்மை உழைப்பினல் சேர்த்த சொத்தைக் கொண்டு, சமுதாய விரோதமான காரியம் எதுவும் செய்யாது, சமூகம் செழிப்பதற்கு உகந்த வகையில் விவசாயம் செய்யும் பெருங்குடிகளின் நல்வாழ்வையும், நீதியையும் துச்சமாகக் கருதி உச்சவரம்பு விதிப்பது எவ்வளவு அநியாயமாகும்?

விவசாயத் தொழிலாளர்களை அவர்கள் சரியாக நடத்தவில்லை என்றோ ஏகாதிபத்தியம் செலுத்தினர் என்றோ காரணம் காட்ட முடியுமா? அல்லது நிலச் சொந்தக்காரர்கள் தங்களுக்குள்ள உரிமையை துஷ்பிரயோகம் செய்து உணவுப் பண்டங்களின் விலையை உயர்த்தி மக்களை இன்னலுக்கு ஆளாக்கினர்கள் என்றுதான் சொல்ல முடியுமா?

உழுது பயிர் செய்யும் நிலத்தில் யாதொரு உரிமையுமில்லாமல் சர்க்காருக்குப் பதிலாக இடையில் நின்று நிலவரி வசூல் செய்து வந்த ஜமீன்தார்களையும் இந்த விவசாயப் பெருங்குடிகளையும் ஒன்றுபடுத்திக் குழப்ப மூட்டுவது தவறு.

முப்பது ஏக்கரா என்கிற வரம்பும் ஸ்திரம் இல்லை. தற்போது நல்ல வெள்ளாமையுள்ள பூமிக்கு இதுவே இருபத்துநான்கு ஏக்கராவாகி யிருக்கிறது. காலக்கிரமத்தில் இது மேலும் மேலும் தேய்ந்து வந்து கடைசியில் தனி நபர்களுக்கு நில உரிமையே இருக்கக்கூடாது என்று சட்டம் வரக்கூடும். ருசிகண்ட பூனைப் பழமொழியை நினைவில் கொள்ள வேண்டும். இன்று சின்னப் பண்ணை வைத்திருப்பவர்கள் பெரிய பண்ணையார்களின் துயரத்தைக் கண்டு சந்தோஷமடையலாம். நிலமே இல்லாமல் கூலி வேலை செய்கிற மக்களின் தொகைதான் அதிகம். அவர்களின் வோட்டுக்களைச் சம்பாதிப்பதற்காக வருங்காலத்தில் சின்னப் பண்ணைகளையும் இந்த அநீதிக்கு இரையாக்குவார்கள்.

நேர்மையான முறையில் ஈட்டிய செல்வத்துக்கு வரம்பு விதிப்பது அரசியல் நிர்ணயச் சட்டம் அளித்த ஜீவாதார உரிமைகளைப் பறிமுதல் செய்வதாகும். ஏதாவதொரு மசோதா அரசியல் நிர்ணயச் சட்டத்துக்கு விரோதமானது என்று நீதிமன்றம் தீர்ப்புக் கூறினல் அரசியல் நிர்ணயச் சட்டத்தின் ஷரத்தைத் தங்கள் மசோதாவுக்கு வசதியாகும்படி மாற்றிக் கொள்வது காங்கிரஸ் ஆட்சியின் நடைமுறையாக இருக்கிறது; பதவிப் போதையிலிருக்கும் காங்கிரஸுக்கு தர்மத்தையும், நியாயத்தையும் பற்றி எவ்வளவுதான் எடுத்துச் சொன்னலும் பயன் ஏற்படவில்லை.

நியாயமாகச் சம்பாதித்த நிலவுடைமைக்கு உச்சவரம்பு கட்டுவதற்கு நீதியின் அடிப்படையில் எந்தக் காரணமும் கிடையாது. தனி நபரின் சொத்துரிமையை சர்வநாசம் செய்யும் திட்டம் அது. இந்தச் சட்டத்தால் நிலமற்ற உழவர்கள் நிலம் பெறுவார்கள் என்று காங்கிரஸ்காரர்கள் முதலில் கூறி வந்தனர். வரம்புக்கு மேல் உபரியாக நின்று,

சர்க்காரால் பறிமுதல் செய்யப்பட்ட நிலம் நிலமற்ற உழவர் எல்லோருக்கும் அளிக்கச் சற்றும் போதாது என்பது மக்களுக்குத் தெரிந்துபோன பிறகு உபரி நிலத்தை எந்தத் தனி நபர்களுக்கும் பூரண உரிமையாக்காமல் கூட்டுறவுப் பண்ணைகளாக நடத்தப் போகிறோமென்று பேசலானார்கள். உணவுப் பொருள் உற்பத்தி அபிவிருத்தியைக் கருத்தில் கொண்டிருந்தாலும், ஜீவேஜியில்லாத புதுக் குடிகளுக்கு நிலங்களைப் பிரித்துக் கொடுப்பதால் உணவு உற்பத்தி பெருகுமா என்கிற கேள்வி பிறக்கிறது. முதலில் உரிமையாளராக இருந்த பண்ணையார்களுக்குப் பதில் சுய ஈடுபாடோ, விளைச்சலில் அக்கறையோ இல்லாத 'மானேஜர்'களை நியமிப்பதால் விவசாயத்தில் சற்றும் அபிவிருத்தி ஏற்படாது. இவையெல்லாம் காங்கிரஸ்காரர்களுக்குத் தெரிந்திருந்தாலும் மக்களை ஏமாற்றி வகுப்புக்கு வகுப்பு பகையுணர்ச்சியை உண்டாக்கி ஓட்டுகள் சம்பாதித்தால் வெற்றி பெறலாமென்று இந்தக் கீழ்த்தரமான செயலில் அவர்கள் இறங்கியுள்ளனர்.

ரெவினியூ மந்திரி திரு மாணிக்கவேலர் அவர்களே இந்த ஏற்பாடு உழவர் வாழ்வைச் செழிக்கச் செய்வதற்கல்ல என்பதை மனமார ஒத்துக் கொண்டிருக்கிறார்.

நில உச்சவரம்பைப் பதினைந்து ஏக்கராவாகக் குறைக்க வேண்டுமென்று சிலர் வாதாடினபோது ரெவினியூ மந்திரி அவர்கள், 'பதினைந்து என்ன, மேல் வரம்பை ஐந்து ஏக்கராவாகக் குறைத்தாலும்கூட நிலமற்றோருக்கெல்லாம் விநியோகம் செய்யும் அளவுக்கு உபரி நிலம் கிடைக்காது' என்றார்.

இதெல்லாம்தான் போகிறது; உபரியாகப் பெற்ற நிலத்தில் இயந்திர சாதனங்களைக் கைக்கொண்டு உணவு உற்பத்தியைப் பெருக்கலாமென்ற யோசனையும் இல்லை என்பது வெளிப்படை. இவ்விஷயமாகச் சமீபத்தில் நமது மத்திய சர்க்கார் உணவு மந்திரி வெளிநாடுகளில் அழுத்தமாகக் கூறியுள்ள வாசகங்களைக் கவனிக்க வேண்டும். ''அநேக காரியங்களுக்கு மிகவும் அவசியமாயுள்ள காடுகளை அழித்தாலொழிய இந்தியாவில் விளைநிலங்களை அதிகப்படுத்த முடியாது. உலகிலேயே இந்தியாவில்தான் மிக அதிகமான சதவிகித நிலம் விளைச்சலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. தற்போதுள்ள நிலங்களைக் கூட்டுப் பண்ணையாக்கினாலும் அவற்றில் இயந்திர மூலம் உழவு செய்ய முடியாது. இவ்வாறு செய்தால் ஏராளமான மக்களுக்கு வேலையில்லாமற் போய், வேலையில்லாத ஒரு பெரும் பட்டாளம்தான் உண்டாகும்'' என்கிறார் உணவு மந்திரி.

பழைய போலிக் காரணங்கள் ஏதும் எடுபடாததால் புதிதாக ஒரு காரணம் காட்டி நில மசோதாவுக்கு ஆதரவு தேடுகிறார் திரு மாணிக்கவேலர்.




மாப்பிள்ளையின் தலைச்சொட்டை மதுரையில் மூடப்பட்டது.




கிளர்ந்தெழும் உழவர் சமூகத்தைச் சமாதானப்படுத்தவே இந்த மசோதாவாம். எதனால் கிளர்ந்தெழுகிறார்களென்பதை மந்திரியவர்கள் சற்றேனும் எண்ணிப் பார்த்தாரா? சற்று ஆத்ம சோதனை செய்து பார்த்துக் கொண்டாரானால் அமைதியாக இருந்த மக்களிடையே பகை உணர்ச்சியைத் தூண்டி விட்டது காங்கிரஸ் சர்க்கார் என்பதை அவர் உணர்ந்தே தீருவார். சமுதாயத்தைக் கூறு கூறாகப் பகுத்து ஒரு வர்க்கத்தினருக்கும், மற்றொரு வர்க்கத்தினருக்கும் விரோதம் ஏற்படுத்துவதும், இவர்களில் பெரும்பான்மையான வர்களை ஏமாற்றி வோட்டு வேட்டையாடுவதும் காங்கிரஸ் சர்க்காரின் தேர்தல் ரகசியம். தாங்களாகவே சிருஷ்டித்த பகை என்ற பூதத்துக்கு இந்த நாட்டின் நீண்ட நாளையப் பண்பில் ஊறி வந்த ஒரு வகுப்பினரைப் பலி கொடுக்கும் பயங்கரக் காரியத்தில் காங்கிரஸ் சர்க்கார் முழுமூச்சுடன் இறங்கி விட்டது. நாளுக்கு நாள் அதன் இந்த அசட்டுத் துணிச்சல் வளர்ந்து வருகிறது என்பதற்கு இந்த நில மசோதா ஓர் உதாரணம்.

ஆர்ஜிதம் செய்யப் போகும் உபரி நிலங்களுக்கு இன்றைய விலையும், நிர்ப்பந்தத்தின் மேல் பெறுவதற்காகக் கூடுதலான ஒரு தொகையும் அளிப்பதே சட்டப்படி சரியாகும். ஆனால் ஏதோ கோணல் கணக்குகள் போட்டு 'நஷ்டஈட்டுத் தொகை'யை நிர்ணயிக்கப்போவதாகவும், அதையும் இருபது ஆண்டுகளில் வழங்கப் போவதாகவும் முன்பு சொன்னார்கள். இந்த இருபது ஆண்டுகளில் இன்றைய உரிமையாளர்களின் நிலை எப்படியெல்லாம் மாறிவிடக் கூடும், நாணயத்தின் மதிப்பு எவ்வளவாகக் குறைந்துவிடும் என்பதைச் சற்றும் கருதாமல் முதலில் இந்த ஷரத்தைச் சேர்த்தார்கள். ஆனால் இப்போதோ இந்த 'நஷ்டஈடு' விஷயம் ஒரேயடியாக மழுப்பப்பட்டிருக்கிறது. அதற்கு இனிமேல்தான் விதிகள் செய்யப் போகிறோம் என்கிறார்கள். தங்கள் சொத்துரிமை பறிக்கப்பட்டதுடன், அதற்குரிய 'நஷ்டஈட்டுத் தொகை'யும் இரண்டுங்கெட்டான் நிலைமையில் விடப்பட்டிருக்கும் அவல நிலைக்கு நில உரிமையாளர்கள் ஆளாகியுள்ளனர். புதிதாக இந்த மசோதாவுக்குச் சேர்த்துள்ள இன்

ஒரு அத்தியாயத்தில், ஐந்து ஏக்கரா வுக்கு உபரியாக உள்ள குத்தகைக்காரர் களின் நிலங்களைச் சர்க்காரே குத்த கைக்கு எடுத்துக் கொள்ளும் என்று கண்டிருக்கிறது. குத்தகைக்காரர்களிடம் உச்சவரம்புக்கு (அதாவது ஐந்து ஏக்க ராவுக்கு) உபரியாக உள்ளதைச் சொந் தக்காரர்களுக்கு மீட்டுத் தராமல் சர்க் கார் குத்தகைக்கு எடுத்துக் கொள்வது எந்த நியாயத்தைச் சேர்ந்தது?

இப் புது மாறுதல்களுக்குக் காரணம் தில்லி சர்க்காருக்கும் மேம்பட்ட திட்டக் கமிஷன் என்ற மகா சர்க்கார்தான். பொதுமக்களின் பிரதிநிதித்துவம் பெறாத இந்தக் கமிஷனின் ஆணைகளைச் சிரமேல் தாங்கிப் பணி புரிவதும் அதற்கேற்ப மசோதாக்களுக்கு மாற் றுருவம் தருவதுமே சர்க்காரின் நிலை யாகி விட்டது. ஜனாதிபதியின் அங்கி காரத்துக்கு முன் ராஜ்ய சட்டசபைகள் நிறைவேற்றிய மசோதாக்களைத் திட்டக் கமிஷன் பரிசீலனை செய்து, தனக்கு உசிதமாகப் படவில்லையானால் நிராக ரித்து விடும் என்று அக்கமிஷன் அங்கத் தினரில் ஒருவரான ஸ்ரீமன் நாராயணர் பகிரங்கமாகச் சொல்லி யிருக்கிறார். தாங்கள் இப்படி ஒரு செயலற்ற கைப் பாவையாக ஆடவேண்டி யிருக்கிறதே என்று அவமானப்பட வேண்டிய நமது ரெவினியூ மந்திரி அவர்களோ, "ஆலோ சனை மட்டும் கூறும் குழுதான் திட்டக் கமிஷன். எனினும் அதன் ஆலோச னைகள் எங்களைத் தார்மீக அடிப்படை யில் கட்டுப்படுத்தும்" என்கிறார்.

இன்றைக்கு நில உரிமை விஷயமாகச் சட்டம் வந்தது போல் நாளைக்கு இதர உடைமைகளுக்கும் வரம்பு எதிர்பார்க்க லாம். 'ஒரு கண்ணுக்கு வெண்ணெய்; ஒரு கண்ணுக்குச் சுண்ணாம்பா?' என்று சிலர் வாதம் செய்வதால் 'இல்லை, அப்படியெல்லாம் பட்சபாதம் செய்ய மாட்டோம்; இரண்டு கண்களுக்கும் சுண்ணாம்பை அப்பி விடுகிறோம். இதர உடைமைகளுக்கும் வரம்பு விதிப்பது பற்றி யோசிப்போம்' என்று காங்கிரஸ் தனது தேர்தல் விக்ஞாபனத்தில் கூறி யிருக்கிறது. இன்றைக்குத் தங்களுக்குக் கணிசமான சொத்துக்கள் இல்லையென்ப தால் சொத்துள்ளவர்களின் உரிமை பறிமுதலாவதை வாக்காளர்கள் அநு மதித்து விட்டார்களானால், தாங்களே சர்க்காரின் சொத்தாகிச் செயலற்றுப் போகும் இழிநிலையை அடைவார்கள். சொத்து இல்லையானால், அல்லது உரி மைக்கு நிச்சயமில்லையானால் யாருக்கும் வாழ்க்கை பயனற்றுப் போகும்.

# நன்று நேருஜி, நன்றி!

சென்னைப் பொதுக்கூட்டத்தில் காங் கிரசுக்கும் ஜனநாயகத்துக்கும் எவ்வளவு தூரம் என்பதை எடுத்துக் கூறியதற் காகப் பிரதமமந்திரி ஜவாஹர்லால் நேரு அவர்களுக்கு மனப்பூர்வமான நன்றியறி தலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

'பொதுத் தேர்தல் என்பது ஒரு பெரிய உபத்திரவமாகும். எனக்கு அதைப் பற்றி அக்கறை கிடையாது. என் கவலையெல்லாம் ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றியதுதான்' என்று அந்தப் பொதுக் கூட்டத்தில் சொன் னார் நேருஜி.

உண்மையில் தேர்தலில் நேருஜிக்கு அக்கறையில்லை என்பதை யாராவது நம்புவார்களா? அதற்கு வேண்டிய பணம் திரட்டுவதையும் மற்றக் காரியங் களையும் செய்து கொண்டே வருகிறார். ஆயினும் ஜனநாயக முறையில் அவருக்கு உள்ள நம்பிக்கை குறைந்து வருவதற்கு இந்தப் பேச்சு சான்றாகும்.

ஜனநாயகம் என்பது மக்கள் தாமே தங்களை ஆண்டு கொள்ள உரிமை பெற்றிருக்கும் முறையாகும். எல்லா மக்களும் ஆட்சியில் பங்கு பெற முடி யாது என்பதால் அவர்கள் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அவர்க ளிடம் ஆட்சிப் பொறுப்பை அளிக் கிறார்கள். இதற்குத்தான் பொதுத் தேர்தல்கள் நடக்கின்றன. எனவே தேர்தல் என்பது உபத்திரவம் என்று சொல்வது 'எனக்கு ஜனநாயகத்தில் நம்பிக்கையில்லை' என்று சொல்வதற் குச் சமமே.

'கம்யூனிஸ்ட்களுக்கு ஜனநாயகத்தில் நம்பிக்கை கிடையாது; தாங்கள் என் றென்றும் ஆட்சியில் இருந்து மக்களை எல்லா முறைகளிலும் அடக்கி ஆள வேண்டுமென்பதே அவர்கள் இலட் சியம். எனவே அவர்கள் மக்களின் பொருளாதார வாழ்வு முழுவதையும் கைப்பற்றித் தங்கள் மனம் போனபடி அதை உருவாக்கத் திட்டங்கள் போடு வதிலேயே கண்ணும் கருத்துமாக இருப் பார்கள். இதே செயல் போக்கைத் தான் காங்கிரசும் கையாண்டு வரு கிறது' என்று சுதந்திரக் கட்சி நீண்ட நாட்களாகக் கூறி வருகிறது. அது

பின்னி துணிகள் அணிந்து

# தீபாவளியைக் கொண்டாடுங்கள்

உங்கள் குடும்பத்தினருக்கும் உங்களுக்கும் தீபாவளிக்காக அழகிய பின்னி துணிகள் வாங்குங்கள். குழந்தைகளுக்கு ஏற்ற வண்ணமிக்க கவர்ச்சியான துணிகள்; தரமுயர்ந்த பருத்தி ஷர்ட்டிங்கு, டிரில், டஸ்ஸார் மற்றும் சூட்டிங், பளபளப்பான பட்டுச் சேலைகளும் ஷர்ட்டிங்குகளும். பின்னி துணிகள் எவ்வளவுக் கவ்வளவு கவர்ச்சி யுள்ளனவோ அவ்வளவுக்கவ்வளவு உறுதியும் வாய்ந்தவை. பல்லாண்டுகாலம் நீடித்து உழைத்து உங்களுக்குத் திருப்தியளிப்பவை.

உங்களுக்குத் தேவையான பின்னித்துணிகளை இந்த அடையாளம் காணப்படும் அனுமதிபெற்ற கடைகளிலிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்கவும்.




பக்கிங்ஹாம் & கர்னடிக் கம்பெனி லிமிடெட்
பெங்களூர் உல்லன் காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
உரிமையாளர் : பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

JWT-BY-1497a

எவ்வளவு உண்மை என்பதற்குப் பிரதமர் நற்சான்றிதழ் அளித்து விட்டார்.

'இன்றைய ஜனநாயக முறையில் நாம் அடிக்கடி தேர்தல்களுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது' என்று குறைப்பட்டுக் கொள்கிறார் அவர். எனவே, மீண்டும் ஒரு முறை காங்கிரஸ் பட்டா பெற்று விட்டால் ஜனநாயகத்துக்கு என்னவெல்லாம் இடர்கள் நேருமோ என்பதைக் கருதி, நேருஜி இவ்வளவு வெறுத்துக் கொள்ளும் பொதுத் தேர்தலில் மக்கள் விவேகத்துடன் நடந்து கொள்ள வேண்டும்.

இப்படி விவேகமாக நடக்க வொண்ணாமல் பெரும்பாலோரைத் தடுப்பது அச்சம்தான். காங்கிரஸின் சர்வாதிபத்தியத்தை எதிர்ப்பது சாத்தியமா என்று அவர்கள் கலங்கியிருக்கிறார்கள். இவர்களுக்கு இதே பொதுக் கூட்டத்தில் தெம்பூட்டிப் பேசியிருக்கிறார் நேருஜி. மக்கள் அச்சத்தை உதறித் தள்ள வேண்டியதன் அவசியத்தைத் தமக்கே உரிய உணர்ச்சிப் பரவசத்துடன் எடுத்துரைத்தார். தனியொரு மனிதரான காந்திஜி மக்கள் யாவரும் பிரிட்டிஷ் சர்க்காரிடம் கொண்டிருந்த பீதியை உதறித்தள்ளுமாறு செய்த சரித்திர உண்மையை நினைவுறுத்தினார். அந்தப் பய உணர்ச்சி நீங்கியதால்தான் இந்தியா சுதந்திரமடைந்தது என்று கூறினார். சுதந்திரப் போரைவிடப் பெரிய போரை இப்போது தொடங்கியிருப்பதால் அந்தப் பழைய கால உணர்வின் பொறிகள் இன்னும் நம்மிடம் இருப்பதை நினைவுகொள்ள வேண்டும் என்று கூறினார். மக்கள் பயத்தினின்று விடுதலை பெறுவது சாத்தியமே, அப்படி விடுபட்டு விட்டால் மாபெரும் சாதனைகளையெல்லாம் செய்யலாம் என்று வலியுறுத்திக் கூறிய பிரதமருக்கு மீண்டும் நன்றி செலுத்துகிறோம். காங்கிரஸ் சர்க்காரைக் கண்டு பயப்படுவதை ஒழித்து, சுதந்திரத்துக்கும் நீதிக்கும் அனைவரும் உதவிபுரிவார்களாக!

# யார் பத்தாம்பசலி?

**கா**ங்கிரஸின் தேர்தல் பிரசங்கங்கள் எப்படியிருக்கப் போகின்றன என்பதற்குச் சென்னைக் கடற்கரையில் ஒரு வெள்ளோட்டம் போட்டுக் காட்டி விட்டார் நேருஜி.

மற்றக் கட்சிகளைத் தாக்கிப் பேசுவதில் தம் நேரத்தை வீணாக்கப் போவதில்லை என்று 'பெரும்போக்காக'ச் சொல்லி விட்டு, உடனேயே சுதந்திரக் கட்சியைப் பற்றிக் குற்றச்சாட்டுகளை அள்ளி வீசியிருக்கிறார் பிரதமர். அதோடு, ராஜாஜி உருப்படியாக எதையும் சொல்லாமல் கோபமாகப் பேசி வருகிறார் என்றார் நேருஜி.

தாம் கூறும் ஒவ்வோர் உண்மைக்கும் யாரும் மறுக்க முடியாதபடி காரண காரியங்களைக் காட்டி விளக்குவதில் நிகரற்றவர் ராஜாஜி. தர்மத்தின் அடிப்படையில் உண்மையை நிலை நாட்டும் திறன் படைத்த அவர், யார்மீதும் என்றுமே கோபம் கொள்வதில்லை. அவரது பிரசங்கங்களையும், கட்டுரைகளையும் அக்கறையுடன் கவனித்து வரும் நம் பொதுமக்கள் இதை நன்கு உணர்வார்கள். 'சிறுமை கண்டு பொங்குவாய்' என்ற வாக்குக்கிணங்க வெகு சில சமயங்களிலேயே அவர் கடிந்து பேசியிருக்கிறார். தாம் தோளோடு தோள் நின்று உரமளித்து வளர்த்தவர்களைக் கடிந்து கொள்ள அவருக்கு மனமே வருவதில்லை. "தவறான வழியில் செல்லும் என் சகாக்களையே எதிர்க்கும் இப்போது, இளமையின் சாகஸத் துடிப்போ, வேற்று மனிதர்கள் என்ற வெறுப்போ இல்லை. இந்தப் போர்க்களத்தில் ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும் போதும் உள்ளம் நோகிறது" என்று சமீபத்தில் அவர் எழுதியிருந்ததைப் படித்து உருகிப் போனார்கள் நம் மக்கள். இவ்வளவு பெரிய அன்புத் தியாகத்தை அவர் செய்ய முன்வந்திருப்பது சத்தியத்தையும், தர்மத்தையும் நிலைநாட்டத்தான் என்பதையும் உணர்ந்தவர்கள் நம் மக்கள்.

'திட்டமேகூடாது சர்க்கார் நிர்மாணப் பணி எதுவுமே மேற்கொள்ளக் கூடாது என்பதே சுதந்திரக்கட்சியின் கொள்கை' என்கிறார் பிரதமர். ஒன்று, பகாசுரத் திட்டம், இல்லாவிட்டால் சூனியம்தான் என்ற எண்ணத்தின் பேரிலேயே அவர் பேசியிருக்கிறார். நமது வள வசதிகளுக்கும், பண்புக்கும் உகந்த முறையில் திட்டம் வகுப்பதைச் சுதந்திரக் கட்சி என்றுமே ஆட்சேபித்ததில்லை.

அமெரிக்காவிலும் தனியார் துறைக்குக் கட்டுப்பாடுகள் உண்டு என்று கூறியிருக்கிறார் நேருஜி. அமெரிக்காவின் நிலையும் இந்தியாவின் நிலையும் முற்றிலும் மாறுபட்டவை. அங்கு தனியார் துறை அபரிமிதமாக வலுப் பெற்றதன் பின்னரே கட்டுப்பாடுகள் விதிக்கப்

பட்டன. முதலிலேயே விதித்திருந்தால் இன்று அமெரிக்கா செல்வம் கொழிக்கும் நாடாகவே இருக்க முடியாது. "பல துறைகளில் தாமே பொறுப்பெடுத்துக் கொண்டு செயலாற்றும் வாய்ப்பைத் தனியாருக்கு அளித்துள்ள நாடுகளில் தான் மிகவும் உற்பத்திகரமான பொருளாதாரமும், சிறப்பான வாழ்க்கைத் தரமும் காணப்படுகின்றன. **வளர்ந்தவாக இருந்த அமெரிக்காவில் இது நிரூபணமாகியுள்ளது**" என்று ஓய்வுபெற்ற உலக பாங்கியின் உப தலைவர் 'கார்னர் அவர்கள் சமீபத்தில் கூறியிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இந்தியா பின்பற்ற வேண்டியது பின்தங்கிய நாடுகளின் உதாரணத்தைத் தான். யுத்த கால இன்னல்களுக்கு ஆளாகி முடங்கிப் போன ஜெர்மனியும் ஜப்பானும் சுதந்திரப் பொருளாதாரத்தைக் கைக்கொண்டதால்தான் இன்று சீரும் சிறப்பும் பெற்று வாழ்கின்றன என்பதை நேருஜி மறந்துபோனார் போலும்!

சுதந்திரக் கட்சியின் சுதந்திரப் பொருளாதாரக் கொள்கை காலத்துக்கு ஒவ்வாதது என்கிறார் பிரதமர். காலத்தை ஒட்டிச் செல்லாதவர் நேரு அவர்கள் தான். சோஷலிஸப் படுகுழியில் விழுந்து, பின்னர் தட்டுத் தடுமாறி வெளிவந்து சுதந்திர முறையைப் பின்பற்றும் பல மேலே நாடுகளைக் கண்டும் படிப்பினை பெற அவர் தயாராக இல்லை.

"கடந்த பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக நான் அபிவிருத்தியின் ஆரம்ப தசையிலுள்ள சுமார் ஐம்பது நாடுகளுக்குச் சென்றிருக்கிறேன். இவற்றில் நான் கணிசமான முன்னேற்றத்தைக் கண்டது தனியார் துறையானது வசதிகள் பெற்றிருந்த நாடுகளில்தான்... எனவே, அபிவிருத்தியை நோக்கிச் செல்லும் நாடுகள் சோஷலிஸத்துக்கு மாறுபட்ட முறையைக் கையாள வேண்டும் என்பதே என் யோசனை" என்று ஸ்ரீ கார்னர் அவர்கள் கூறியிருக்கிறார்.

அந்நிய உதவி, சர்க்கார் தொழில், பண வீக்கம், சொத்துரிமைப் பாதுகாப்பு இவை குறித்து இந்த நிபுணர் கூறியிருப்பவை யாவும் நூற்றுக்கு நூறு சுதந்திரக் கட்சியின் கொள்கைகளையே ஆதரிக்கின்றன. பதினைந்து ஆண்டுகள் உலக பாங்கின் உப தலைவராகவும், அகில உலக நிதிக் கமிஷன் தலைவராகவும் பணியாற்றியவர் போற்றும் கருத்துக்களைத்தான் நவீன காலம் கைவிட்ட பத்தாம்பசலித்தனம் என்று நேருஜி கூறுகிறார். உண்மையில் நேருஜியின் சோஷலிஸம்தான் பத்தாம்பசலித்தனம்.

# வரிச்சுமை யாருக்கு?

ஏழைப் பொதுமக்களைப் பாதிக்காதபடி பணக்காரர்களுக்கு மட்டுமே வரி போடுவோம் என்று காங்கிரஸ் சர்க்கார் சொல்கிறது. தமிழ் நாட்டின் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் குறித்து மேல் சபையில் பேசிய உள் துறை அமைச்சர் திரு பக்தவத்ஸலம் அவர்கள் புது தில்லி போதித்திருக்கும் இந்தப் பாடத்தைக் கிளிப் பிள்ளை போல இங்கும் ஒப்பித்திருக்கிறார். மூன்றும் திட்டத்தை நிறைவேற்ற ராஜ்ய சர்க்கார் மேலும் முப்பத்தைந்து கோடி ரூபாய் வரி விதிக்கப் போகிறது என்ற குண்டைத் தூக்கிப் போட்டவர், அதைத் தாங்கக்கூடிய தோள்களின் மீதே இந்த வரிப் பளு சுமத்தப்படும் என்றும் 'ஆறுதல்' கூறியிருக்கிறார்.

ஏழை மக்கள் மீது நேரடியாக வருமான வரியோ, சொத்து வரியோ, தொழில் வரியோ, மரண வரியோ போடவில்லை என்பதால் அவர்கள் வரி செலுத்தவில்லை என்று ஆகாது. பணக்காரர்களுக்கு மட்டும் நேரிடையாக விதிக்கும் வருமான, சொத்து, தொழில் வரி முதலியவற்றைக்கூட இறுதியில் ஏழை மக்கள்தான் தாங்க வேண்டியிருக்கிறது என்பதை மக்கள் புரிந்து கொள்ள வேண்டும். இந்த வரிகளைச் செலுத்தியபின் தங்களுக்கு என்ன மிஞ்சக் கூடும் என்பதையும், தங்களுக்கு எவ்வளவு மிஞ்சவேண்டும் என்பதையும் உற்பத்தியாளர்கள் கணக்கிட்டு விலையையும் அதற்கேற்றபடி அமைக்கிறார்கள் என்பதை மக்கள் உணர வேண்டும். எப்படி மூலதனச் செலவுகள், தேய்மானச் செலவுகள் முதலியவற்றையும் உள்ளடக்கும் முறையில் விலையை நிர்ணயிக்கிறார்களோ அதேபோலவே நேரடி வரிகளையும் உத்தேசமாக மதிப்பிட்டு, அவற்றைச் செலுத்திய பின்னும் தங்கள் பங்கில் இவ்வளவு நிற்க வேண்டும் என்று ஒரு முடிவு செய்து கொண்டு அதற்கேற்பவே முதலாளிகள் விலைகளையும், உற்பத்தியையும் சரி செய்து கொள்ளுகிறார்கள். எனவே, எப்படிப் பார்த்தாலும் பொதுமக்கள்தான் வரிகளினால் கசக்கிப் பிழியப் படுகிறார்கள்.

# வெள்ளத்திஞல் பாதிக்கப்பட்டவர்கள் உங்கள் உதவிகளைக் கோருகின்றனர்



பிரதம மந்திரியின்

# தேசீய நிவாரண நிதிக்கு

தாராளமாக நன்கொடை அளியுங்கள்

நன்கொடைகளை காரியதரிசி, பிரதம மந்திரியின் தேசிய நிவாரண நிதி, பிரதம மந்திரியின் செக்ரடேரியட், தெற்கு பிளாக், புது டில்லி என்ற விலாசத்துக்கு அனுப்பி வையுங்கள். செக்குகளில் "பிரதம மந்திரியின் தேசிய நிவாரண நிதி" என்று எழுத வேண்டும்

# என்ன சேதி?

## பட்சபாதம் வேண்டாம்

சமீபத்தில் மோட்டார் போக்குவரவு பற்றிச் சென்னையில் 'சகாபே' நடத்திய கருத்தரங்கில் பேசிய நேருஜி 'நம் நாட்டில் சாலைப் போக்குவரவும் ரயில் போக்குவரவும் இணக்கமான முறையில் அமைக்கப்பட வேண்டும்' என்று கூறியிருக்கிறார். இவ்வாறு செய்ய வேண்டியது அவருக்கு அடங்கிய மந்திரி சபையின் பொறுப்புத்தான். கடந்த பதினைந்து ஆண்டுகளாக வேண்டுமென்றே இப்பொறுப்பை ஆற்றத் தவறியிருக்கிறது அவரது சர்க்கார். பெரும்பாலும் தனியார் வசமுள்ள சாலைப் போக்குவரவை அலட்சியம் செய்து சர்க்கார் வசமுள்ள ரயில்வேக்களுக்கே கவனம் செலுத்தி வந்திருக்கின்றனர். இந்த நாட்டில் வருஷத்தில் மொத்தச் சரக்குப் போக்குவரவான 32 கோடி டன்களில் ரயில்வேக்களால் 25 கோடி டன்களைத்தான் எடுத்துச் செல்ல முடியும் என்று தீர்மானமாகத் தெரிந்த பின்னும் சாலைப் போக்குவரவுக்கு உரிய இடமளிக்கச் சர்க்காருக்கு மனம் வரவில்லை. மூன்றும் திட்டத்தில் சாலைப் போக்குவரவுக்கு ஆயிரம் கோடி ரூபாய் ஒதுக்கச் சொல்லி மந்திரி சபை கேட்டிருந்தும் முந்நூறு கோடி ரூபாய்தான் வாக்களிக்கப் பட்டிருக்கிறது. ரயில்வேக்களுக்கோ 2,313 கோடி ரூபாய் ஒதுக்கப் போகிறார்கள். இதையெல்லாம் அநுமதித்துள்ள நேரு அவர்கள்தான் இப்போது திடீரென்று ரயில் - சாலை இணக்கம் பற்றிப் பேசியிருக்கிறார்!

சாலைப் போக்குவரவில் ஈடுபட்டுள்ளவர்களுக்குப் பல முனைகளில் பலவித வரிகள் விதிக்கப்பட்டுள்ளன. வியாபார நோக்கத்துடன் செயல்படும் ஒவ்வொரு வண்டியும் ஆண்டொன்றுக்குச் சராசரி 6000 ரூபாய் வரி செலுத்துகிறது என்று மதிப்பீடு செய்திருக்கிறார்கள். எனவே சாலைப் போக்குவரவைச் சீர் செய்வதற்காகச் செய்யும் செலவு விரைவிலேயே வட்டியும் முதலுமாகச் சர்க்காருக்குத் திரும்பக் கிடைத்துவிட வாய்ப்பிருக்கிறது. ஆகையால் இந்தத் துறையில் பாரபட்சம் காட்டாது விரைவில் அபிவிருத்தி ஏற்பட வழி செய்வதே நியாயமாகும்.

## ஊருக்கு உபதேசம்

தேசிய ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவது உள்துறை மந்திரி ஸ்ரீ லால் பகதூர் சாஸ்திரியின் தலையாய கடமையல்லவா? எனவே நாட்டில் ஐக்கியத்தை நிலைநாட்டுவதற்காகப் பல யோசனைகளை அவர் அடுக்கிக் கொண்டு போயிருக்கிறார். அவற்றில் ஒன்று பத்திரிகையாளர்கள் சுதந்திரமாகச் செயலாற்ற வேண்டும் என்பது. மந்திரிகள் உட்பட எந்தக் கோஷ்டியோ, தனி மனிதர்களோ அவர்கள் மீது தங்களது செல்வாக்கைப் பிரயோகிக்க இடமளிக்கக் கூடாது என்று கூறியிருக்கிறார். இதிலிருந்து இந்த நாட்டுப் பத்திரிகைகள் சர்க்காரின் கொள்கைகளை விளம்பரப்படுத்தும் ஒலிபெருக்கிகளாக வேண்டும் என்பதில் மந்திரிமார்கள் எவ்வளவு முனைப்பாக இருக்கிறார்கள் என்பது தெரிகிறது. குறிப்பாகச் சர்க்காரின் சட்டங்கள் செல்லுபடியாகாது என்று கூறித் தள்ளுபடி செய்யும் நீதிமன்றங்களும், அரசாங்கத்தின் கொள்கைகளைக் கண்டித்துக் கூறும் பத்திரிகை உலகமும் பிரதமரின் அதிருப்திக்கு எவ்வளவு தூரம் பாத்திரமாகியுள்ளன என்

பது நாடறிந்த விஷயம். காங்கிரஸ் மந்திரி சபையில் அங்கம் வகிப்பவர்கள் ஞாபகப் பிசகாகக்கூட நேர்மையான விஷயங்களைப் பேசுவதற்கில்லை என்பதை ஸ்ரீ சாஸ்திரி அவர்கள் ஞாபகத்தில் வைத்துக் கொண்டால் நல்லது.

### கலைக் கூட்டத்தின் தலைக் கூட்டம்

சென்ற மாதம் 24-ந் தேதி மாலை மயிலாப்பூரிலுள்ள பேயாழ்வார் மண்டபத்துக்குப் போயிருந்தீர்களானல் உங்களைப் போல் பாக்கியசாலி வேறு யாரும் இல்லை.

சென்னை மாநகரத்திலுள்ள சிற்பக் கலைஞர்கள் அத்தனை பேரையும் அங்கே சந்தித்திருக்கலாம். சிலை, விக்கிரக வார்ப்பு, சிற்பம் ஆகிய கலைத் தொழில்களில் ஈடுபட்டு வரும் ஸ்தபதிகள் யாவரும் சிற்பரத்தினம் திரு கௌரி சங்கர ஸ்தபதியார் தலைமையில் ஒன்றுகூடி ஒரு சங்கம் அமைத்தார்கள்.

சிற்பக் கலையின் கௌரவமும் சிறப்பும் வளர இந்தக் கலைக் கூட்டம் பாடுபடுமென நம்புகிறோம். தலைக் கூட்டம் போலவே இனித் தொடர்ந்து இக்கலைக் கூட்டம் சந்திக்குமென எண்ணி வாழ்த்துகிறோம்.

# புவனேசுவரி ஆலய நிர்மாணம்

சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்

ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச பிரம்மேந்திர ஸரஸ்வதி அவதூத ஸ்வாமிகள் சேலம் ஜில்லா சேந்தமங்கலத்தில் ஸ்ரீ தத்தாத்ரேய ஆலயத்தைப் பிரதிஷ்டை செய்து, தாமும் அங்கு ஜீவன்முக்தர்களாய் விளங்கி வந்தது யாவரும் அறிந்ததே. அப் பெரியோர்களின் குருவும் 'ஜட்ஜ் ஸ்வாமிகள்' எனப் பிரசித்த மடைந்தவருமான ஸ்ரீ ஸதாசிவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தம் அரிய உபதேசங்களால் உலகுக்கு நல் வழி காட்டி வந்தார்கள். இவர்கள் திருக்கானத்தி என்னும் ஊரில் வசித்துவந்த ஸ்ரீ ராமகிருஷ்ணேந்திர ஸரஸ்வதி அவதூத ஸ்வாமிகளின் சிஷ்யராவார்கள். மார்த்தாண்ட பைரவ அரசன் காலத்தில் ஸித்தி அடைந்த இவர்களின் அதிஷ்டானம் புதுக்கோட்டையில் கீழ் ஏழாம் வீதியில் விளங்கி வருகிறது. அந்த அதிஷ்டானத்தைச் சேந்தமங்கலம் சுவாமிகளின் அநுக்கிரகத்துக்கு முக்கிய பாத்திரர்களான ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமி அவர்கள் சிறந்த ஆலயமாக நிர்மாணம் செய்து வருஷந்தோறும் ஆராதனை, உற்சவம் முதலியன நடத்தி வருகிறார்கள். அதோடு அவ்வாலயத்திலேயே ஸ்ரீ புவனேசுவரி தேவியின் பஞ்சலோஹ விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்து அம்பாளை ஆராதித்து வருவது குறிப்பிடத் தக்கது.



மேலும், ஐந்து அடி உயரத்தில் விதிப்படி அமைக்கப் பெற்ற ஸ்ரீ புவனேசுவரி அம்பாளின் சிலா விக்கிரகத்தை வருகிற தை மாதம் முறைப்படி பிரதிஷ்டை செய்யப் போகிறார்கள். அதற்கு வேண்டிய ஆலய நிர்மாணமும் நடந்து வருகிறது.

ஸ்ரீ புவனேசுவரி மந்திரத்தை ஜபிப்பதாலோ பூஜிப்பதாலோ ஸ்ரீ மகாலக்ஷ்மி நிறைந்த ஸ்வர்ணத்தைக் கொண்டு வந்து, பக்தர்களின் பக்கத்தில் நின்று என்ன வேண்டுமெனக் கேட்டு, கோரிய பொருளை அளிக்கிறாள் என்பது ஆதிசங்கரர் வாக்கு. இப்படிப்பட்ட கருணைத் திருவுருவான புவனேசுவரி ஆலயக் கும்பாபிஷேகத்துக்கும், ஆலய நிர்மாணத்துக்கும் பக்தர்கள் பரிபூர்ணமாய் உதவி செய்து ஸ்ரீ அம்பாளின் அருளுக்குப் பாத்திரர்களாகும்படி கோருகிறேன்.

இந்தக் கைங்கர்யத்துக்கு நிதி அனுப்ப வேண்டிய விலாசம்: ஸ்ரீ வைத்தியநாத சாஸ்திரிகள், பி.ஏ.,பி.எல்., அட்வோகேட், அதிஷ்டானக் காரியதரிசி, ஸ்ரீ புவனேசுவரி நகர், புதுக்கோட்டை.

# நான்தான் தெரியல்லியா?

[பிரதமர் நேருவுடன் கட்டை வண்டி காளி முத்து கற்பனை அறிமுகம்]

நேரு அய்யாவுக்கில்ல......வணக்கமுங்க, கும்பிடறேனுங்க.....

நான்தானுங்க, தெரியல்லீங்களா? கட்டை வண்டி காளிமுத்து! அய்யாக்கெல்லாம் நல்லாத் தெரிஞ்சிருக்குமேன்னு இதைச் சொல்ல வந்தேங்க. அய்யா, கோவிச்சுக்கப்படாது!

பீச்சு மீட்டிங்குலே போன ஞாயித்துக் கௌமெ அய்யா பேசறப்போ கட்டெ வண்டிங்களையெல்லாம்ரொம்பத் தாளிச்சுப் பேசிப் பூட்டிங்களாமே! எங்க அண்ணாச்சி வீரப்ப நாடாரு சொன்னாருங்க. ஆமாங்க, வெறகுத் தொட்டி வீரப்ப நாடாருங்கதான். அவரு லாபமில்லாமெ பொய்யெச் சொல்லப்பட்டவரில்லீங்க!

''என்னப்பா, தம்பீ! நேரு சொல்றாரு, கட்டெ வண்டிங்கள்ளாம் ஒளியணும், கட்டெ வண்டி மனப்பான்மையே ஒளியணும்; கட்டெ வண்டிக்குக் காலமில்லே இது. மனுசன் ஆகாசத்திலே பொறண்டுகிட்டு இருக்கிற காலத்திலே, நம்ப சனங்க, இன்னும் கட்டெ வண்டியிலே காலந் தள்றது புடிக்கல்லேன்னு.'' நீங்க சொன்னீங்களாம், அண்ணாச்சி சொன்னாருங்க. அவரு சொன்னதிலேருந்து, நெனெச்சுப்பார்த்தா இந்தக் கட்டெ வண்டிங்கள்ளாம், பளங்காலத்து விசயம்னு சொல்லி, இந்த வண்டிங்களையும் ஒளிச்சுப் புடுவீங்களோன்னு பயமாயிருக்குதுங்க. அப்படி மட்டும் செஞ்சுடாதீங்க. தாள்மையாக் கேட்டுக்கிடறேனுங்க! இந்தக் கட்டெ வண்டி இல்லேன்னா இப்போ இருக்கிற நிலைமையிலே ஒரு மூடை நெல்லு, ஒரு மூடை பயிறு ஒரு எடத்திலேருந்து ஒரு எடம் நவராதுங்க.

நாட்டிலே ஓடுற ரயிலு வண்டிங்க நெலமையைக் கொஞ்சம் பாருங்க. ஏதோ வெள்ளைக்காரன் போட்ட ரயில் பாதையிலே சக்கரம் ஓடிட்டிருக்குங்க. ஒரு மணித் தூத்தல் போட்டுட்டா ரயிலு வண்டி நின்னுடுதுங்க. தஞ்சாவூருலே ஏத்தின சரக்கு மதராசுக்கு வர எட்டு நாளாவுதுங்க. நம்ப கிராண்டிரங்கு எக்சுபிரசுலே வெத்தலைப் பார்சலை ஏத்தினா டெல்லி போறச்செ அது சருவு ஆயிடுதுங்க. கோளி முட்டெயை பம்பாயிக்கு ஏத்தினா பூனா போறதுக்குள்ளே அது கோளிக் குஞ்சா மாறிடுதுங்க. இதை யெல்லாம் பார்த்தோமின்னா கிராண்டு டிராங்கு எக்சுபிரசுக்கு நம்ப கட்டெ வண்டியே மேலுன்னு தோணுதுங்க. வாகின் கெடக்கல்லே. கெடச்சாலும் ஓடறதில்லே! லாரிக்காரங்க படறபாடு எனக்குத் தெரியுமுங்க. ஒரொரு பர்மிட்டுக்கும், ஒரொரு வரி கொடுக்கறதுக்கும் அவங்க பறக்கிற பறப்பு கொஞ்சநஞ்சமில்லேங்க.

இதுக்கெல்லாம் தாக்குப் புடிச்சு, சனங்க பட்டினியாலே சாவாம கொஞ்ச நஞ்சம் காப்பாத்திட்டு வர்றது இந்தக் கட்டெ வண்டி ஒண்ணுதானுங்க. இப்ப இதுக்கு நல்ல ரோடு வேண்டாங்க. சிமிண்டுப் பாதை வேண்டாமுங்க, இதுகதான் இப்பவே இங்கே கெடையாதுங்களே. பெட்ரோலும் வேண்டாங்க. டீசலும் வேண்டாங்க, கொஞ்சம் வக்கலும் போட்டும் போதுங்க. காடு மேடில்லே, கரம்பை மண்ணில்லே, வயல் வரப்பில்லே, ஏத்தம் இறக்கமில்லே எங்கேயும் புகுந்தோடும் எங்க கட்டெ வண்டிக் காளைங்க. ஆனா ஒரு விசயம். எங்க வண்டிக் காளைங்களுக்கு அப்பப்ப ஒரு பாட்டு மட்டும் பாடினா போதுங்க... 'காடு மலே ஏறி நீ போவாயெடா...... என் நல்ல முத்துக் காளைங்களா....ஏய்! ஏய்! ட்ரியோவ்....!' என்று பாட்டுப் படிச்சிட்டாப் போதுங்க. இந்தப் பாட்டிலே ஒரு ரயில் ஓடுமா, ஒரு லாரி ஓடுமா, நீங்க நினெக்கற ராக்கெட்டு பகல்கெட்டுத்தான் ஆகாசத்துலே ஓடுமா? கொஞ்சம் சொல்லுங்க.

ஆமா....ங். கட்டெ வண்டிங்களைக் கண்டபடி கேலி பண்ணிட்டீங்களே, தினம் பேப்பரைப் பாத்திங்கன்னா, 'லாரி மோதிச் சாவு, ரயில் மோதிச் சாவு'ங்கற சேதி வருதே ஒளிய எங்கேயாவது கட்டெ வண்டி மோதிச் சாவுங்கற சேதி ஒண்ணாவது வருதுங்களா?

இது வரையிலே அரசியல் விசயத்திலே நானும் எறங்கல்லே. என் கட்டெ வண்டியும் எறங்கப் போறதில்லேங்க...ஆனாலும் ஒரு சின்ன விசயங்க. தேர்தல்சின்ன விசயங்க. கட்டெ வண்டிங்களை கேலி பண்ணிட்டீங்களே. இந்தக் கட்டெவண்டிக் காளைங்களை காட்டித்தானே சீக்கிரம் வோட்டுக் கேட்க வரப் போறீங்க, வாங்க, வாங்க. வரட்டும், ஒங்க ஆளுக. அப்போ சொல்லிக்கிடறேன்... 'ஏன் ஐயா, வண்டிக் காளையெக் காட்டிட்டு வோட்டுக் கேட்க வர்றீங்க. கட்டெ வண்டியும் காளை மாடும்தான் ஒளியணும்னீங்களே, போங்கையா போங்க. போய் அணுசக்தியிலே ஓடுற வண்டியைக் கொண்டாந்து காட்டுங்க'ன்னு நிச்சயம் சொல்லத்தான் போறேன். இப்படிச் சொன்னா அவங்களுக்குத் தார்க் குச்சி போட்டாப்பிலேதான் இருக்கும். இட்டிக்கிட்டுப் போனா போவட்டும். அதுக்கெல்லாம் பயந்துட்டா அப்புறம் என்ன இருக்குங்க! கட்டெ வண்டியைப் பளிச்சவங்க காளை மாட்டெக் காட்டிப் பல்லே இளிக்கப் படாது. பாருங்க. போய் வரேங்க.

வணக்கமுங்க, ஏய் அய்...! ட்ருவை..இந்தா!-கொக்கி



## அத்தியாயம் இருபத்தொன்பது

அனந்தசாமி உள்ளே போனபோது அருண்குமாரின் குழந்தை பல்லாங்குழி ஆடிக் கொண்டிருந்தான்.

''சாமி, ராத்திரி அப்பாவோட நான் பல்லாங்குழி ஆடினேன்!'' என்று கத்தினான் அனந்தசாமியைப் பார்த்ததும்.

''போடு ராஜா.... இன்னும் ஒரு மாசத்திலே அவரோட ஓடிப் பிடிச்சு விளையாட்டு விளையாடப் போறே!'' என்றார். அவன் திடீரென்று சிரித்தான்.



# அன்பே ஆரமுதே

''என்னடா சிரிக்கிறே?''

''என்னடா தம்பி சிரிக்கிறே?'' என்றாள் சிவபாக்கியம்.

''எனக்கு நடக்கவே முடியலே. ஓடிப் பிடிச்சு விளையாடறதாம்!'' என்று நினைத்து நினைத்துச் சிரித்தான்.

''நீ வாணாப் பாரேன். நான் நீ ஓடற போது சிரிக்கப் போறேன். அன்னிக்கி சிரிச்சியே, இப்ப ஓடறியால்லியான்னு சொல்லிச் சிரிக்கப் போறேன்.''

''நெசம்மா?''

''நெசம்மாத்தான்.''

''வேகமா ஓட முடியுமோ?''

''ம்!''

''ரொம்ப வேகமா?''

''ம்!''

''ரொம்ப ரொம்ப வேகமா?''

''ரொம்பரொம்பவேகமாஓடலாம்.''

''ரொம்ப வேகமா ஓடறப்போ கால் மளக்குன்னு மடக்கிட்டு விழுந்திட்டா?''

''கால் பலமா யிருக்கிறபோது எப்படி மடங்கி விழ முடியும்? முடியவே முடியாது... மான் குட்டி, நாய்க்குட்டியெல்லாம் எவ்வளவு வேகமா ஓடறது! விழறதா!''

''இல்லே''

''பின்னே!''

''பாப்பால்லாம் ஓடறப்போ கீழே விழுந்திடுதே!''

அது சின்னப் பாப்பா — உன் மாதிரி பெரியவனானப்பறம் யாராவது கீழே விழ முடியுமா?''

பையன் எங்கோ பார்த்து யோசித்தான். பத்து விநாடி ஆயிற்று. திரும்பி ''நான் நல்லா ஓடுவேனா?'' என்று கேட்டான் அவன்.

''நல்லா'' என்றார் அவர்.

''அப்படின்னு உங்களுக்கு அப்பாக்கிட்டே சொல்லி நல்ல வேஷம் வாங்கித் தாரேன் — ஈரோ வேஷமா வாங்கித் தாரேன்.''

''போதும், போதும் — வளியாதே.'' சிவபாக்கியம் உருட்டி விழித்தாள்.

''ஏம்மா....சாமியார் வேஷமாக் கொடுக்கிறது பின்னே?''

''சீ, பேசாம இரு..''

அனந்தசாமி அவள் பக்கம் திரும்பி, ''நீங்கள் பேசாமல் இருங்களம்மா. உங்களுக்கு என்ன இப்படிக் கோபம் வருகிறது?'' என்று மெதுவாகச் சொன்னார்.

''பின்னே பாருங்களேன், புத்தி போகிற போக்கை!''

''குழந்தை ஆசைப்படறான், நன்றாகச் சன்மானம் செய்ய வேண்டும் என்று. இதில் என்ன தப்பு? இதைப் பாருடா. எனக்கு ஹீரோ வேஷம் வேண்டாம். சாமியார் வேஷமே வாங்கித் தா. போதும்....ம்.. என்ன?''

''அம்மா தான் வேண்டாங்குதே.''

''அம்மா வேண்டாம்னாலும் நீ வாங்கித்தான் தரணும். தருவியா, என்ன?'' என்றார் அனந்தசாமி.

''சரி.''

''தரேன்னு சொல்லு.''

''தரேன்.''

''இந்தா, இதைச் சாப்பிடு'' என்று சர்க்கரை முத்து நாலைந்தைக் கரண்டியால் அவன் வாயில் போட்டார்.

''வரட்டுமா?''

''இன்னிக்கு ராத்திரி வலிக்குமா?'' என்று கேட்டான்.

''மருந்து உள்ளே பூந்து வேலை செய்யற போது வலிக்கும். வலிக்க வலிக்க நல்லது....''

பையன் மறுபடியும் யோசித்தான்.

''உங்களுக்குப் பல்லாங்குழி ஆடத் தெரியுமா?''

''உன் மாதிரி சின்னப் பையனா இருக்கிற போது ஆடியிருக்கேன். இப்ப மறந்து போச்சு.''

''நான் சொல்லிக் கொடுக்கட்டாங்?''

''சரி'' என்று அவனைச் சமாதானப்படுத்துவதற்காக உட்கார்ந்து கொண்டார் அனந்தசாமி. கால் மரத்துப் போன அளவிக்குக் கையில் கருக்கும்லாக வழும் அசாத்தியமாக ஏறியிருந்தன.

குழந்தைக்கு. விளையாடிக் கொண்டே வந்தவன் காசி பொத்திச் சிரித்தான்.

''என்னடா?'' என்றார்.




''நீங்க எண்ணும உட்கார்ந்திருக்கீங்க. இப்ப நான்கூட ரண்டு சோழியையும் ஒரே குளியிலே போட்டுக் காசி பொத்தினேன். நீங்க பார்க்கலே. சரி, போனால் போவுது. நீங்க சரியாக் கவனிக்கிறீங்களான்னு பார்த்தேன்'' என்று

தன் வெற்றியை ரத்து செய்து விட்டு அவரை ஆடச் சொன்னான்.

''ஏ, அப்பா, பொல்லாத ஆளா யிருக்கியே!''

''நீங்க பராக்குப் பார்த்தா, எதிர்க் கட்சிக்காரன் மோசம் பண்ணிடுவான் சாமி. அதுக்குத்தான் வேடிக்கை பண் ணினேன்.''

அரை மணி கழித்துத்தான் விட்டான் அவன்.

''நான் வரட்டுமா?'' என்றார் அவர்.

''ம்.''

''உனக்கு எந்த சாமி, பிடிக்கும்? முருகனா, பிள்ளையாரா?''

''எனக்குக் கிருஷ்ணன்தான் பிடிக் கும்'' என்றாள்.

''அப்படின்னா, கிருஷ்ணா, கிருஷ்ணா என்று சொல்லிக்கிட்டே இரு. சீக்கிரம் நீ எழுந்து நடக்கலாம்'' என்றார்.

வெளியே வந்ததும் அவரை உட்கார வைத்துக் காப்பியைக் கொடுத்தாள் சிவபாக்கியம்.

''நான் வரும்போதெல்லாம் இப்படி உபசாரம் பண்ண வேண்டும் என்று அவசியமில்லையம்மா. இது எதற்கு இப் பொழுது?''

''உங்களைப் போலொத்தவங்க சாப் பிட்டா, எங்களுக்கு நல்லது. நான் கறி காயைத் தவிர ஒண்ணும் தொடமாட் டேன். இங்கே எனக்கு, குழந்தைக் கெல்லாம் நான்தான் சமைப்பேன். அது வும் குளிக்காம உலை வைக்க மாட்டேன். வர்றவங்க, போறவங்க இங்கறதுக்கு, இதோ, அதோ மூலையிலே ஆள்காரன் ஆக்கறான். நாலு காலி, ரண்டு காலி யெல்லாம் போட்டு. இங்கே அதெல் லாம் வாடைகூட அடிக்க வேணாம்னு தான் இந்தச் சன்னக் கதவெல்லாம் சாத்தி யிருக்கேன். இறக்கிறதே கிடை யாது. நீங்களே பாருங்களேன், தாம்ப் பாள்ளாம், திறக்காமலேயே புடிச்சிக்கிட் டிருக்கிறதை.''

''நான் அதுக்காகச் சொல்லவில்லை, அம்மா!''

''என்னமோ, நீங்க இங்கே வந்தா, கொடுச்சா வாணாம்னு சொல்லப் படாது.''

காப்பி நன்றாகத் தானிருந்தது. காசி லிங்கத்தை நினைக்கும் போது அவர் நெஞ்சு தடுத்தது. நாய் விற்ற காசு குரைக்கும் என்றுதான் அவருடைய சித் தாந்தம். டொக்கியின் நினைவு வந்தது அவருக்கு. எல்லாவற்றையும் சொல்லி விடலாமா என்றுகூட மனம் துடித்தது. சற்று யோசித்து. ''உங்கள் புருஷன் வந்தால் நான் வந்து விட்டுப் போனேன் என்று சொல்லுங்கள்'' என்றார்.

''நேத்திக்கூட உங்களைப் பத்திப் பேசிக்கிட்டிருந்தாங்க.''

''என்ன?''

''சாதாரணமாகத்தான் உங்களைக் கண்டா பயமாயிருக்காம் அவங் களுக்கு.''

''ஐயையோ, என்னைக் கண்டு என்ன பயம்?''

''நான் கூடக் கேட்டேன். எனக்குப் பயமாயில்லையே, உங்களுக்கு என்ன பயம் என்று.''

''ம், என்ன சொன்னார்?''

''நீ சாது, யாருக்கும் பயப்பட வேண் டியதில்லேன்னாங்க.''

''அட, ராமா! அவரும் என்னைக் கண்டு பயப்பட வேண்டாம்னு சொல் லும்மா. எப்பொழுது சொன்னார்?'' என்று தற்செயலாகக் கேட்பது போல் கேட்டார் அனந்தசாமி.

''நேத்து டிபன் சாப்பிடறப்ப.''

டொக்கியின் வீட்டில் அவர் இருந்த பொழுதுதான் பங்காரு வந்தான். ரங் கன் அவனைத் திருப்பி அனுப்பினான்.

உள்ளே வந்து உடனே வெளியே கால் வைத்த தன்னைப் பார்த்திருப் பானோ, அதைக் காசியிடம் சொல்லி யிருப்பானோ என்ற சந்தேகத்தில் 'எப் பொழுது' என்று கேட்டு வைத்தார் அவர். தம்மைக் கண்டு பயப்படுவதாக நேற்று சாயங்காலம் சொன்னாலும் அவன். பங்காரு தன்னைப் பார்த்தானோ, இல்லையா என்ற சந்தேகம் தீராமலே நின்றது. விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தார் அவர்.

* * *

**வ**ந்தவர் மந்தைவெளியை நோக்கி நடந்தார். டொக்கி வீட்டினுள்ளே அனந்தசாமி நுழைந்து படுக்கையில் உட் கார்ந்திருந்த தாயாருக்கு மருந்தைக் கொடுத்தார். டொக்கி, அவன் தகப்ப னார் – இருவருமே வீட்டில் இல்லை. டொக்கியை அழைத்துக் கொண்டு நட்டுவனார் வீட்டுக்குப் போயிருந்தா ராம் ராஜாங்கமய்யர். ரங்கன் பிற்பகல் வந்துவிட்டுப் போனானாம்.

வேறு யாரோ பையன் உட்கார்ந்து கொண்டிருந்தான். அந்த அம்மாளுக்கு ஒன்றுவிட்ட அத்தையின் பிள்ளையாம். உடல் நிலை சரியில்லாத அம்மங்காளைப் பார்த்துப் போக மண்ணடியிலிருந்து வந்திருந்தானாம்.

''ரங்கனை ஜாக்கிரதையாகப் பார்த் துக் கொள்ளுங்கள்'' என்று மீண்டும் அவர் காதில் கேட்டது. அவன் விலா சம்கூடக் கொடுத்திருந்தான். மந்தை வெளியிலிருந்து செயிண்ட் மேரி சாலை யோடு நடந்து போனால் மேற்குக்கோடிக் குத் தெற்கே எழுந்துள்ள புது வீடுகளில் ஒன்றும் அவன் வீடு. அவன் தகப்பனார்

## இருமல் மற்றும் ஜலதோஷத்திலிருந்து பூர்ண நிவாரணம் பெற





# ஸிரோலின் 'ரோஷ்' அருந்துங்கள்




இருமல் அல்லது ஜலதோஷமிருந்தால் அசட்டை செய்யாதீர்கள்—ஸிரோலின் அருந்தி அபாயமின்றி துரிதமாக பூர்ண நிவாரணம் பெறுங்கள். ஸிரோலின் இருமலை நிறுத்துவதோடு மட்டுமல்லாமல் இருமலை உண்டுபண்ணும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது. ஸிரோலின் தொண்டைப் புண்களுக்கு சமனமூட்டுகிறது; கபம் மற்றும் சளியை போக்குகிறது. அது எவ்வளவு கடுமையான இருமலிலிருந்தும் அபாயமின்றி துரிதமாக நிவாரணமளிக்கிறது. அபாயமற்ற, நிவாரணமளிக்கும் தன்மையையும் மற்றும் இனிய ருசியையும் ஸிரோலின் பெற்றிருப்பதால் குடும்பத்திலுள்ள அனைவரும் அதைப்பெரிதும் விரும்புகிறார்கள். ஸிரோலின் என்றால் குழந்தைகளுக்கு ஒரே குஷி!

**உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஸிரோலின் வைத்திருங்கள்**

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்:
வால்டாஸ் லிமிடெட்

கட்டியிருக்கிறாராம். வீட்டை விசாரித்துக் கண்டு பிடிக்கவே முக்கால் மணி நேரம் கழிந்தது. எல்லாம் புதிய வீடுகள்; புதுப் புது மோஸ்தரில் கட்டியிருந்த வீடுகள். மனை விற்கும் விலையில் அறுபதாயிரம், லட்சத்துக்கு மேல் பெறும் வீடுகள். ரங்கன் நல்ல வசதியுள்ளவன் என்றுதான் தோன்றியது.

காசிலிங்கத்தின் வீட்டைப் போல் அவ்வளவு பெரியதில்லை. அதில் பாதி இருக்கும். கேட்டிலிருந்து வாசல் முகப்பை அடையக்கூட அந்த வீட்டு நடையில் பாதிக்குக் குறைவாகவே இருந்தது. வாசலில் ஓர் அம்மாள் – ரங்கன் தாயார் போலிருந்தது – படிக்கட்டிலேயே உட்கார்ந்திருந்தாள்.

''ரங்கன் இருக்கிறாரா?''

''யாரு?''

''ரங்கன் சார் இருக்கிறாரா?''

''நீங்க யாரு?''

''இல்லையா?''

''நீங்க யாரு?''

''அவர் சிநேகிதன்.''

''எங்கேயிருந்து வருகிறீர்களோ?''

''ராயப் பேட்டையிலிருந்து.''

''என்ன விசேஷம்?''

''சும்மாத்தான் பார்க்கணும்.''

''கடை விஷயமாவா?''

''இல்லே, இல்லே. சாதாரணமாகத்தான். அவர் இல்லையா?''

''என்ன விசேஷம்னு சொல்லப்படாதோ?''

''சாதாரணமாத்தாம்மா. சிநேகிதர்களைப் பார்க்கிற ஆசைதான்.''

''நீங்க முன்னாலே இங்கே வந்ததே இல்லையேன்னு சொன்னேன்.''

''புதிதுதான்.''

''அதுதானே பார்த்தேன்.''

அவன் இருக்கிறானா இல்லையா என்ற செய்தி இன்னும் கிடைக்கவில்லை. இலேசில் வாங்க முடியாது போலிருந்தது. அவர் அனுபவப்பட்ட சில பெரிய மனிதர் வீட்டுப் பெண் பிள்ளைகளின் நினைவு வந்தது அவருக்கு. வாசலிலிருந்து அருகே வரும் வரை முகத்தில் எந்த உணர்ச்சியுமில்லாமல் பார்த்துக் கொண்டிருப்பார்கள். சிரித்தால்கூடப் பதிலுக்குப் புன்சிரிப்புக்கூட வராது. அவர் இருக்கிறாரா என்று இரண்டு தடவை கேட்ட பிறகு தெரியாதே அல்லது இல்லையே என்ற பதில் வரும். அவ்வளவு மோசமாக இல்லை இது. இந்த அம்மாள் வாய் வார்த்தையாகப் பேசவாவது பேசுகிறாள்...ஆனால் ரங்கன் இருக்கிறானா, இல்லையா?

''உங்களுக்கு மெட்ராஸ்தானே?'' என்றாள் கிழவி. வயதான சரீரம். வயது கிட்டத்தட்ட ஐம்பத்தைந்து அறுபதிருக்கும். காதில் சிவப்பு ஓலை. மேலெல்லாம் நகைகள். நீண்ட முகம். கூந்தல் சின்னக் கொழிஞ்சிப் பிஞ்சு அளவுக்கு உரிய இடத்துக்கு மூன்று அங்குலம் மேலே முடிந்திருந்தது.

''மெட்ராஸ்தான்.''

''எப்ப இருந்து பழக்கம் ரங்கனோ?''

''கொஞ்ச நாட்களாக.''

''என்ன பண்ணிண்டிருக்கிறீர்கள்?''

''வைத்தியம்.''

''வைத்தியமா? நாட்டு வைத்தியமா....?''

''எல்லாம்தான்.''

''ரங்கன் மருந்து கிருந்து சாப்பிடுறானே?''

''அதெல்லாம் இல்லே.''

''அலையா அலையறான், வாயிலே ஈ பூந்தது தெரியாமே. உஷ்ணமாப்போய் விடும்டான்னு சொன்னா கேட்டாத்தானே! ம்...உங்ககிட்டேதான் மருந்து சாப்பிடலேங்கிறேனே.''

அவரைப் பார்த்ததிலிருந்து அப்பால் இப்பால் திரும்பவில்லை அம்மாள். அவரையே உச்சந் தலையிலிருந்து கால்வரையில் துருவித் துருவிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''அவர் வந்தால் சொல்லுங்கள், அனந்தசாமி வந்தான் என்று.''

''யாருன்னு சொல்றது?''

''அனந்தசாமின்னு.''

''சித்தே இருங்கோ. உள்ளே இருக்கானான்னு பார்த்துட்டு வரேன்'' என்று எழுந்தாள் அம்மாள்.

''இருக்கிறாரா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார் அவர்.

''அதுதான் பார்த்துட்டு வரேன்'' என்று உள்ளே போனாள் கிழவி.

ஒரு நிமிஷத்துக்கெல்லாம் தேங்காய்ப் பூத் துவாலையை இடையில் கட்டி,

ஏழைகளுக்கு நன்மை செய்ய வேண்டுமானால் விவசாயத்தை நடத்தும் திறமையும் பொருள் வசதியும் இல்லாத மக்களுக்கு நிலத்தைப் பங்கிடு செய்து கொடுப்பதில் பயனில்லை. நாடு முழுதும் தொழில் அபிவிருத்தி அடைவதற்கு வழி தேட வேண்டும். மக்களின் உழைப்பைப் பயன்படுத்திக் கொள்வதற்கு அநேக வழிகள் உண்டு. அந்த வழிகளைக் கையாளாமல் சீக்கிரம் வேலை முடிய வேண்டும் என்று யந்திரங்களைப் பயன்படுத்தி, உழைக்கக் கூடிய மக்களுக்கு வேலையில்லாமல் செய்து விட்டு, நாட்டின் விவசாயத்தையும் பாழ்படுத்துவது சரியல்ல.

–ராஜாஜி

குளித்துத் துவட்டிய தலையில் மயிர் முன்னால் விழ அவசரம் அவசரமாக ஓடி வந்தான் ரங்கன்.

''அடெடெடே, நீங்களா! வாருங்கள், வாருங்கள்! உட்காரக் கூடாதோ? இப்பொழுதுதான் வருகிறீர்களா? போன் பண்ணினால் நான் ஓடி வந்திருப்பேனே. வாருங்கள்'' என்று சந்தோஷ மிகுதியில் படபடத்துக் கொண்டே அவரை அழைத்துக் கொண்டு மாடிக்குப் போனான். ஓர் அறையில் சோபாவில் உட்கார வைத்தான்.

''இருங்கள். இதோ வந்து விடுகிறேன்'' என்று வெளியே போனான்.

அனந்தசாமியின் தீர்மானமெல்லாம் கழன்று விடும் போலிருந்தது. அவனை என்னென்னவோ பட்டவர்த்தனமாகக் கேட்க வேண்டும் என்று துணிந்தவருக்கு அவனுடைய சந்தோஷத்தையும், உபசாரத்தையும் பார்க்கும் பொழுது, வாய் விட்டுத் தமக்குப் பேச முடியுமா என்ற சந்தேகம் வந்து விட்டது. புருவமத்தியை விரலால் கிள்ளியவாறு உட்கார்ந்திருந்தார்.

சீக்கிரமே வந்து விட்டான் ரங்கன், வேஷ்டியும், ஜிப்பாவுமாக. இலேசாகச் சந்தன வாசனை கமழ்ந்தது. ஆள் அழகாகத்தான் இருக்கிறான். கையில் கொண்டு வந்த சர்பத்தை அவரிடம் நீட்டினான். உட்கார்ந்து விட்டான்.

''எங்கிருந்து வருகிறீர்கள்?''

''அங்கிருந்துதான்.''

''ராஜாங்கமய்யர் வீட்டிலிருந்தா?''

''ஆமாம்.''

''நான் மத்தியானம் போய் வந்தேன். மறுபடியும் போகப்போகிறேன்!''

''நான் அவரைப் பார்க்கவில்லை. நட்டுவனார் வீட்டுக்குப் போயிருக்கிறாராம், பெண்ணோடு.''

''ஓகோ .........அப்பாவோடுதானே போயிருக்கிறாள்?''

''அந்த அம்மாள் அப்படித்தான் சொன்னாள்!''

''அப்படியென்றால்?''

''நான் அவர்கள் போனதைப் பார்க்கவில்லை. அந்த அம்மாள் சொன்னதைச் சொல்கிறேன்.''

ரங்கன் சிரித்தான். ''நீங்கள் உள்ளதை உள்ளபடி சொல்கிறீர்கள்..... எனக்கு உடனே கிலி பிடித்து விடுகிறது. ம்.....அந்த அம்மாள் வேறு ஒன்றும் சொல்லவில்லையா?''

''இல்லை. வேறு யாரோ உறவுக்காரப் பையன் வந்து பேசிக் கொண்டிருந்தான். நான் வந்து விட்டேன்.''

''உறவுக்காரப் பையனா? யாரு?''

''அத்தை பிள்ளையாம். மண்ணடியில் இருக்கிறானாம்.''

''கறுப்பாக, ரோல்ட் கோல்ட் ப்ரேம் போட்ட மூக்குக் கண்ணாடி போட்டிருப்பானே, முழுக்கைச் சட்டையோடு.''

''அவன்தான்.''

ரங்கன் புன்சிரிப்புச் சிரித்தான்.

''என்ன?'' என்றார் அனந்தசாமி.

''அவனை ஐந்தாறு நாட்களுக்கு முன்னால் அருண்குமார் வீட்டில் பார்த்தேன். அதற்கு முன்னால் இரண்டு தடவை டொக்கி வீட்டில் அவனைப் பார்த்திருக்கிறேன்.''

''அதனால் என்ன?''

''ஒன்றுமில்லை. நீங்கள் கொடுத்த புத்தகத்தை வாசித்து முடித்து விட்டேன். அதோ இருக்கிறது, பாருங்கள்.''

அனந்தசாமி மேஜையைப்பார்த்தார்.

''அதற்குள்ளாகவா?''

''முந்நூறு பக்கம்தானே? ராத்திரி மூன்று மணிக்கு முடித்து விட்டேன்.''

''எப்படியிருந்தது?''

''உங்கள் மாதிரியிருந்தது.''

''என்ன?''

''நல்ல சமயத்துக்கு வந்தது என்கிறேன்....''

''எப்படி?''

''நான் நேற்றுப் பகலிலிருந்து சந்தேகத்திலும் சஞ்சலத்திலும் உழன்று கொண்டிருந்தேன். இப்பொழுது எல்லாவற்றையும் தீர்த்து விட்டது.''

''என்ன சந்தேகம்? என்ன சஞ்சலம்?''

''அப்பாவும் அம்மாவும் எனக்குக் கலியாணத்தைப் பண்ணிவிட வேண்டும் என்று துடிக்கிறார்கள். அப்பா, இதோடு வந்திருக்கிற பெண்களின் ஜாதகங்களுக்கு ஒரு தனி 'பைலே' திறந்து விட்டார். ஜாதகங்கள் நூறு எண்ணிக்கையைத் தாண்டி விட்டது. நான் வேண்டாம் வேண்டாம் என்று சொல்லிக் கொண்டு வந்தேன். ஒரு மாசத்துக்கு முன்னால் டொக்கியைத்தான் கல்யாணம் செய்து கொள்வது என்று முடிவு செய்து விட்டேன். நேற்று அந்தச் செய்தியைக் கேட்டதும் ஓங்கி மண்டையில் அடித்தாற் போலிருந்தது. அதிர்ந்து போய் விட்டேன். ஆனால் ராத்திரி இந்தப் புத்தகத்தைப் படித்த பிறகு என்னுடைய முடிவு உறுதிப்பட்டு விட்டது!''

அதைக் கேட்டதும் அனந்தசாமிக்கு அவன் நேற்று அடைந்த அதிர்ச்சியிலும் பெரிய அதிர்ச்சி ஒன்று மார்பின் மீது முட்டிற்று. இடிந்து போனாற் போல் ஒரு நிமிஷம் உட்கார்ந்து விட்டார் அனந்தசாமி. (தொடரும்)

# அருவிக்கரைப் பயணம்

**பூர்ணம் விசுவநாதன்**

காட்சி 1

[மாஜிஸ்ட்ரேட் சண்முகம் பிள்ளை, 'இந்தா அந்தா' என்று ஏகப்பட்ட நாட்கள் யோசித்து ஒரு 'ஸெகண்ட் ஹாண்ட்' கார் வாங்கி விட்டார். பழைய எஜமானைப் பிரிய மனமில்லாமல் டிரைவர் சிவலிங்கமும் சண்முகம் பிள்ளையிடம் காரோடு வந்து சேர்ந்து விட்டான். இப்போது ஒரு வாரமாக, மாஜிஸ்ட்ரேட் காரில்தான் ஆபீசுக்குப் போய் வருகிறார்....

பலவிதமான சத்தங்களுடன் கார் வந்து வாசலில் நிற்கிறது. சண்முகம்பிள்ளை கம்பீரமாக இறங்கி வருகிறார். மனைவி மரகதமும், மூத்த மகள் ராசாத்தியும், பெரிய மகன் ரங்கனும், சின்ன மகன் கணபதியும், கடைக்குட்டி சின்னியும் ஒரு பரிவாரமாக அவரை எதிர் கொண்டழைத்து உள்ளே அழைத்து வருகிறார்கள். பிள்ளைவாள் உள்ளே வந்து பொத்தென்று ஒரு சோபாவில் உட்காருகிறார். தவசிப்பிள்ளை சபாபதி தயாராயிருந்து கொண்டு வந்து கொடுக்கும் பானைத் தண்ணீரை ஒரு மடக்கில் குடித்து விட்டுச் சண்முகம் பிள்ளை பெருமூச்சு விடுகிறார்.]

சண்முகம்: ஏ, அப்பா, ஊருநான் நாளுக்கு நாள் எவ்வளவு சூடாயிக்கிட்டு வருது!...சே, கார்லேதான் வர்றேன், அப்படியிருந்தும் தாங்கலே சூடு...உஸ்ஸ்ஸ்ஸ்ஸப்பா!

மரகதம் (மகளிடம்): ஏ, ராசாத்தி, அந்த விசிறியைத் தட்டி விடும்மா;அப்பா இப்பிடிக் களைச்சிப் போய் வந்திருக்காங்க, கம்மா நிக்கறியே! (ராசாத்தி ஓடிப் போய் விசிறி ஸ்விட்சைப் போடுகிறாள்) கார் சவாரி எப்படியிருந்திச்சு?......

சண்: கார் சவாரிக்கென்ன அருமையாயிருக்குது. ஒரு வாரமாகப் போய் வந்துக்கிட்டிருக்கேனே! நல்லாத்தான் இருக்குது... (சற்றுத் தாமதித்து) ஆனால் சத்தம்தான் கடாமுடான்னு ரொம்பப் போடுது. ரொம்ப!

ராசாத்தி: அதுக்கென்ன எண்ணெய் போட்டுட்டா சரியாப் போகுது.

சண்: சத்தம் ஒரு இடத்துலேயிருந்து வந்தா அங்கே மட்டும் நாலு சொட்டு எண்ணெயைப் போட்டுட்டுக் கவலையற்று இருக்கலாம். இது கார் பூராவும் சேந்துல்லே கூச்சல் போடுது!

கணபதி (வெடுக்கென்று): அப்ப, ஒரு கொடம் எண்ணெயைத் தூக்கிக் கார் பூராவும் ஊத்திட வேண்டியதுதான்.

(எல்லாரும் சிரிக்கிறார்கள்)

சண்: ஊத்து! ஊத்துடா அப்படியே! காருக்குள்ளே கூட எண்ணெயை ஊத்து.. நான் 'ட்ரெஸ்' அழுக்காகி விடக்கூடாதுங்கறதுக்காக நடந்தே கோர்ட்டுக்குப் போயிட்டு வர்றேன். சரிதானே! (எல்லாரும் சிரிக்கிறார்கள்) பரீட்சையிலே இப்படி எழுதித் தான் செப்பிடு வித்தைககாரன் மாதிரி வளையம் வளையமா டஜன் கணக்கிலே கழியை வாங்கிக்கிட்டு வர்றே...(கணபதியின் சிரிப்பு மட்டும் அடங்கிப் போய் விடுகிறது) யோசனை சொல்றுரு, யோசனே!

கண: என்னப்பா, விளையாட்டுக்குச் சொன்னு, சம்பந்தமில்லாத விஷயத்தையெல்லாம் இழுக்கிறீங்க!

மர: கணபதி, வாயை மூடிக்க! அப்பா களைச்சுப் போய் வந்திருக்காங்க. வம்பு பேச இதுவா நேரம்?

[தவசிப்பிள்ளை காப்பி கொண்டு வந்து கொடுக்கிறான். சண்முகம்பிள்ளை அதை வாங்கி மளமள வென்று குடிக்கிறார்]

சண்முகம் (நாக்கை ஒரு தடவை சப்புக் கொட்டிக் கொண்டு): அப்பாடா, இந்த ஒரு டம்ளர் ஊத்திறைத்தான் உடம்பிலே விறுவிறுப்பு வருது. நீங்கள்ளாம் காப்பி சாப்பிட்டீங்களா?

மர: ஓ, அப்பவே!

ராசா (மரகதத்திடம் ஜாடை காட்டி): அம்மா, அதைச் சொல்லும்மா அப்பாகிட்டே......

சண்முகம் (அன்பு பொங்க): எதை ராசாத்தி? நீதான் சொல்லேன். சினிமாவா?

மர: சினிமா இல்லே...அவுங்களுக்கெல்லாம் 'பிக்நிக்கு' போகணுமாம். புதுக் கார்லே!

சண் (வெடுக்கென்று): எவன் சொன்னது?

மரகதம் (தயக்கத்துடன்): உம், எல்லாம் தான் சொல்லுதுக.

சண்: எவன் சொன்னது புதுக் காருன்னு? இதைப் புதுக் காருன்னு கூப்பிட்ட காலம் பழைய காலமாப் போயி எத்தனையோ காலமாப் போச்சன்னேன்!

(எல்லாரும் சிரிக்கிறார்கள்)

ராசாத்தி (மரகதத்திடம்): அம்மா, கேளம்மா! அப்பா பேச்சை மாத்தறுங்க.

மர: கொளந்தைங்க ஆசைப்படுது. எங்கேயாவது பிக்நிக்குப் போகணும்னு. சரியாப் பதில் சொல்லுங்க.

சண்: அதற்கெல்லாம் என்ன அவசரம்? இன்னும் அந்தக் கார் நம்மகிட்டே சரியாப் பழகலியே! கொஞ்ச நாள் போகட்டுமே!

மர: கொஞ்ச நாள் போறு ரொம்பப் பளிடப் போகுது. (எல்லாரும் சிரிக்கிறார்கள்) கொழந்தைங்க ஆசையைத்தான் கெடுப்பானேன்? நாளைக்கோ ஞாயிற்றுக்கௌமையா இருக்குது. போயிட்டு வரலாம்.

சண்: நீங்களே முடிவு பண்ணிட்டீங்களா? என்னைக் கேக்க வாணும் போலிருக்குது.

ரங்கன்: ஓங்களைத்தான் கேக்கறுமே இப்ப! சரின்னு சொல்லுங்கப்பா ...... ஜாலியாப் போயிட்டு வரலாம்.

ராசா: அப்பா, மாட்டேன்ராதீக. ஆமாம்!

கண: நாளைக்கே போகணும்பா, ஆமாம்..

சின்னி: அப்பா, நீ வராட்டி ஒன்னே உட்டுட்டு ஓடிருவோம் நாங்க மட்டும்.

சண்: ஏதேது, குடி படைக எல்லாம் ஒரே வடியாக் கௌர்ச்சியே பண்ண ஆரம்பிச்சிட்டாங்களே! இனி தப்பிக்க முடியாதுன்னுல்லா தோணுது!

மர: நாளைக்கு ஒரு நா ஓங்களுக்கும் நிம்மதி இருக்கட்டும். சொந்தக் கார் வாங்கி இவ்வளவு நாளாகுது. கொளந்தைகளுக்கு ஒரு வாட்டி கூட....

சண்: சரியம்மா சரி... நானே போயிருவம். ஆறு எங்கே போகிறது?

ராசா: அதெல்லாம் நாங்க மொதல்லே தீர்மானிச்சிட்டோம்...

ரங்கன்: நேரா அருவிக்கரைக்குப் போயி நாள் பூரா அங்கனவே சுத்திக்கிட்டிருந்துட்டுப் பொழுது சாய ஊடு திரும்ப வேண்டியது. ஆமாம்.

சண்: ஙிஹி....எனக்கு இந்த ஊரில அருவிக் கரை எங்கே இருக்குதுன்னே தெரியாது.. முன்னே பின்னே போயிருந்தால்ல....

ரங்: எங்களுக்கு மட்டும் தெரியும்னு நெனெச்சியளா? நாங்களும் விசாரிச்சு வச்சது தான்... மொதலியார் மாமா சொன்னாக....



சண்: எப்படி இருந்தா என்ன? நானே அருவிக் கரை பிக்னிக்.... அவ்வளவுதானே.

மர: அதிகாலையில் எல்லாரும் எழுந்திருச்சி குளிச்சி தெளி முடிச்சி ஏழு மணிக்குள்ளார பொறப்பிட்டிற வேண்டியது.

சண்: குளி தெளி இங்ஙன வச்சிக்கிட்டா பெறகு கௌம்பிறப்பலேதான் போ....அது தான் அருவிக்கரைக்குப் போறமே, இங்ஙனே ஒரு தனிக் குளி எதுக்குங்கேன்...?

மர: அதுவும் சரிதான்... அப்ப இன்னும் வெள்ளனவே கௌம்பிட முடியும். நீங்க மட்டும் கொஞ்சம் அந்தத் தவசிமையும், டிரைவரையும் கூப்பிட்டுச் சொல்லிருங்க... நாங்க சொன்னு....

ராசா: அதுவும் அந்த டிரைவர் சிவலிங்கம் ஒரு மாதிரி ஆளா....

சண்: அட அவன் வந்து ஒரு வாரம்தானே ஆகுது! எல்லாம் பளகப் பளகச் சரியாயிடும். ரெண்டு பேர்கிட்டேயும் நானே சொல்லி விடறேன்....

மர: தவசிமையும் கூடக் கூட்டிக்கிட்டுப் போறதாச் சொன்னு எல்லாப் பலகாரமும் சரியாச் செய்து கொண்டாருவான்...

சண்: அவனும் வரணுமே...வராட்டி நமக்குக் கௌரவமா இருக்குமா? எல்லாம் நான் சொல்லிச் சரிப்படுத்திர்றேன்...சரிசரி, இப்பக் கூட்டத்தைக் கலைச்சிருவோம்...... போலீசு பார்த்தா எங்கிட்டக் கூடகேக்காம கண்ணீர்ப் பொகையை அள்ளி விட்டுடப் போறான்!

(ஒரே ஜயகோஷத்துடன் கூட்டம் கலைகிறது.)

## காட்சி 2

(மறு நாள் காலை.

சிவலிங்கம் காரை வாசலில் கொண்டு வந்து நிறுத்தி யிருக்கிறான். அவன் முகத்தில் எரிச்சல் படர்ந்திருக்கிறது; அடிக்கொரு தடவை 'பாம் பாம்' என்று 'ஹாரன்' அடித்துத் தன் எரிச்சலுக்கு ஒரு போக்குக் கொடுத்துக் கொண்டிருக்கிறான்.)

சிவலிங்கம் (பொறுமை இழந்து) ஏதேது, இவுகல்லாம் வர மாட்டாக போலிருக்குதே!

பட்டு தொல்லையாப் போச்சு!

(ஹாரன் அடிக்கிறான்)

ராசாத்தி (வெளியே வந்து): சிவலிங்கம், உன்னைக் கொஞ்சம் ஓசைப் படுத்தாமல் இருக்கச் சொன்னாக அய்யா....பெருந் தலைவலியா இருக்குதாம்.

சிவ: ஓங்களுக்காகக் காத்துக் காத்து எனக்குத் தலைவலி எடுத்துப் போச்சு. நேரமா அது பாட்டுக்கு ஆயிக்கிட்டு இருக்கு, வரப் போறியளா இல்லியான்னேன்.

ராசா: எல்லாம் வருவம்; சும்மா இரு...(உள்ளே போகிறான்)

சிவலிங்கம் (தனக்குள்): வெறும் பார எளவாப் போச்சு இது! .... ஹூம்...பனையமொதலாளி வீட்டிலே அவுகளும் அம்மாவும் மட்டும் தான். அம்மா சிக்காளி வேறே.... எத்தினி குசாலா இருந்திச்சு!

(அவனுடைய பொறுமையை நெடு நேரம் சோதித்து விட்டு ஒவ்வொருவராக வெளியே வருகிறார்கள். முதலில் வெளியே வந்த சின்னி காருக்குள்ளேயும் வெளியேயுமாக ஓடித் திரிந்து கொண்டிருக்கிறான். கணபதி காப்பிக் கூஜாவைத் தூக்கி வந்து காருக்குள் வைக்கப் போகும்போது கூஜா கை தவறிக் கீழே விழுந்து காப்பி கொட்டுகிறது.)

சின்னி (உரக்க): ஐயையோ! காப்பியைக் கொட்டிட்டான் அண்ணன்.

கணபதி (பாய்ந்து அவன் வாயைப் பொத்தி): கத்தினே, நொறுக்கிடுவேன்.

(மிஞ்சிய காப்பியோடு கூஜாவை மூடி அதைக் காரின் பின்புறத்தில் வைத்து விடுகிறான். சிவலிங்கம் அதைப் பார்த்து ரசித்துக்கொண்டிருக்கிறான்; சின்னி கோபித்துக் கொண்டு ஓடி விடுகிறான். ஆயிற்று. எல்லாச்சாமான்

கயிறும் ஏற்றியாகிவிட்டது. எல்லாரும் காரைச் சுற்றிக் கூடுகிறார்கள்.]

சண்முகம் (தவசிப்பிள்ளையிடம்): இந்தா சவாவது. நீயும் ரங்கனும் முன் சீட்டிலே ஒக்காருங்க. பாக்கி ஆளுகல்லாம் பின் சீட்டுலே ஒக்காந்திர்றோம்.

சிவலிங்கம் (சபாபதியை ஏளனமாகப் பார்த்து): இத்தினி ஆளுகளை வண்டி எப்படித் தாங்கும் சார்!

சண்: எல்லாம் தாங்கும், தாங்கும், பேசாம இரு... ஏறிக்க சவாவது....

[சபாபதியும் ரங்கனும் முன் சீட்டில் உட்காருகிறார்கள். மற்றவர்கள் எல்லோரும் பின் சீட்டில் சாமான்களை நகர்த்தியும், ஒதுக்கியும் இடம் பண்ணிக் கொண்டு உட்காருகிறார்கள்.

சண்: சரி, கதவைச் சாத்திரு சவாவது....

மர: நீங்களும் மூடிருங்க....ராசாத்தி. நீ அந்தப் பக்கம்...

[காரின் கதவுகள் எல்லாம் மூடப்படுகின்றன. சிவலிங்கம் 'ஸ்டார்ட்' பண்ணுகிறான்.]

ராசா (திடீரென்று): இரு இரு சிவலிங்கம், இந்தக் கதவு தொறந்துக்கிடுச்சி...

மர: இதென்னங்க?

சிவ: அட, ஒங்கியடிச்சுச் சாத்துவியளா, என்னமோ... (தானே அடித்துச் சாத்துகிறான். கதவு மறுபடியும் திறந்து கொள்கிறது.) இதென்னங்க ஏதோ தகராறு மாதிரில்லா படுது! (இறங்கி வந்து கதவைப் பரிசோதித்துப் பார்த்து விட்டு) கதவு கெட்டுப் போயிரிச்சுங்க.. அதாகப் பட்டது கீல் விட்டுப் போயிரிச்சுங்க... கீலுதான் மிஸ்டேக்குங்க...

சண்: அட கடவுளே, ஏன் அப்பிடி சிவா?

சிவ: என்ன சொல்றதுங்க? காருக்கு வயசாயிப் போச்சுன்னுதான் சொல்ல முடியும். சர்வீசுக்கு விட்டு நல்லா ஒவராயில் செய்யச் சொல்லணும். கீலெல்லாம் 'பாத்திரணும்.

மர: இப்ப என்ன வழி சொல்லுறே? கதவு மூட மாட்டேங்குதே!

சிவ: நல்ல கொச்சக் கவுறு இருந்தாக் கொண்டாங்க. கட்டிடலாம். வேறே வழியில்லீங்க!...

சண்: இதென்னப்பா, அவமானம்!

மர: ஹூம், என்ன செய்யுறது? இந்தா, சிவலிங்கம்! நீதான் ஐயாகிட்டே சாவியை வாங்கிக்கிட்டுப் போய்க் கதவைத் திறந்து உள்ளேயிருந்து. அங்கே கொடிக்குக் கட்டியிருக்குதில்லே. அந்த மணிக்கவுத்தை அறுத்து எடுத்தா.....

[சிவலிங்கம் சாவியுடன் உள்ளே சென்று கயிற்றுடன் திரும்பி வந்து, கதவை இழுத்துக் கட்டுகிறான்.]

ராசா (திடீரென்று): ஐயையோ, சிவலிங்கம், கவுத்தை அவுத்துடு....என் கை......

சிவ: அட, எஞ்சிவனே. இதென்னம்மா நீங்க செய்யற வேலை:

[சிவலிங்கம் அவசரமாகக் கதவைத் திறக்கிறான். ராசாத்தியின் கை கதவிடுக்கிலிருந்து ரத்தக் காயத்துடன் விடுபடுகிறது. ரங்கன் எரிந்து விழுந்து கொண்டே வீட்டுக்குள் போய் மருந்துடன் வந்து ராசாத்திக்குக் கட்டுப் போடுகிறான். சிவலிங்கம் இதற்குள் கதவை மறுபடியும் கயிற்றால் கட்டி விட்டு டிரைவர் சீட்டில் போய் உட்காருகிறான்.]

ரங்கன் (தானும் உட்கார்ந்தவாறு): அம்மா! நேரம் அது பாட்டுக்குக் கண்டமானைக்கு ஆயிப் போயிடுத்து.

சண்: ஜல்தியாக் கிளம்பிடுவோம், இங்கிருந்து. இங்ஙனமே இன்னும் கொஞ்ச நேரம் நின்னுக்கூடி இன்னும் என்னென்ன ஆகுமோ!

(எல்லாரும் சிரிக்கக் கார் புறப்படுகிறது.)

காட்சி 3

[கார் ஊருக்கு வெளியே வந்து சாலையில் சென்று கொண்டிருக்கிறது.]

சிவ: எனக்கு அருவிக் கரைக்கு வழி தெரியாதுங்க. நீங்க சொல்லுற பக்கம் விட்டுக்கிட்டுப் போறேன். அத்தனைதான் என்னாலே முடியும்.



ரங்: அன்னதான மடம் எங்ஙனை இருக்குதுன்னு ஒனக்குத் தெரியுமில்லே?

சிவ: அதான், அதோ வருதே! அது வந்தவுடனே என்ன செய்யணும்னு இப்பவே சொல்லிடுங்க..

ரங்: அன்னதான மடத்திலேயிருந்து நாலுமைல் தாம்தான்னு முதலியார் மாமா சொன்னாங்க.

சண்: அடடே, இந்தச் சந்திரத்திலே யிருந்து ரெண்டு ரோடு பிரியுதே! இதிலே எந்தப் பாதையிலே நாம போகணும்?

ரங்கன் (பரபரப்புடன்): சிவலிங்கம் சிவலிங்கம்! வண்டியை நிறுத்து. முதல்லே ..... பாதையைத் தெரிஞ்சுக்கிடுவோம் ..... ஆமாம்.

(கிரீச்சென்ற சத்தத்துடன் கார் நிற்கிறது)

சண: முதலியார் மாமாதான் சரியாச் சொன்னாங்களே! அன்னதான மடத்துக்கு நேர் எதிர்த்தாப்பிலே போற ரோடுன்னு சொன்னாங்களே!

ரங்கன் (திரும்பி வந்து): ஆமாமாம்.! மடத்துக்கு எதிர்த்த ரோட்டுலே விடு, சிவா....

சிவ: அதை அப்பவே சொல்லியிருக்கக் கூடாதுங்களா? இப்ப மறுபடியும் 'ஸ்டார்'ட் பண்றதுக்குள்ளே தாவு தீர்ந்து போயிடும்.

(ஸ்டார்ட் பண்ண முயன்று தோல்வி அடைகிறான்.)

சிவ: கொஞ்சம் ஒரு கை கொடுத்துத் தள்ளிவிடுங்க. இல்லாட்டி இது நகராது......

சண்: தள்ளறதா? இது என்ன கூத்து....!

ரங்: நானும், கணபதியும், சவாலதியும் சேர்ந்து தள்ளறோம். அப்பா, நீங்க சிவ னேன்னு இருங்க......

சண்: பிறகு நான் வேறே தள்ளணும்னு எதிர்பார்த்துக்கிட்டிருக்கீங்களா, எல்லாரும்!

(வெறுப்புக் கலந்த சிரிப்புச் சிரிக்கிறார்)

சிவ: சார்," நீங்க தள்ளாட்டியும் இறங்கி நின்னுக்கிடுங்க. எல்லாருமே இறங்க வேணும்.

சண்: அட, கடவுளே! என்ன அவமானம்!

மர: இங்கேதான் சனங்க யாரும் இல்லியே!

[ரங்கன், தவசி, கணபதி சண்முகம் பிள்ளை நால்வரும் இறங்குகிறார்கள். சண்முகம் பிள்ளையும் வெட்கத்தை விட்டுவிட்டு மற்ற மூவருடன் சேர்ந்து காரைத் தள்ளுகிறார். திடீரென்று கார் ஸ்டார்ட் ஆகி, அவர்கள் நால் வரையும் பின்னுக்கு ஒரு தள்ளுத் தள்ளி நிறுத்தி விட்டு, தான் முன் னால் ஓடுகிறது.

சண்முகம் (பதற்றத்துடன்): ஏ, சிவலிங் கம், காரை நிறுத்தப்பா....

[எல்லாரும் சேர்ந்து கத்துகிறார்கள். வண்டிக்குள் இருப்பவர்களும் கத்து கிறார்கள். ஒரு பர்லாங் ஓடின பிறகு கார் நிற்கிறது. சண்முகம் பிள்ளையும், மற்ற மூவரும் குடல் தெறிக்க ஓடிக் காரைப் பிடிக்கிறார்கள்.]

சண்முகம் (மூச்சு இரைக்க): இதென்ன சிவலிங்கம், அப்படி விட்டுக்கிட்டு வந்துட்டே?

சிவ: பிரேக் புடிக்கலீங்களே, நான் என்ன செய்யட்டும்? சட்டுனு ஏறிக் குந்திடுங்க; மறு படியும் மக்கர் வந்துடப் போகுது.

[எல்லாரும் அடித்துப் பிடித்துக் கொண்டு உட்காருகிறார்கள். கார் மறுபடியும் புறப்படுகிறது.]

சண்: பெட்ரோல் நிறையப் போட்டிருக் கேல்லே?

சிவ: ஓ, 'டாங்க்' நிறைய இருக்குது.

ராசா: அம்மா, கையெல்லாம் குத்து குத்துன்னு குத்துதும்மா.

மர: கொஞ்சம் பொறுத்துக்க கண்ணு! சந்தோஷமாப் புறப்பட்டா இப்படியா நேர ணும்? ஏம்பா, சிவலிங்கம், நீதான் கொஞ்சம் பார்த்து, குழந்தை கதவிடுக்கிலே கை வைச் சிருக்குதான்னு தெரிஞ்சுக்கிட்டுப் பிறகு கதவைச் சாத்தியிருக்கக் கூடாது?

ராசா: கதவை ஓங்கிச் சாத்தி....ஐயோ அம்மா! வலி கையையே கொண்டு போகுது.

சிவ: ஏம்மா, வேணும்னு கதவை ஓங்கிச் சாத்தினேன், உங்கை மேலே? என்னம்மா?

சண்: சரி, சரி! ரெண்டு பக்கமும் மரமும் செடியும் எவ்வளவு அழகா வருது! அதைக் கவனிக்காம... நீயும்தான் மரகதம்! இயற் கைக் காட்சியைப் பார்த்துக்கிடு. என்னமோ கை விரலைப் பத்தியே பேசிப் பேசி எல்லாத்

தையும் விட்டுட்டீங்களே! நான் உன் கலியாணத்துக்கு வந்தேனே. அப்ப நடந்தது. தெரியுமில்லே?

மர: ஏங்க, அதென்ன என் கலியாணம்னு சொல்லிட்டீங்க? உங்க மாமனுரோட மக தான் நான், மறந்துடாதீங்கன்னேன்.

(எல்லாரும் சிரிக்கிறார்கள்)

சண்: கலியாணத்துக்கு ரயில்லே புறப்பட்டேன். ரயில்லே அரை மைல் போறதுக்குள்ளே ஒரு பெரிய கரித்துண்டு வலது கண்ணுலே விழுந்திடுச்சு. என்னென்னமோ செய்து பார்த்தோம். ஒண்ணும் சரிப்பட்டு வரலே. பல நாளுகளா நான் எதிர்பார்த்திருந்த ஒரு பயணத்தை வீங்கிய கண்ணே மூடிக்கிட்டே நடத்தி முடிச்சுட்டேன். கிட்டத்தட்ட ஆயிரம் மைல் பிரயாணம் கேட்பாரில்லாம வீணாப் போச்சு. உங்க ஊர் வர்றதுக்கு ஒரு பத்து மைல் இருக்கும்போது அந்த வம்பு பிடிச்ச கரித்துண்டு தான் வந்த காரியம் முடிஞ்சு போச்சுன்னு கண்டுகிட்டு கண்ணுலேயிருந்து கழண்டு வந்திடுச்சு; கண்ணும் சரியாப் போச்சு. எப்படியிருக்கு பாரு! அப்போகூட அந்தக் கரித் துண்டு வெளியே வந்திருக்காட்டி உன்னே நான் கண்ணே மூடிக்கிட்டுத்தான் கலியாணம் செய்துக்கிறது இருப்பேன்......(எல்லாரும் சிரிக்கிறார்கள்) இப்ப நல்ல வேளே, ராசாத்திக்குக் கையிலேதானே காயம்? கண்ணுலே பார்க்க முடியுதே!

[திடீரென்று எதிர்த்தாற்போல் ஒரு கார் வேகமாக வருவதைப் பார்த்து எல்லாரும் கத்துகிறார்கள். நல்ல வேளையாகச் சிவலிங்கம் சமயத்தில் ஒரு 'ஒடி' ஒடித்துச் சமாளிக்கிறான்.

சண்: நல்ல வேளே, தப்பிச்சோம்.

மர: நான் கண்ணேயே மூடிக்கிட்டேன். எவ்வளவு பயமாப் போச்சு.

சிவ: ஏன், சார்! இந்த ரோடு எங்கிட்டோ இழுத்துக்கிட்டுப் போகுதே! எங்கே சார் இருக்குது, அருவிக்கரை?

சண்: ஏண்டா, ரங்கா! நானே கேட்கணும்னு இருந்தேன். இந்த ரோடு எங்கே போய் முடியும்கிறதும் தெரியலே. நாம் என்னைக்கு அருவிக்கரை போய்ச் சேர்றது?

மர: ஒரு வேளே தப்பு வழியிலே போய்க்கிட்டிருக்கோமோ என்னவோ?

ரங்கன்: எனக்கும் இது புதுசுதானேம்மா? எனக்குமுதலியார் மாமா சொல்லித்தானே...

சண்: இந்த முதலியார் மாமாவை என்ன செய்தாலும் பரவாயில்லே. யாருகிட்டேயாவது நிறுத்திக் கேட்கலாம்னு. ஒரு ஈ காக்காகூட......(திடீரென்று) இந்தாப்பா, சிவலிங்கம், கொஞ்சம் டையை விடேன். இப்படித் தலைதெறிக்கிற வேகத்திலே ஏன் விடறே?

மரகதம்: இது என்ன வேகம், மரமெல்லாம் ஒரே ஆட்டமா ஆடிக்கிட்டு எதிர்ப் பக்கம் ஓடுதே!

கண: இந்த ஸ்பீட் இருக்கட்டும்மா, படு ஜோக்கா இருக்குது.

ராசா: உனக்கு இருக்கும். எனக்குக் கை வலி மண்டையைக் கொண்டு போகுது.

சண்: 'ஸ்பீடை'க் குறை! இவ்வளவு சொல்லிக்கிட்டிருக்கோம்.....

சிவ: அதான் ட்ரை பண்ணிக்கிட்டிருக்கேன் சார்! கொறைய மாட்டேங்குது.

எல்லாரும்: ஐயையோ!

சிவ: இந்த மாதிரிக் கோளாறு இது வரைக்கும் வந்ததில்லீங்க....

மர: எப்படியாவது நிறுத்திப் போடு!

சிவ: எப்படிங்க; பிரேக்குப் பிடிக்கலியே!

ரங்: அப்பா, பிரேக் பிடிக்காட்டா ரொம்ப ஆபத்தாச்சேப்பா!

சண்: இதுக்கு என்ன செய்யலாம், சிவா? நேரே ரோட்டைப் பாத்துக்கிட்டே சொல்லு; எப்பக்கம் திரும்பாதே! எங்கியாச்சும் மோதிடப் போகுது.

சிவ: வண்டியிலே பெட்ரோல் கெசட்டு மேனிக்கு இருக்குது சார். அது காலியாகிற வரை வண்டி இந்த ஸ்பீட்லேதான் போய்க்கிட்டிருக்கும். பிறகு தன்னாலே நின்னுடும்.

மர: ஐயையோ! அவ்வளவு நேரமாகுமா?

சண்: நீ கத்தாதே. மரகதம்: உன் கத்தல்லே எங்க பயமெல்லாம் ஜாஸ்தியாயிடும் போலேயிருக்குது...சிவா, நீ பார்த்து ஓட்டு.

சிவ: இனி ஓட்டுறதுக்கு என்ன இருக்குது. சார்! ஹூம்! கடவுள் விட்ட வழி.

ரங்: ஏம்பா, இந்த ரோட்டுலே இதே வேகத்துக்குப் போய்க்கிட்டிருந்தா நாம்ளை விட்டுத் தள்ளில்லே போயிடுவோம்? எப்படியாச்சியும் திருப்பி ஊர்ப் பக்கமே ஓட்டிக்கிட்டுப் போனா என்னுங்க?

சண்: அதுவும் சரியான யோசனைதான். நீ எப்படியாச்சியும் திருப்பி அன்னதான மடத்துப் பக்கம் கொண்டு போயிடு. பெட்ரோல் காலியாகிற வரை அங்கேயே சுத்திக்கிட்டிருந்துட்டுப் பிறகு வீடு சேருவோம்.

சிவ: சரி, சார்! எல்லாரும் ஜாக்கிரதையா இருங்க. அதோ அந்த மரத்தைச் சுற்றித் திருப்பறேன்.

[எல்லாரும் ஒருவரை யொருவர் பிடித்துக் கொள்ளுகிறார்கள். சிவலிங்கம் அந்த வேகத்திலேயே காரைத் திருப்புகிறான். அப்போது கார்க் கதவின் திருகு கழிந்து பட்டென்று அறுந்து கதவு திறந்து கொள்கிறது. நல்ல வேளை! சரியான சமயத்தில் மரகதம் ராசாத்தியைப் பிடித்து உள்ளே இழுத்துக் கொண்டதால் ஒரு பெரிய விபரீதம் தவிர்க்கப்படுகிறது.]

சண்: அட, கடவுளே! ஏன் சிவலிங்கம், அந்தக் கதவைச் சரியாக் கட்டமாட்டே?

மர: கொழந்தை பாவம், இப்போ உருண்டு விழுந்திடப் பார்த்தா.....

சிவ: எனக்கு எரிச்சல் மண்டிக்கிட்டுவருது. யாருமே பேசக் கொடுக்காதீங்க. அந்தக் கதவுப் பக்கம் யாரும் போக வேணும். எல்லாரும் ஒரு கதவுப் பக்கமே ஒண்டிக்கிட்டு இருங்க.

சண்: அட, கடவுளே, என்ன சோதனைடா இது! டேய், கணபதி! நீ நல்லா என் கையைப் பிடிச்சுக்க. மரகதம், நீ ராசாத்தியையும் சின்னியையும் கெட்டியாகப் பிடிச்சுக்க.....

மரகதம்: ஐயையோ! சின்னி எங்கே?

சண்: என்னது?

மரகதம் (வீறிட்டு அலறிக் கொண்டு): சின்னியைக் காணோமே, இங்கே!

சண்: காணோமா? அவ எங்கேயிருந்தா?

ராசாத்தி: ஆரம்ப முதலே அவ உட்கார்ந்திருந்ததை யாரும் பார்க்காம இருந்துட்டோமே!....

ரங்கன்: ஒருவேளை அங்கே மரத்தைச் சுத்தித் திருப்பினோமே, அப்ப அவள் விழுந்திருப்பாளோ!

மர: ஐயோ, நான் என்ன செய்வேன்?

(ஓவென்று எல்லாரும் அழ ஆரம்பிக்கிறார்கள்.)

சண்: சிவலிங்கம், கொஞ்சம் தயவு பண்ணி அந்த மரம்வரை வண்டியைத் திருப்பி ஓட்டு. பார்த்துக்கிட்டே போவோம்.

[சிவலிங்கம் திருப்ப முயன்று முடியாமல் போகிறது. கடைசியில் அன்னதான மடம் வந்தபின் அதைச் சுற்றிக் கொண்டு திருப்பி நெடும் பாதையில் மறுபடியும் விட்டுக் கொண்டு செல்கிறான். மறுபடியும் மரத்தைச் சுற்றி வந்தும் சின்னி தட்டுப்படாமல் போகவே ஏகப்பட்ட அழுகையுடன் வண்டி மடத்துப் பக்கம் வந்து அதையே சுற்றிச் சுற்றி வர ஆரம்பிக்கிறது.]

## காட்சி 4

[கார் எப்போது எங்கே நின்றதோ! எல்லாரும் காரை விட்டு விட்டு நடையாக நடந்து போலீஸ் ஸ்டேஷனில் சின்னியைப்பற்றி 'ரிபோர்ட்' செய்து விட்டு அழுது கொண்டே வீட்டுக்குத் திரும்புகிறார்கள். வீட்டு வாசலில் முதலியார் மாமா—அவர்களை எதிர் கொண்டழைத்தவர் திடுக்கிடுகிறார்.]

முதலி: என்னங்க, ஒரு மாதிரியிருக்கீங்க?

சண்முகம்: போதும், சேமம் விசாரிக்காதீங்க. நீங்க செஞ்ச கூத்துக்கு.....

முதலி: ஏங்க, எம்மேலே கோபம்?

ரங்: என் மாமா! உங்க பேச்சைக் கேட்டுக்கிட்டு அருவிக் கரைக்குப் 'பிக்நிக்' புறப்பட்டு, கார் ஒடிஞ்சு போய்த் தவிக்கத் இண்டாடி...

முதலி: அருவிக்கரையா? நான் ஏதோ உங்ககிட்டே விளையாட்டுக்குச் சொல்லப் போயி....ஹூம், இந்த ஊர்லே உங்களுக்கெல்லாம் தெரியாம, எனக்கு மட்டும் தெரிந்த அருவிக் கரை ஏதப்பா?

சண்: விளையாட்டுக்குச் சொன்னீங்களா? இந்த மாதிரி விளையாட்டு வேண்டாம். உங்க விளையாட்டுலே இப்ப கொழந்தையைப் பறிகொடுத்திட்டு.... (வாய்விட்டு அழுகிறார்)

முதலி: கொழந்தையைப்பறிகொடுத்தா... யாரைச் சொல்றீங்க?

மரகதம் (வீறிட்டு அலறி). எங்க பொன்னு சின்னி எங்கே விழுந்தாளோ!

முதலியார் (வாய் விட்டுச் சிரித்து) சின்னியா? அங்கே திண்ணையிலே பாருங்க. அது ஏதோ கணபதிகிட்டே சண்டை போட்டுக்கிட்டு எங்க வீட்டுக்கு ஓடியாந்திடுச்சு. நான் சமாதானம் பண்ணி, சாப்பாடு போட்டு இங்கே கூட்டியாரேன், வீடு பூட்டிக் கிடக்கு. பாவம், காத்துக் காத்துப் பார்த்துவிட்டுத் தூங்கிப் போயிடுச்சு.

[எல்லாரும் வீட்டுத் திண்ணையில் சின்னி படுத்திருக்கும் இடத்தை நோக்கி ஓடுகிறார்கள்.]

சண்முகம் (சற்றே தயங்கி நின்று சிவலிங்கத்திடம்) உன் பழைய எசமான்கிட்டே சொல்லி அந்தக் காரை வந்து தள்ளிக்கிட்டுப் போகச் சொல்லு. அவர் என்ன விலை கொடுத்தாலும் நான் எடுத்துக்குவேன்னு சொல்லு!






மாடல் 0724 6 வால்வ் • ஆல்–வேவ்
8 பாண்டு, முழுவதும் பான்ட்ஸ்பிரெட்
ஏஸி/அல்லது ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)

# murphy radio

மர்பி ரேடியோ

இல்லத்திற்கு இன்பமளிக்கிறது

MR.G. 151

# திருமூலர் தவமொழி

ராஜாஜி - சோமு

28

திருமந்திரம் திருமூலருடைய அநுபவ ஞானம் நிரம்பிய யோக நூல். முனிவர் தமது யோகப் பயிற்சியினால் அடைந்த பயன்களை இனிய எளிய தமிழிலே ஆனந்தத்தோடு பாடுகிறார். இந்தப் பயன்களை யோக சித்திகள் என்று சொல்வது வழக்கம்.

அழிந்து போகக் கூடிய இந்த உடம்பை உயிர் இருக்கும் வரை ஆரோக்கியத்தோடும் உறுதியோடும் இயங்கும்படி பாதுகாக்கிற பயிற்சிக்குக் காயசித்தி உபாயம் என்று பெயர். உடம்பை இவ்விதம் பார்த்து காக்க வேண்டியதன் அவசியத்தை முனிவர் வற்புறுத்துகிறார்.

இந்த உடம்பைக் கொண்டுதான் ஆன்மாவின் நற்கதிக்குரிய உபாயங்களைச் செய்ய வேண்டும். ஆன்மா கடைத்தேறுவதற்கான உபாயங்களைச் செய்யாமல் இந்த உயிர் நீங்கி விட்டால் அது பெரிய நஷ்டமாகும் அல்லவா?

உடம்பார் அழியில்
உயிரார் அழிவர்

[உடம்பார் அழியில் — உடம்பு அழிந்து போனால். உயிரார் அழிவர் — உயிர் நற்கதியின்றி அழிவு அடைந்து விடுகிறது.]

உடம்பை உயர்வுபடுத்தி, உடம்பார் என்கிறார், கூடவே உயிருக்கும் அதே மரியாதை விகுதியைச் சேர்த்துப் பாடுகிறார். இந்த உடம்பு அழிந்து விட்டால் உயிருமே அழிந்துவிடுகிறது. அதாவது உடம்பால் ஆக வேண்டிய காரியத்தை நாம் பெறாமல் மரணம் அடைந்துவிட்டால், ஆன்மாவானது தான் அடைய வேண்டிய பயனை அடையாமல் நஷ்டமடைகிறது.

"உடம்பு அழிவதோடு உயிரும் மடிந்து விடுகிறது. ஒன்றும் எச்சமின்றி இரண்டும் முடிவெய்தி விடுகின்றன," என்று நாஸ்திகப் பொருள் கொள்ளலாகாது. உயிர் அழிவது என்றால், அடையவேண்டிய பயனைப் பெறாமல் நஷ்டமடைகிறது என்று பொருள்.

இவ்வாறு உயிருக்கு மிகவும் பயன்படக்கூடிய கருவியானபடியால் உடம்புக்கு உயர்வு கொடுத்து உடம்பார் என்று பாடினார்.

உடம்பார் அழியில்
உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம்
சேரவும் மாட்டார்

[திடம்பட—உறுதியான பயன் ஏற்படும் வண்ணம். மெய்ஞ்ஞானம்—அநுபவபூர்வமான ஞான சித்தியை, சேரவும் மாட்டார்—கூடிப் பயன் பெறவும் மாட்டாது ஆன்மா.]

உடம்பில் இருக்கும்போது அந்த உடம்பைக் கொண்டு செய்ய வேண்டியதைச் செய்து மெய்யறிவு பெறாத உயிருக்கு, உடம்பு அழிந்த பிறகு மறுபடி அதே வாய்ப்பு கிடைக்காதே என்று வருந்துகிறார் முனிவர். எனவே உயிரைப் பாதுகாக்கும் வழியைத் தெரிந்து, உடம்பைப் பாதுகாத்தேன் என்று திருமூலர் தமது சிறந்த அநுபவத்தைச் சொல்லுகிறார்.

உடம்பை வளர்க்கும்
உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன்
உயிர்வளர்த் தேனே

[வளர்த்தல் — பாதுகாத்துப் பேணுதல்.]

உடம்பின் பண்பும் வலிமையும் கெட்டுப் போனால், இதைக் கருவியாகக் கொண்டு கடைத்தேற வேண்டிய ஆன்மா அந்த வாய்ப்பை இழந்து, கெடுகிறது. எனவே இந்த உடம்பை உதாசீனம் செய்வது தவறு. இதைப் பாதுகாப்பது உயிரையே பாதுகாப்பதாகும். உயிரை அழியாமல் காப்பாற்றுவதற்காகவே இந்த உடம்பைக் காப்பாற்ற வேண்டும்.

உடம்பார் அழியில்
உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம்
சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும்
உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன்
உயிர்வளர்த் தேனே

மேலும் பாடுகிறார் முனிவர் தமது சொந்த அனுபவத்தை.

ஒரு காலத்தில் இந்த உடம்பைத் துச்சமாகக் கருதி உதாசீனம் செய்தேன். ஆனால் இந்த உடம்புக்குள் உறுதுணையான பரம் பொருளைக் கண்டு விட்ட பிறகு, அந்த உதாசீனத்தை விட்டு இவ்வுடம்பை நன்றாகப் பாதுகாக்க ஆரம்பித்தேன் என்கிறார் திருமூலர்.

உடம்பினை முன்னம்
இழுக்கென்று இருந்தேன்

[முன்னம்—முன் காலத்தில். இழுக்கென்று—குற்றமுடையது, நிலையற்றது.]

உடம்பினுக் குள்ளே
உறுபொருள் கண்டேன்

[உறு பொருள்—பொருந்தி நிற்பதும் உயிருக்குப் பற்றுக் கோடுமான பரம்பொருள்.]

உடம்புளே உத்தமன்
கோயில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந்து
ஓம்புகின் றேனே

[உத்தமன்—இறைவன். ஓம்புதல்—பாதுகாத்தல்].

இந்த உடம்பை அலட்சியம் செய்யக் கூடாது என்பதை உணர்ந்தேன். ஏனென்றால், இது உத்தமனாகிய இறைவன் வந்து வீற்றிருக்கும் கோயில். எனவே கோயிலை எத்தனை பரிசுத்தமாகவும் கண்காணிப்போடும் வைத்துக் கொள்ள வேண்டுமோ அப்படி இந்த உடம்பைப் பாதுகாத்து வருகிறேன் என்கிறார்.

"யானிருந்து ஓம்புகின்றேனே"

என்பதில், இருந்து என்ற சொல்லைக் கவனிக்க வேண்டும். உடம்பால் உண்டாகும் பல இன்னல்களைப் பொறுத்துக் கொண்டு இந்த உடற்கோயிலைப் பாதுகாத்து வருகிறேன் என்ற தொனிப் பொருள் 'இருந்து' என்ற சொல்லில் பொதிந்துள்ளது.

உடம்பினை முன்னம்
இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே
உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன்
கோயில்கொண் டானென்று
உடம்பினை யானிருந்து
ஓம்புகின் றேனே!

நம் நாட்டு பெண்மணிகள் தங்களது அழகான நீண்ட கூந்தலைத் தொன்றுதொட்ட பழக்கப்படி வீட்டிலேயே தயாரிக்கப்பட்ட ஷாம்புவினால் சுத்தம் செய்கின்றனர். அது கூந்தலை மிகவும் நன்றாகவே சுத்தம் செய்யலாம். ஆனால் அது மிகவும் சிரமமான காரியம்.

# ஷாம்பு எதற்கு?

வீட்டில் தயாரிக்கும் ஷாம்புவைவிட நல்ல தேங்காய் எண்ணெயினால் ஆலையில் தயார் செய்யப்பட்டு பாட்டிலில் கிடைக்கும் ஷாம்பு கூந்தலைச் சுத்தம் செய்ய வெகு சுலபமானது. டாடாவின் தயாரிப்பான இத்தகைய ஷாம்பு எளிதில் உபயோகிக்கக்கூடியது. நறுமணம் கொண்டது. அதன் மிருதுவான நுரை கூந்தலை நன்றாகச் சுத்தம் செய்து மயிர்க்கால்களிலிருக்கும் தூசி, அழுக்கு முதலியவைகளை அகற்றி கூந்தலை மிருதுவாகவும் பளபளப்பாகவும் இருக்கச் செய்கிறது.

பளபளப்பான கூந்தலுக்கு...

# டாடாவின் ஷாம்பு




TST-16 TAM



## சீரான ஆகாரமில்லாததால் நீங்கள் மெலிந்திருக்கிறீர்களா?

# ஆல்போஸாங் சாப்பிடுங்கள்

**மிகச் சிறந்தது**
**சாதாரண உணவுடன் சேர்ந்து**
**சிக்கனமான, விஞ்ஞான முறையில்**
**ஊட்டமளிப்பது**

தேநீர், காப்பி, பால், கஞ்சி, பழரசம் முதலியவைகளுடன் சேர்த்து அருந்தினால் மிக ருசியாக இருக்கும். சிறு குழந்தைகளுக்கும், வளரும் பிராயத்திலும், பிரசவகாலத்தில் தாய்மார்களுக்கும், சிந்திக்கும் தொழிலாளிகளுக்கும், முதியவர்களுக்கும், பலவீனம் இரத்தமின்மை மற்றும் நோயிலிருந்து தேறி வரும் போதும் ஆல்போ-ஸாங் சிறந்த டானிக் உணவாகிறது.




பௌடர் மற்றும் மாத்திரைகளாகவும் கிடைக்கிறது.

**ஜே. & ஜே. டீஷேன்,**
ஹைதராபாத்—டெக்கான்

# கவிதை வாழ்வு

## வல்லிக் கண்ணன்

கிருஷ்ண பிள்ளை ஒரு கவி.

உண்மை. அவர் இதுவரையில் ஒரு கவிதை கூட எழுதவில்லைதான். அவர் கவிதைகள் இயற்றி யிருந்தால் இன்னும் வெறும் கவிஞராகவா இருப்பார்? கவிகள் போற்றும் கவிச் சக்கரவர்த்தியாக, கவிச் சக்கரவர்த்திகள் தொழுதேற்றும் மகா கவியாக, மகாகவிகள் வணங்கும் கவிதைக் கடவுளாக அல்லவா வளர்ந்திருப்பார்?

ஆனால், கவிதை எழுதினால் தானா கவிஞர்? இல்லை, கவிஞர் என்றால் சதா கவிதை எழுதிக் கொண்டிருக்க வேண்டுமா என்ன? ஒன்பது, பத்துக் கவிதைகள் எழுதி விட்டு, வாழ்நாள் முழுதும் 'கவிஞர்' 'கவிஞர்' என்று தம்மைத் தாமே பெருமையோடு விளம்பரப்படுத்திக் கொண்டு திரிகிறவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்களே!

கிருஷ்ண பிள்ளை கவிஞர்தான். இதுவரை ஒரு கவிதை கூட எழுதா விட்டாலும்-கவிதை எழுதும் எண்ணம் அவருக்கு இல்லாவிட்டாலும்-அவர் கவிதான். வாழ்க்கையையே கவிதையாகச் சுவைத்து ரசித்து அனுபவித்து வாழ்கிறவர் அவர். அவருக்கு அவருடைய வாழ்க்கை தனிப்பெரும் கவிதை ஆகும். வாழ்வின் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும் சிறு சிறு மணிக் கவிதை தான் அவருக்கு.

இதைப் புரிந்து கொள்ளாதவர்கள் — புரிந்து கொள்ளும் ஆற்றல் இல்லாதவர்கள் கிருஷ்ண பிள்ளையைக் கிருஷ்ண பிள்ளையாக மதிப்பதில்லை. 'அந்த ஆஸ்' என்றும், 'லெமி' என்றும், 'அரைக் கிறுக்கு' 'பைத்தியம்' 'அப்பாவி' என்றும் குறிப்பிடுவார்கள். இப்படிப் பல பொருள்களையும் குறிக்க உபயோகப்படும் 'சொன்னமுத்து' என்றும் ஒரு பெயரை அவருக்குச் சூட்டியிருந்தார்கள்பலர்.

இப் பெயர்களெல்லாம் அவருக்குப் பொருந்தும் போலும் என்று தோன்றும், கிருஷ்ண பிள்ளையின் நடவடிக்கைகளைக் கவனிக்கிறவர்களுக்கு.

வீதி வழியே - நாகரிகம் வேகமாக அலை புரளும் பெரிய ரஸ்தாக்களாயினும் சரி; ஆள் நடமாட்டம் அதிகம் இல்லாத சிறு தெருவாயினும் சரி; தேனீக்கள் மொய்ப்பதுபோல் ஜனங்கள் முட்டி மோதி ஆய்ந்து கொண்டிருக்கும் சந்து பொந்துகளாயினும் சரியே. எந்த இடமாயினும், எந்த நேரத்திலெனினும் - அவர் நடந்து போகிறபோது, அவரது கண்களில் தனி ஒளி சுடரிட, உதடுகள் சிறு சிரிப்பால் நெளிய, முகமே தன்னிறைவாலும் ஒருவித ஆனந்தத்தினாலும் பிரகாசிக்க (அல்லது, அசடு வழிய) அவரே ஒரு வேடிக்கைப் பொருளாகக் காட்சி யளிப்பார். அவரை அப்படிப் பார்க்க நேரிடுகிறவர்கள் 'பைத்தியம் போலிருக்கு!' என்று எண்ணுதிருக்க இயலாது. அவர்கள் என்ன கண்டார்கள், கிருஷ்ண பிள்ளை அந்நேரத்தில் கவிதா மயமான தனியொரு உலகில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்; ஸ்தூலமான இந்த உலகிலே அவர் உள்ளம் நிலை பெற்றிருக்கவில்லை என்பதை?

மினுமினுக்கும் உடலும், 'டக் டக்' என்று மிடுக்கான ஒலி எழுப்பும் நடையும், கம்பீரத் தோற்றமுமாய் தகதகக்கும் புரவி மீது ஜம்மென வீற்றிருக்கிறார். வேறே யாரு? நம்ம கிருஷ்ண பிள்ளைதான். வீதி வழிப் போவோர், வீட்டு வாசலில் நிற்போர், சாளரத்தின் பின் சந்திர உதயம் சித்திரிப்பவர்கள் எல்லோரும் அவர் உலா வருகிற நேர்த்தியிலே கண்ணை மிதக்கவிட்டு, மனசை அவர் பின் போகவிட்டு உணர்ச்சி வசப்பட்டு நிற்கிறார்கள். 'மச்சு வீட்டுச் சன்னலின்பின் - அச்சடிச்ச பிக்சரென - வந்தாளே ஒருத்தி - நின்று பார்த்தாளே அவளும்!' என்று அவர் உள்ளம் கவிதை செய்ய முயல்கிறது. அவர் மீது அவள் காதல் கொண்டு விடுகிறாள். பார்க்கப் போனால் எல்லா அழகிகளும் அவர் மீது காதல் கொண்டிருக்கிறார்கள். ஆயினும், விண் மீன்களிடையே முழுமதி போலே, அழகியரிடையே தனித்தன்மை பெற்ற பேரழகி அவள். யாராக இருந்தாலென்ன! அவளிடம் ஏதோ ஒரு கவர்ச்சி இருக்கிறது. கண்டவுடனேயே காரிகையர் மோகம் கொண்டு விட வேண்டியதுதான். வேறே வழி கிடையாது! இந்த அழகியும் இளநகை சிந்தி, சொகுசாகப் பார்க்கிறாள். பிறகு, தனது நினைவாக இருக்கட்டுமே என்று தூது அனுப்புவாள் போல் தன் கரு நெடுங் கூந்தலின் சுருள்கற்றை ஒன்றை அவர் பக்கம் வீசுகிறாள்....

கிருஷ்ண பிள்ளை நடந்து செல்கிறார். வெயிலாவது வெய்யில்! திடீரென்று ஒரு கார் அவர் அருகே வந்து நிற்கிறது. 'ஹல்லோ மிஸ்டர் கிருஷ்ண பிள்ளை!' என்று குயில் குரல் தேன் பாய்ச்சுகிறது அவர் செவியில். 'வெயிலில் நடந்து போகிறீர்களே? காரில் ஏறிக் கொள்ளுங்கள்' என்கிறாள் காரோட்டி வந்த மோகினி. இள வயது மங்கை. கண்ணுக்கு நல்விருந்து. அவள் பேச்சு கசக்கவா செய்யும்? அவர் அவள் அழைப்பை ஏற்றுக் கொள்கிறார். 'குட்டிச் சிறு குடிலில் குமைகிறீர்களா? ஐயோ!...அருமையான பங்களா உங்களுக்குக் காத்திருக்கிறது' என்கிறாள்... அவள் யாரோ? எங்கிருந்து வந்தவளோ? அவரை அவள் எப்படி அறிந்து கொண்டாள்? இந்தச் சில்லறை விஷயங்கள் பற்றிப் பிள்ளையின் கவி உள்ளம் ஏன் கவலைப்பட வேண்டும்? கனவு காண்பது அதன் இயல்பு. கனவுகளை வளர்ப்பது அதன் உரிமை. அதன் தொழிலை அது ஒழுங்காகச் செய்தால், குறுக்கே விழுந்து யார் தடுக்க முடியும்....?

பெரிய பஸ் ஓடிக் கொண்டிருக்கிறது: கிருஷ்ண பிள்ளை 'ஜாலி மூடி'ல் இருக்கிறார். பஸ்ஸின் பின்புறம் நின்று ஒரு பஸ்ஸைப் பிடித்து இழுக்கிறார். பஸ் ஓட இயலவில்லை; அதன் சக்கரங்கள் சுழன்று கொண்டு தான்

இருக்கின்றன. ஆயினும் பஸ் முன்னேற முடியாது திணறுகிறது. வீமன், ஹெர்குலிஸ் போன்ற பலசாலிகளின் தம்பியாகி விட்டார் கி. பிள்ளை. அவர் விளையாட்டாகப் பிடித்திழுத்து நிறுத்தியிருக்கிறபோது, பஸ் திமிறிக் கொண்டு ஓடிவிட முடியுமா என்ன?

பஸ் முன்னேற இயலாது உறுமுவதையும், டிரைவரும் பிரயாணிகளும் திகைத்துக் குழம்புவதையும் கவிக் கண்ணால் காணும் கிருஷ்ண பிள்ளைக்குச் சிரிப்பாணி அள்ளிக் கொண்டு வருகிறது. அருவி மாதிரிச் சிதறி உருளுகிறது.

தெருவோடு போகிறவர்கள், விஷயம் புரியாமல், 'ஆசாமிக்குப் பைத்தியம் போல் இருக்கு!' என்று எண்ணினால், அதற்குப் பிள்ளை அவர்களா பொறுப்பு?

கிருஷ்ண பிள்ளையின் உள்ளம் 'கங்கையைப் போல் காவிரி போல் கருத்துக்கள் ஊறும் உள்ளம்!' அங்கே குமிழியிடுகிற எண்ணங்களை, கனவுகளையெல்லாம் அவர் எடுத்துச் சொல்வதில்லை. சொன்னாலும் புரிந்து கொள்ளக்கூடிய ஆற்றல்தான் மற்றவர்களுக்குக் கிடையாதே!

வெயில். நல்ல பட்டணத்து வெயில். காரோடும் பெரிய ரோடுகளில் தார் இளகி ஓடும். அங்கங்கே ஓடும் நீர் போல் கானல் ஜாலம் காட்டும். எல்லோர் மீதும் வேர்வை கொட்டும். வெயிலை நிலவென மதிப்பார் போல, ரஸ்தா ஓரத்தில் நடந்து கொண்டிருப்பார் கி. பிள்ளை. அவர் உள்ளம் சொல்லும், 'ஆகா, வெயில் எவ்வளவு அழகாக இருக்கிறது! வெயில் வெகு நன்று. அது மிக இனியது' என்று.

இதை வாய்விட்டுச் சொன்னார் என்றால், எவர் தான் அவரைப் பாராட்டத் தயாராக இருப்பர்? ஒளி மயமாய் மிளிருகின்ற விரி வெளியை, நீல வானை, வெயிலொளியில் மின்னுகின்ற மரங்களின் பசிய இலைகளை, வண்ண வண்ணப் பூக்களை, பளிச்சிடும் கட்டிடங்கள், கார்கள், மாதர் புடவைகள், அனைத்தையும் விசாலப்பார்வையில் விழுங்கிய கண்கள் உள்ளத்தில் மீட்டிய உவகை கீதம் அது என்பதை எத்தனை பேர் புரிந்து கொள்ளச் சித்தமாக இருப்பார்கள்? 'வெயில் அழகாக இருக்கிறதாம்! மடையன்! சரியான மடச் சிகாமணி இவன். இந்த வெயிலில் இவன் மூளையும் இளகி நிற்கிறது போலும்!' என்று தானே எண்ணுவார்கள்?

அப்படிச் சொல்லக் கூடியவர்களுக்காக அனுதாபமே கொள்வார் அவர். 'மலரினில், நீலவானில், மாதரார் முகத்திலெல்லாம் அழகினை வைத்தான் ஈசன் எவனோ ஒரு ஓவியன் காண்பதற்காக என்று ஒரு மகாகவி பாடியிருக்கிறார். அந்தக் கலைஞன் மட்டும் தான் ரசிக்க வேண்டுமென்பதில்லை. கண்ணும் மனமும் காலமும் பெற்ற எவரும் ரசித்து மகிழலாம். கிருஷ்ண பிள்ளை இம்மூன்றையும் பெற்ற பாக்கியசாலியாகும்' என்று கிருஷ்ண பிள்ளையே உற்சாகமாகச் சொல்லுவார்.

கவிஞர்கள் பிறருக்குப் பைத்தியக்காரத்தனமாகத் தோன்றும் காரியங்களைச் செய்வதில் ஆர்வம் உடையவர்கள் என்று சொல்லப்படுவது உண்டு. கிருஷ்ணபிள்ளை வாழும் கவிஞர் என்பதை அவரது செயல்கள் நிரூபிக்கும்.

பொதுவாகப் பலரும் மாலை நேரங்களில் முன்னிரவில், கடற்கரை செல்வார்கள். பிள்ளையோ காய்கதிர்ச் செல்வன் அனல் அள்ளிச் சொரிந்து கொண்டிருக்கும் பட்டப்பகலில் 'பீச்சுக்குப் போய்', சுடுமணலைக் கடந்து, ஐஸ் மாதிரி ஜில்லென்று இருக்கும் அலை நீரில் நின்று களிப்பார். சாயங்காலம் அறை தேடி வந்து முடங்கிக் கிடப்பார். மழை 'சோ' என்று பிடித்து விளாசும்போது, கடல் மணலில் ஹாயாக உலாவிக்கொண்டிருப்பார். எதையாவது பார்த்துவிட்டு, அல்லது எண்ணிக் கொண்டு , 'ஆகா, இந்த நேரத்தில் நான் உயிரோடிருப்பதற்காக நான் மிகவும் ஆனந்திக்கிறேன்...ஆகா, வாழ்வது அதிர்ஷ்டமான விஷயம் தான்' என்பார். குதூகலம் கும்மாளியிடும் அவர் பேச்சிலே. அவருடைய மனப் பண்பு மற்றவர்களுக்கு - அவரோடு நன்கு பழகியவர்களுக்குக் கூட - புரியவில்லை என்றால் அவர் என்னதான் செய்ய முடியும்?

'கிருஷ்ண பிள்ளை வறண்ட பேர்வழி. அவர் வாழ்க்கையும் வறட்சியானதே' என்று, அவரை அறிந்தவர்கள் சிலர் அபிப்பிராயப்படுவது உண்டு. கோலக் கோதை துணையோடு குளுகுளு வாழ்க்கை அவர் வாழவில்லை; எந்த ஒரு பெண்ணும் அவரைக் காதலித்ததாகத் தெரியவில்லை; அவரும் காதலின்பம், இல்லறம் என்றெல்லாம் பேசுவதில்லை என்பதனாலேயே அவர்கள் அவ்விதம் கருதினர். பிள்ளையின் புற வாழ்வைக்கொண்டே அவர்கள் அவ்விதம் மதிப்பிட்டனரே தவிர, அவர் அவருக்காகத் தனியானதொரு அகவாழ்வு வாழ்கிறார் - அவரால் அப்படி வாழ முடியும் - என எண்ணினரல்லர்.

கிருஷ்ண பிள்ளைக்கு நாற்பது வயதுக்கும் அதிகமாகி விட்டது. அவர் கல்யாணம்செய்து கொள்ளவில்லை. கல்யாணம் செய்து கொண்டு எல்லோரையும் போல் வாழ்க்கை நடத்த வேண்டும் என்ற ஆசை தமக்கு இருப்பதாக அவர் காட்டிக் கொண்டதுமில்லை. சில உல்லாசிகளைப் போல் ஜாலி வாழ்வு வாழும் பண்பு பெறவுமில்லை அவர். அவருக்குச் சிநேகிதர்கள் என்று இரண்டு மூன்று பேர்கள் இருந்தார்கள். சிநேகிதி என்று ஒருத்தி கூட அவர் வாழ்க்கைப் பாதையில் குறுக்கிடவில்லை. இதெல்லாம் அவரைத் தெரிந்தவர்களுக்குத் தெரியாதா என்ன?

கிருஷ்ண பிள்ளையின் நண்பர் நாராயணனுக்கும் இது தெரியும். 'வறண்ட மனம் பெற்றவர் இவர்' என்று நம்புகிறவர்களில் அவரும் ஒருவர். வறண்ட கோடை போன்ற பிள்ளை வாழ்வில் அவ்வப்போது குளுமை பரப்புகின்ற மென்காற்று தாமே தான் என்ற எண்ணம் அவருக்கு. அடிக்கடி பிள்ளையைத் தேடி வந்து உற்சாகமாக உரையாடிச் செல்வார் அவர்.

அன்றும் நாராயணன் வந்தார். வழக்கம் போல் கிருஷ்ண பிள்ளை சோம்பிக் கிடப்பார், அல்லது, புத்தகமும் கையுமாய்க் காட்சி தருவார் என்று எண்ணிக் கொண்டு தான் வந்தார். ஆனால் அவர் எதிர்பாராததை - எதிர்பார்க்க முடியாததை - அன்று காண நேர்ந்தது; பிறகு கேட்கவும் நேர்ந்தது.



திருச்சிக்கு விஜயம் செய்த அஹோபில மடம் ஜீயர் அழகிய சிங்கர் சுவாமிகளைத் திருச்சியிலுள்ள ஆஸ்திகர்கள் குதூகலமாக வரவேற்றனர். சுவாமிகளுக்குத் தங்கள் காணிக்கையாக அவர்கள் வலம்புரிச்சங்கொன்றும் செலுத்தினர். ஜீயர் சுவாமிகள் வலம்புரிச் சங்கின் மகிமையைப் பக்தர்களுக்கு எடுத்துரைத்தார்.

---

அலமாரியிலிருந்தும் பெட்டிகளிலிருந்தும் புத்தகங்களை வெளியே எடுத்து எங்கும் பரப்பி யிருந்தார் கிருஷ்ணபிள்ளை. அவற்றிடையே ஏதோ எண்ண ஓட்டத்தில் தம்மை இழந்தவ ராய் அவர் காணப்பட்டார். இத் தோற்றம் நாராயணனுக்கு ஆச்சரியம் அளித்தது. அதை விட அதிக வியப்பாகத் திகழ்ந்தது, பிள்ளை தமது கையில் வைத்திருந்த ஒரு பொருள்.

அழகான சங்கிலி. சிறு சிறு மாம்பிஞ்சு களைக் கோத்து மாலையாக்கியது போன்ற சங்கிலி மஞ்சளாக மினுமினுத்தது. பொன் போல் தோன்றும் பொருள். ஆனால் தங்கமல்ல. நாகரிகப் போலி அணிகளில் ஒன்று. அது பூரணமாகவுமில்லை. அறுபட்டு நீளமாய் இருந்தது. புது மெருகுடன் பள பளக்கவுமில்லை அது. நாள் பட்டது போல் மங்கிப் பொலிவு குன்றிக் காணப்பட்டது.

'இதை ஏன் இவர் இப்படிப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்?' என்று குறுகுறுத் தது நாராயணன் மனம். 'என்னய்யா அது? பொன் சங்கிலி மாதிரி இருக்கு. ஏது உமக்கு?' என்று அவர் விசாரித்தார்.

கையிலிருந்த சங்கிலியைப் பார்த்தார் கிருஷ்ண பிள்ளை. நண்பரின் முகத்தைப் பார்த் தார். தொடர்ந்து அவர் கண்கள் வெறும் வெளியில் நீந்தின. பிறர் பார்க்க முடியாத எதையோ நோக்குவன போல் அவை நிலை பெற்று நின்றன. அவர் நீண்ட பெருமூச் செறிந்தார்.

'என்னய்யா, என்ன விசேஷம்?' என்று நண்பர் கேட்டார்.

'அலமாரி பெட்டியை யெல்லாம் சுத்தப் படுத்த ஆரம்பித்தேன். ஒரு பெட்டியில் புத்த கங்களுக்கிடையே ஒரு காகிதப் பொட்டலம் கிடந்தது. என்னடா என்று பார்த்தால், இந்தச் சங்கிலி. இது அங்கே இருக்கும் என்ற நினைப்பே எனக்கில்லை. திடீரென்று இதைப் பார்க்கவும், அடுக்கடுக்காய்ப் பழைய நினை வுகள் எழுந்து, உள்ளத்தில் கிளர்ச்சி உண் டாக்கிவிட்டன' என்று கூறிய பிள்ளை மீண்டும் பெருமூச்சு விட்டார். கனவுக் காட்சிகளைக் கண்முன் கொண்டு வர முயல்கிறவர் போல் யோசனையில் ஆழ்ந்து விட்டார்.

பிள்ளையின் போக்கு நண்பருக்கு அதிசய மாகப் பட்டது. என்ன விஷயம் என அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலைத் தூண்டி யது. 'இது.யார் சங்கிலி?' என்று கேட்டார்.

'உம்மிடம் சொல்வதற்கென்ன?' என்று முன்னுரை கூறினார் கி. பிள்ளை. 'நான் இது வரை யாரிடமும் சொன்னதில்லை. அந் நினைவு களை நான் மறந்து விட ஆசைப்பட்டேன். என் மனக் குகை ஆழத்தில் அது புதையுண்டு விட்டதாகவே தோன்றியது. ஆனால் இந்தச் சங்கிலி அந் நினைவைப் படம் எடுத்து ஆட வைக்கும் மகுடியாகி விட்டதே!....'

மீண்டும் ஒரு பெருமூச்சு. நாராயணன் பார்வை அவரை அதிசயமாகவும், புதிதாக ஒருவரைப் பார்ப்பது போலவும் தொட்டது. அதைப் பொருட்படுத்தாமல் கிருஷ்ணபிள்ளை பேசினார். தமது நினைவுகளை உரக்கச் சிந்திப் பவர் போல், தமக்குத் தாமே பேசிக் கொள் ளும் தொனியில், அவர் சொல்லலானார்.

'இப்போ சமீபத்தில் நிகழ்ந்தது போல் இருக்கு. யோசித்துப் பார்த்தால், பதினைந்து, பதினாறு வருஷங்கள் ஓடியிருப்பதாகப் புரி கிறது...ஊம்! காலம் ரொம்ப வேகமாகத் தான் ஓடுகிறது! அப்பொழுது எனக்கு இரு பத்தாறு வயசு. உமாவுக்கு என்ன, பதினேழு பதினெட்டு வயதிருக்கும். இருந்தாலும் அவள் சிறுமிதான். சரியான விளையாட்டுப் பிள்ளை....!'

'உமாவா? யார் அது? நான் அவளைப் பார்த்திருக்கிறேனா?' என்று கேட்டார் நாராயணன்.

'நீர் பார்த்திருக்க முடியாது. நான் அப் பொழுது வேறொரு ஊரில் தங்கியிருந்தேன். ஏதோ அழுது வடிந்த ஆபீஸ் ஒன்றில் என் னவோ இழவெடுத்த உத்தியோகம் என்று

வைத்துக் கொள்ளுமேன். ஆபீஸ், மேஜை, நாற்காலி எல்லா ஜபர்தஸ்துகளுக்கும் குறை எதுவும் கிடையாது. அதிகாரி என்று ஒருவர் இருந்தார். அவரோ வருஷத்தில் முக்கால் வாசி நாள் லீவில் போய் விடுவார். பியூன் ஊர் சுற்றப் போய் விடுவான். நான் மட்டும் தான். தனிக்காட்டு ராஜா என்பார் களே, அது மாதிரி. நான் சோம்பேறியாக வளர்ந்ததற்கு இப்படிப்பட்ட உத்தியோகங் களே எனக்குக் கிடைத்து வந்ததும் முக்கிய காரணமாக இருக்க வேண்டும்.

ஆபீஸ் இருந்த வீட்டை ஒட்டி இன்னொரு வீடு. இரண்டுக்கும் ஒரே வராண்டா. அந்த வீட்டை ஒளியுறுத்திக் கொண்டிருந்தவள் தான் உமா. என் வாழ்விலும் மின்னல் போல் பளிச்சிட்டு மறைந்த பெருமை அவளுக்கு உண்டு. நான் எப்பொழுதும் போல் தான். சதா ஏதாவது ஒரு புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டிருப்பது வழக்கம். அந்தப் பெண் அடிக்கடி கவனித்திருக்கக் கூடும். ஒருநாள் ஒரு சிறுவனை அனுப்பி, படிப்பதற் குப் புத்தகம் வேண்டும் என்று கேட்டாள். கொடுத்தேன். இரண்டொரு நாள் பையன் வந்து போனான். பிறகு அவளே நேரில் வாசல் படி மீது வந்து நின்று புத்தகம் கேட்கத் துணிந்தாள். அப்புறம் மேஜை அருகிலேயே வர ஆரம்பித்தாள். படித்த கதைகளைப் பற்றி உரையாட முன்வந்தாள். பின், வம்பாடு வதில் உற்சாகம் காட்டினாள். திடீரென்று ஒருநாள் டம்ளரும் கையுமாக அழகு நடை நடந்து வந்தாள். 'இப்ப நான் என்ன கொண்டு வரேனும்' என்று குழைவுக் குரலில் இழுத்தாள்.

'எனக்கெப்படித் தெரியும்? ஃபஸ்ட்கிளாஸ் காப்பியாக இருந்தால் ரொம்ப நன்றி சொல் வேன்' என்றேன்.

'வேறு எதுவாகவாவது இருந்தால் சாப் பிட மாட்டீர்களா?' என்றாள் அவள். அவள் முகத்தில் சிறிது வாட்டம் படர்ந்தது. 'உங்க ளுக்குப் பாயசம் பிடிக்காது?' என்று தயங் கியபடியே கேட்டாள்.

'பேஷாகப் பிடிக்குமே!'

'இன்று எங்கள் வீட்டில் விசேஷம். இந்தப் பாயசம் நானே தயாரித்ததாக்கும்' என்று உமா டம்ளரை நீட்டினாள். நான் பருகி முடிக் கும் வரை பார்த்தபடி நின்று விட்டு, 'எப்படி இருக்கிறது?' என்று ஆவலோடு கேட்டாள்.

'உன்னைப் போல் இருக்கிறது - ஜோராக. உன் பேச்சைப் போல் இனிச்சுக் கிடக்குது' என்றேன்.

'ஐயே மூஞ்சி?' என்று சொல்லி, டம்ள ரைப்பிடுங்கிக் கொண்டு ஓடினாள். அவளுக்குக் கோபம் இல்லை. ஆனந்தம் தான் என்பதை அவள் முக மலர்ச்சியும், துள்ளலும் குதிப்பும் காட்டிக் கொடுத்தன.

இப்படிக் கொஞ்சம் கொஞ்சமாய் இது வளர்ந்து வந்தது. அடிக்கடி காப்பி, கேசரி பாயசம் என்று எதையாவது எடுத்து வந்து, 'நான் செய்ததாக்கும். நான் செய்தேன்' என்று விநியோகம் பண்ணுவாள். என் புகழ்ச் சியை ஆவலோடு எதிர்பார்ப்பாள். நாளடை வில் அவள் ஒரு தொல்லையாகவே மாறி விட்டாள். 'ஓயாமல் என்ன படிப்பு? நான் தலையைக் காட்டியதுமே புத்தகத்தை மூடி விட வேண்டாமா?' என்று சொல்லி, நான் படிக்கும் புத்தகத்தைப் பிடுங்கி வீசிவிடுவாள். எனக்கு வரும் கோபத்தைக் கண்டு கலகல வெனச் சிரிப்பாள். உமாவின் போக்கு எனக்கு வருத்தம் அளித்தாலும் அவள் பேச்சும் சிரிப் பும் மிகுந்த மகிழ்வுதான் தந்தன. 'இன்பக் கதைகள் எல்லாம் உன்னைப் போல் ஏடுகள் சொல்வதுண்டோ?' என்று அவள் கன்னத் தைத் தட்டி, விளையாட்டாகக் கிள்ள வேண் டும், நீண்டு தொங்கும் பின்னலைப் பிடித் திழுக்க வேண்டும் என்ற துடிப்பு எனக்கு எழும். அதைத் தடுத்து விடும் உறுதி எனக்கு இருந்ததுமில்லை. ஆ, சென்றுபோன அந்த இன்ப நாட்கள்!'

கிருஷ்ண பிள்ளை நினைவுச் சுழலிலே சிக்கி விட்டார் என்று தோன்றியது. சிறிது நேரம் ஒன்றுமே பேசாமல் இருந்தார் அவர்.

'சரி ஐயா, இந்தச் சங்கிலியைப் பற்றிக் கேட்டால் நீர்பாட்டுக்கு அளக்க ஆரம்பித்து விட்டீரே?' என்று கெண்டை பண்ண ஆசைப் பட்டார் நாராயணன். 'மனுசன் வன்னு எரிஞ்சு விழுந்தாலும் விழுவான்! அவன் போக்கிலேயே சொல்லட்டுமே' என்று அவர் மனம் லகானைச் சுண்டியது.

கிருஷ்ண பிள்ளை தொடர்ந்து சொன்னார்: ஒரு சமயம் நான் சுவாரசியமாக ஒரு புத்தகம் படித்துக் கொண்டிருந்தேன். உமா பூனை போல் வந்திருக்கிறாள். அது எனக்குத் தெரி யாது. படீரென்று புத்தகத்தைப் பிடித்து இழுக்கவும் நான் திடுக்கிட்டேன். அவள் விஷமச் சிரிப்போடு அதை வெடுக்கென்று பிடுங்கினாள். நான் பலமாகப் பற்றியிருந் தேன். எங்கள் பலப் பரிசோதனையில் நடுவே இண்டாடிய புத்தகத்தில் ஒரு தாள் கிழிந்து விட்டது. அருமையான புத்தகம் பாழாகி விட்டதே என்ற ஆத்திரம் எனக்கு. வெறி உணர்வோடு அவள் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை கொடுத்தேன். 'சனியன்! படிக்கையிலே வந்து தொந்தரவு கொடுப்பது மில்லாமல், புத்தகத்தை வேறே நாசமாக்கி விட்டதே' என்று முணுமுணுத்தேன். அவள் முறைத்து நோக்கினாள். 'அதற்காக இப்படித்தான் பேய் மாதிரி அறையணுமோ? சாந்தமாகச் சொல்றது!' என்று முனகி விட்டு வெளி யேறிவிட்டாள்.

கிழிபட்ட புத்தகத்தைப் பார்க்கப் பார்க்க எனக்குக் கோபமும் ஆத்திரமும் இருந்த போதிலும், அறிவு தன் குரலைக் காட்டவா யிற்று. 'அவளை நான் அடித்தது தப்பு. கை நீட்டி அடித்திருக்கக் கூடாது. அந்நியனான ஒரு பெண்ணைத் தொட்டு அடிப்பது என்றால் மற்றவர்கள் என்ன சொல்ல மாட்டார்கள்?' என்றெல்லாம் என் எண்ணமே என்னைச் சுட் டது. அதனால் மனக் குழப்பமும் வேதனையும் ஏற்பட்டன. எனக்கு வேறு வேலையே ஓட வில்லை. அவளே நினைவாகி என் உள்ளத்தை நிறைத்து நின்றாள். அவள் திரும்பவும் வந்த தும் அவளிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று நினைத்தேன்.

அவள் பிறகு அன்று முழுதும் எட்டிப் பார்க்கவே யில்லை. மறு நாளும் உமா வர வில்லை. அடிக்கடி வந்து, விளையாட்டுகள் காட்டி, இனிக்க இனிக்கப் பேசும் யுவதி வரா மல் நின்றுவிட்ட பிறகே, அவள் என்

ஆதரவுடன் சீராட்டி

# ஆஸ்டர்மில்க்

பாலூட்டி ...

உங்கள் ஆசைக் கண்மணியின் பாக்கியம்: ஆஸ்டர் மில்க் அளிக்கும் ஆரோக்கியம். காரணம், தாய்ப் பாலுக்கு நிகரானது ஆஸ்டர்மில்க். பரிசுத்தமான பாலிலிருந்து தயாரிக்கப்பட்டுள்ள ஆஸ்டர்மில்க், பாப்பாவின் பச்சிளம் ஜீரண சக்திக்கேற்பப் பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது. தவிர, பற்களும், எலும்புகளும் நன்கு வளர்ச்சிபெறுவதற்கான வைட்டமின் 'டி'யும் இரத்த சோகை தட்டாமல் காப்பதற்கான அயச்சத்தும் அதில் சிறப்புறச் சேர்க்கப்பட்டுள்ளன.




...தாய்ப் பாலுக்கு நிகரானது.

இலவசம்: 'ஆஸ்டர் மில்க் புத்தகம்' (ஆங்கிலப் பிரதி)...
...விரிவுமிக்க, குழந்தைப் பராமரிப்பு நூல் ...தபால் செலவுக்காக 50 ந. பைசாத் தபால் வில்லைகள் இணைத்து, எழுதுக: 'ஆஸ்டர்மில்க்' தபால் பெட்டி எண் 2120, சென்னை-2.

OS. 8-X51-M. TM

பொழுதை எப்படிப் பொன் மயமாக்கிக் கொண்டிருந்தாள் என்பது புரிந்தது. அவள் வராததனால் வெறுமையாகி விட்ட காலம் கனமையாய்க் கனத்துத் தொங்கியதாகத் தோன்றியது. 'உமா, நீ இனிமேல் வரவே மாட்டாயா?' என்று ஏங்கியது என் உள்ளம்.

மறுநாள் அவள் வந்தாள் - இருட்டறையில் புகும் ஒளிபோல. ஒளி வெள்ளத்தில் மினு மினுக்கும் எழில் மலர்போல் திகழ்ந்தாள் அவள். என் உள்ளத்தைத் தாக்குகின்ற ஒரு படையெடுப்புமாதிரி வந்து, அசைந்தாடி, செயல் புரிந்த உமாவின் பார்வையும் சிரிப்பும் அசைவும் நெளிவும் என்னைக் கிளர்ச்சியுறச் செய்தன. 'உமா, என்னை மன்னித்து விடு' என்றேன். 'மன்னித்தோம்' என்று ஒரு ராணியின் மிடுக்கோடு அவள் சொன்னாள். அருவியெனச் சிரிப்பை அள்ளித் தெளித்தாள். பிறகு, இயல்பான சுபாவத்தோடு பேச்சை எங்கெங்கோ திருப்பி விட்டாள்.

அவளுக்கு என் மீது அளவற்ற அன்பு என்று எனக்குப் புரிந்து விட்டது. எனக்கு அவளிடம் ஆசை ஏற்பட்டிருந்தது. அவளைக் காண முடியாத நாளெல்லாம் பலனற்ற நாளே என்றும் பட்டது. என் வாழ்வைப் பயனுள்ளதாக, இனிமை நிறைந்ததாக மாற்றுவதற்கு அவள் என் துணைவியாகவேண்டும் என்று என்மனம் ஜபம் புரியத் தொடங்கியது. அவளுக்கும் அந்த ஆசை இருந்தது. அதை நான் சிறிது சிறிதாக உணர்ந்து கொள்ள முடிந்தது.......

ஒரு நாள் உமா ஒய்யாரமாக வந்து நின்றாள். 'இன்று என்னிடம் என்ன புதுமை சேர்ந்திருக்கிறது, சொல்லுங்கள் பார்க்கலாம்' என்றாள். நான் அவளை மேலும் கீழுமாக நோக்கினேன். எனது தாமதத்தையும் மௌனத்தையும் பொறுக்க முடியாதவளாய் அவள் கத்தினாள். 'ஏ மக்கு! கண்ணு கூடத் தெரியலியா என்ன?' என்று கேட்டு, அவள் விரலால் கழுத்தைச் சுட்டினாள். மாம்பிஞ்சுகளைக் கோத்து ஆரமாக்கியது போன்ற இந்தச் சங்கிலி அவள் கழுத்தைச் சுற்றி மின்னி அழகு செய்தது. என் கண்கள் மகிழ்வின் சுடரொளி காட்டின. 'ஆகா, ரொம்ப அழகாக இருக்கிறது, உமா. ஜம்மென்று, ஜோராக இருக்கு' என்று பாராட்டினேன்.

அவளுக்கு மகிழ்ச்சியாவது மகிழ்ச்சி! நீரூற்றுப் போல் பொங்கிப் பொங்கி வழிந்தது குதூகலம். அவளை கும்மாளமிட்டுக் குதிகுதி என்று குதித்தாள். ஆடிப் பாடினாள். அந்த உற்சாகத்தில் அவள் என்னவோ சேட்டை செய்யவும் எனக்கு எரிச்சல் வந்தது. என் ஆத்திரத்தைத் தூண்டி ஆனந்தம் அடைய விரும்பியவளாய் அவள் மேலும் விஷமம் செய்தாள். நான் அவள் தலைப் பின்னலைப் பிடித்து இழுத்து, மண்டையில் நறுக்கென்று ஓங்கிக் குட்டுவதற்காகக் கை வீசினேன். அவள் இரட்டைப் பின்னல்போட்டு, ஒன்றைக் கழுத்தின் பக்கமாக முன்னே தொங்க விட்டிருந்தாள். வேகத்தில் என் கை கழுத்துச் சங்கிலியையும் சேர்த்து இழுத்து விட்டது. சங்கிலி அறுந்து போயிற்று. இதை நானோ, அவளோ எதிர்பார்க்கவில்லை.

முழுதலர்ந்த பெரிய புஷ்பம் போல் களி துலங்கப் பளிச்சிட்ட அவள் முகம் அனலில்



'' சினிமா விமரிசனத்தில் என் நடிப்பில் முன்னேற்றம் என்பதற்கு, நடிப்பில் முன்னேற்றம் என்று போட்டு விட்டீர்களே ?''

சுடப் பெற்ற கத்திரிக்காய் மாதிரிச் சுருங்கிக் கறுத்தது. அவள் கண்களில் நீர் வழிந்தது. உதடுகள் துடித்தன. 'என் சங்கிலியை அறுத்து விட்டீர்களே. அம்மாவிடம் நான் என்ன சொல்வேன்?' என்று துயரத்தோடு முணுமுணுத்தாள் உமா.

என் புத்தகத்தை அவள் கிழித்துவிட்டாள் என்று நான் அடைந்த கோபமும் வெறியும் என் நினைவில் மின்வெட்டின. அவள் இப்போது சீறிப் பாய்ந்திருக்கலாம். வெகுண்டு ஏசியிருக்கலாம். வெறியோடு எதையாவது எடுத்து என் மூஞ்சியில் வீசி அடித்திருக்கலாமே. அவள் அவ்வேளையில் எது செய்தாலும் அது நியாயமாகத் தான் இருந்திருக்கும். ஆனால் அவளோ வேதனையால் குமைந்து குமுறினாள். கண்ணீர் வடித்தபடியே வெளியேறினாள். அறுந்த சங்கிலியை எடுத்துச் செல்லவுமில்லை.

விதி என்று ஒன்று இருக்கத்தான் செய்கிறது. அது மனிதர் வாழ்க்கையில் குறுக்கிட்டு விளையாடுவதில் அதிக உற்சாகம் காட்டுகிறது என்றும் தோன்றுகிறது. நமக்குப் புரியாத - நம்மால் புரிந்துகொள்ள முடியாத - பல விஷயங்களுக்கு நாம் இப்படித்தான் சமாதானம் கூறிக்கொள்ள வேண்டியிருக்கிறது.

உமாவை என் வாழ்க்கைப் பாதையில் குறுக்கிட வைத்த விதி குரூரமாக விளையாடி விட்டது என்றே சொல்ல வேண்டும்.

சங்கிலியை வாங்கிக்கொள்ள உமா வருவாள் என்று நான் எண்ணியிருந்தேன். மறுநாள் அவள் வீடு பூட்டிக் கிடக்கக் கண்டேன். உமாவும் அவளது பெற்றோரும் அயலூர் எங்கோ போயிருப்பதாகத் தெரிந்தது. அவள் திரும்பி வருவதற்குள் சங்கிலியை ஓர் ஆசாரியிடம் கொடுத்துச் சரியாகப் பற்ற வைத்து விடலாம் என்று நான் ஆசைப் பட்டேன். நாளைக்குப் பார்க்கலாம்; நாளை ஆகட்டும் என்று வாய்தா போட்டு வந்தேன். அதற்கு அவசியமே இல்லாமல் போய் விட்டது, முடிவில்.

அவர்கள் சென்றிருந்த ஊரில், வேகமாகப் பரவிய விஷ ஜுரத்துக்கு உமாவும் பலியாகி விட்டாள் என்று செய்தி கிடைத்தது. எனக்

குப் பெருத்த அதிர்ச்சி ஏற்பட்டது. ஆற்ற முடியாத பெருந்துயரை அடைந்து விட்ட தாகவே கருதினேன். பாவிகள் எவ்வளவோ பேர் இருக்க, சாவு எனும் தண்டனையை அடைய வேண்டிய கயவர்கள், கொடிய வர்கள் எவ்வளவோ பேர் இருக்க, புது மலர் போன்றவளை - வாழ்வின் வாசல் படியிலே இப்பொழுதுதான் அடியெடுத்து வைத்திருந்த யுவதியை - களங்கம் எதுவும் இல்லாத இனி யாளை - பாவ நினைப்பையே அறிய முடியாத புனிதத்தை மரணம் ஏன் திருடி எறிய வேண் டும்? இந்த உலகத்தில், மனித வாழ்க்கையில் நீதி நியாயம் தர்மம் என்பதெல்லாம் உண் மையாகவே செயல்படுகின்றனவா?

இவ்வாறு அடிக்கடி என் மனம் உளையும். எனது வாழ்வே அர்த்தமற்றுப் போனதாகத் தோன்றியது. உமாவோடு நிகழ்ந்த கடைசிச் சந்திப்பு வேதனை தந்ததாக அமைந்ததே என்ற வருத்தம் வேறு. எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருந்தது. நான் அந்த ஊரைத் துறந்து எங்கள் சொந்த ஊரை அடைந்தேன். அமைதி என்பதை அறிய முடி யாத சுழல் காற்றைப் போல் அங்குமிங்கும் அலைந்து திரிந்தேன். பலப்பல வேலைகளைப் பார்த்தேன். காலம் எனும் வைத்தியன் என் மன வியாதியை ஒருவாறு குணப்படுத்தினன். ஆயினும் நான் உமாவை முற்றிலும் மறந்த வனல்லன். அவள் நினைவு கோயில் கொண்டு விட்ட என் உள்ளத்திலே வேறு எந்தப் பெண் ணுருவமும் எட்டிப் பார்த்து இடம் பிடிக்க முடியவில்லை..."

கிருஷ்ண பிள்ளை பெருமூச்செறிந்தார். "இந்தச் சங்கிலியை ஏதோ ஒரு பெட்டியில் போட்டிருந்தேன். அதை நான் மறந்தே போனேன். இன்று தற்செயலாக இது என் கையில் கிட்டியது' என்றார்.

'காவியத்தில், கதைகளிலே வருவதுபோல் இருக்கிறது. சாதாரண நபராகத் தோன்றும் உம்முடைய வாழ்வில் கூடச் சோக காவியம் அரங்கேறி, திடுமென முற்றுப் பெற்று விட் டது போலும்! அல்லது, இன்ப நாடகம் தொடக்கமாகிச் சோகக் கதையாக முடிந்து விட்டது என்று சொல்லலாம்' என்று நாராய ணன் கூறினர். 'எனக்கு உம் மீது பொறாமை உண்டாகிறது ஐயா. உண்மையாகத் தான் சொல்கிறேன். உம்மை ஒருத்தி காதலித்தாள். காதலித்த பெண்ணுக்காக நீர் உமது வாழ்க் கையையே தியாகம் செய்து கொண்டிருக் கிறீர். இச் சங்கிலி - புனிதமான காதல் சின்னம் - ஒரு காவியப் பொருளாகவே தோற் றம் அளிக்கிறது' என்றார். இன்னும் விரிவாகப் பேசிவிட்டுப் போனர்.

அவர் போன பிறகும் சிந்தனையில் ஆழ்ந் திருந்தார் கிருஷ்ணபிள்ளை. 'ஊம். கொடுத்து வைக்கவில்லை! நான் கதையாகச் சொன்ன நிகழ்ச்சியை யெல்லாம் நானே என் வாழ்வில் அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை! என்றோ ஒரு நாள் ரயில் வண்டியில், பெஞ்சு அடியில் கண்டெடுத்த காகிதப் பொட்டலத் தில் இருந்தது இந்தச் சங்கிலி. எந்தச் சிறு பெண் அணிந்ததோ! அறுபட்டு, மறதியாக யாரால் விடப்பட்டதோ? உமா என்றொரு விளையாட்டுப் பெண் என் வாழ்வில் குறுக்கிட் டிருந்தால், என் வாழ்க்கை இன்னும் இனிமை மிக்கதாக - பசுமை நிறைந்ததாக - வளமுற் றிருக்கக் கூடும். காலம் தான் வஞ்சித்து விட் டதே!' என்று முணுமுணுத்தார்.

அவருக்குச் சிரிப்பு எழுந்தது. 'நாராய ணன் நம்பி விட்டான்! ஆளுக்குள்ளே ஆள் என்பது போல, கிருஷ்ண பிள்ளையின் உள்ளே புதிரான, மர்மமான ஆள் மறைந்திருப்பது நமக்கு இத்தனை நாட்கள் தெரியாமல் போய் விட்டதே என்று எண்ணுவான். வேண்டிய வர்கள், தெரிந்தவர்களிடம் எல்லாம் இதைச் சொல்லுவான். நாமும் எல்லோரிடமும் இதே பிளேட்டை வைக்க வேண்டியது தான். அங் கங்கே கதை சேர்க்கும் நகாச வேலைப்பாடு களைக் கூட்டிக் கொண்டால், இன்னும் ரசமாக இருக்கும்!' என்று அவர் எண்ணினர்.

கிருஷ்ண பிள்ளைக்குக் கை கொஞ்சம் நீளம் தான் - பிறர் பாக்கெட்டில் போட்டு வெற்றி கரமாக வெளியே எடுக்கிற அளவுக்கு அல்ல! தனது முதுகில் தானே தட்டிக் கொள்கிற அளவுக்கு நீளம்!

நாளடைவில், உமா என்றொரு காதலி அவருக்கு நிஜமாகவே இருந்தாள், அவள் அவர் வாழ்வின் சிறு பகுதியை இன்ப வசந்த மாக மாற்றி விட்டு, திடீரென்று மறைந்து போனள் என்று கிருஷ்ண பிள்ளையே நம்ப ஆரம்பித்து விடுவார். அதுவும் அவர் ஆற்ற லுக்கு ஏற்றதாகத்தான் இருக்கும்.

# தீபாவளி வெளியீடு



கனகா பிலிம்ஸ்

# பாக்கிய லக்ஷ்மி

பாடல்கள் - கவிஞர் கண்ணதாசன்
சங்கீதம் - விஸ்வநாதன் - ராமமூர்த்தி

கதை, வசனம்
டைரக்ஷன் - K.V. சீனிவாசன்

**நாராயணன் கம்பெனி** தயாரிப்பு

# உங்களுடைய தேய்ந்த டயர்களை
# சுந்தரம் இண்டஸ்ட்ரீஸில்
## ரீட்ரெட் செய்யுங்கள்

டிவிஎஸ்ஸில் தேய்ந்த டயர்களைப் 'புதுப்பித்தால் அவை புது டயர்களைப் போலவே நீடித்து உழைக்கும். ஏனெனில்'



மிக உயர்ந்த கூடுதலான கனமுள்ள காமெல் - பாக் டிரெட் ரப்பரையே டிவிஎஸ் உபயோகிக்கிறார்கள்



டிவிஎஸ் குளிர்சாதன அறைகளில் காமெல்-பாக் உலராமலிருக்கின்றன. ஆகையால் உழைப்பு நீடிக்கிறது



ரீட்ரெடிங் செய்வது எளிதன்று; அது நிபுணர்களின் வேலை. டிவிஎஸ் தொழிற்சாலையில் தேய்ந்து போன டயர்களை ரீட்ரெடிங் செய்வதற்கு நவீன நுண்ணிய இயந்திரங்களை அமைத்துள்ளார்கள். தேர்ச்சி பெற்ற நிபுணர்கள் அவற்றை இயக்குகின்றனர். விசேஷ "பாண்டிங்" முறையினால் டிவிஎஸ்ஸில் புதுப்பிக்கப் பெறும் டயர்கள் புத்துயிர் பெறுகின்றன. ஒவ்வொரு டிரக் டயரையும்—உரிய காலத்தில் செய்தால்—மூன்று முறை ரீட்ரெட் செய்யலாம்.



ரீட்ரெட் பணியில் சிறந்தவர்கள்

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்**
**பிரைவேட் லிமிடெட்**

(டி.வி.எஸ். ஸ்தாபனம்)




புதுக்கோட்டை - மதுரை
கோயமுத்தூர் - பெங்களூர்

JWT/SI-RD-1441a

# வாழும் வர்ணனைகள்

7. கு. அழகிரிசாமி

## கிராமத்துக் கிழவி

காளியம்மாளுக்கு இந்த ஐம்பத்தாறு வருஷங்களிலும் எத்தனையோ அனுபவங்கள் ஏற்பட்டிருக்க வேண்டும். எத்தனையோ உணர்ச்சிகள் பிறந்திருக்க வேண்டும். எத்தனையோ உணர்ச்சிகள் செத்திருக்கவும் வேண்டும். ஆனால் அவள் எந்த ஒரு நாளிலும் திக்குத் திசை தெரியாமல் தத்தளித்ததில்லை. 'என்ன செய்வேன்?' என்று அவள் நினைத்ததே கிடையாது. இருபத்தைந்து வருஷங்களுக்கு முன் அவள் கணவன் செத்தான். நாலு வயதுப் பிள்ளையை வைத்துக் கொண்டு 'நடுத் தெருவில்தான்' நின்றாள். அப்பொழுது அவள் கண்ணீர் விட்டு அழுதாலும் மனம் கலங்கவில்லை. பாதுகாப்பான ஒரு கோட்டைக்குள் ஆயுள் முழுவதும் போதிய சேமிப்புக்களோடு வாழ்க்கை நடத்துவது போலவே அவளுக்குத் தெம்பும், நம்பிக்கையும் இருந்தன. இந்த ஐம்பத்தாறு வருஷங்களில் எத்தனை வருஷங்கள் பருவ மழை இல்லாமல் போயிருக்கும்! எத்தனை வருஷங்கள் மழையின்றி வாடிக் கருகும் பயிர்களையும், செடிகளையும் பார்த்திருப்பாள்! இரண்டணாக் கூலிக்கும் வேலை கிடைக்காமல் எத்தனை இரவுகள்பட்டினியோடு கதவைச் சாத்திப் படுத்திருப்பாள். இத்தனையையும் அலட்சியமாகத் தாண்டித்தான் இந்த ஐம்பத்தாறுவது வயதில் அவள் அடியெடுத்து வைத்திருக்கிறாள்.

## இளமை நினைவுகள்

திருநெல்வேலி எக்ஸ்பிரஸில் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன் — அதுவும்பூரணஆரோக்கியத்தோடு. வண்டி மதுரையைத் தாண்டி அரை மணி நேரத்துக்கு மேல் ஆகி விட்டது. ஒவ்வொரு ஸ்டேஷனையும் பதினைந்து வருஷங்களுக்குப் பிறகு அப்போது தான் முதன் முதலாகப் பார்க்கிறேன். வண்டி தெற்கே செல்லச் செல்ல, ஸ்டேஷன்களை எட்டிப் பார்ப்பதில் அக்கறை குறைந்து விட்டது. இதற்கு முன் அந்த மார்க்கத்தில் நான் செய்த பிரயாணம், அந்தப் பிரயாணத்துக்கு முந்திய என் இளம் பிராயம்—இந்த இரண்டையும் பற்றிய ஞாபகங்களே சிந்தையில் குவிந்தன. அன்று நான் பெற்றோரின் துணையுடன் செல்லும் பன்னிரண்டு வயதுப் பையன், பள்ளி மாணவன். இன்றோ, இருபத்தேழு வயது இளைஞன்; வியாபாரி. இந்த இரண்டு கட்டங்களையும் பக்கம் பக்கமாக நிறுத்திப் பார்க்கும் போது ஏற்பட்ட உணர்ச்சி துக்கமோ, ஆனந்தமோ — எது என்று எனக்கே தெரியவில்லை. பெருமூச்சு விட்டேன். கண்கள் நனைந்தன. மௌனமாக உட்கார்ந்துகொண்டு பூமியைப் பார்க்காமல் வான வெளியைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.



## விமர்சகர்

ஜாமணி எக்காரணத்தை முன்னிட்டும் தம் சொந்த அபிப்பிராயத்தை விட்டுக் கொடுக்காதவர் என்பது எழுத்துலகில் பிரசித்தம். முயலுக்கு மூன்று கால் என்று எழுதிவிட்டால் அப்புறம் அவராகத் தவற்றைக் கண்டுபிடித்துத் திருத்தினால்தான் உண்டு. மற்றவர்கள் அதைச் சுட்டிக் காட்டி, 'நாலு கால்' என்று திருத்திச் சொன்னால் அவர் ஒப்புக் கொள்ளாததோடு மட்டுமல்ல; "உம்மைப் போன்றவர்களுக்காகத்தான் புண்ணியத்துக்கு மூன்று கால் என்று எழுதி வைத்தேன். இல்லையென்றால் இரண்டு கால் என்றே எழுதியிருப்பேன்" என்று அடித்துச் சொல்லவும் செய்வார். இப்படிப்பட்ட பேச்சையும் ரஸித்துக் கொண்டாடும் சில வாசக நேயர்களும், சில சக எழுத்தாளர்களும், தமிழன்னையின் மணி வயிற்றில் பிறந்திருப்பதால் ஜாமணியின் எழுத்துக்களுக்கு இன்னும் ஓரளவாவது கிராக்கி இருந்து கொண்டு வருகிறது. அவருக்குப் பிடிக்காத ஒருவர் எழுதிய புத்தகத்துக்கு அவர் மதிப்புரை எழு

னுரென்றால் அந்தப் புத்தக ஆசிரியர் தூக்குப் போட்டுக் கொண்டு சாக வேண்டுமென்றும், புத்தகத்தை வெளியிட்டவர் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாக வேண்டு மென்றும் நினைத்துக் கொண்டே கடுமையாகத் தாக்கி எழுதி விடுவார்.

## நீண்ட பிரிவு

மேற்கே அடிவானத்தை நோக்கி நழுவும் ஐந்தாம் நாள் பிறை, சிக்கும் முடிச்சுமாகப் பின்னி வளர்ந்த மூங்கில் மரங்களின் வேலியைக் கடக்கத் தயங்குவது போலக் காணப்பட்டது. நல்ல இருள். அதைத் தன் பலவீனமான சக்தியைப் பிரயோகித்துப் பிறை நிலவு போக்கடிக்க முயன்றதில் கிடைத்த வெற்றியையும், தோல்வியையும் ஒருங்கே புலப்படுத்துவது போன்ற மங்கலான, இருள் — கலப்படமான, வெளிச்சம் எல்லா இடங்களிலும் பரவி யிருந்தது.

இதனால் கண்ணுக்குத்தெரியும் வஸ்துக்களும் தெளிவாகப் புலப்படாமல் இருந்தன. தெரிந்தும், தெரியாமலும் இருக்கும் இந்த மயக்க நிலையினால் அடுத்த வீட்டுப் புகைப் போக்கிக் குழாய் கூட எங்கோ தூரத்தே உள்ள நகரொன்றில் மாட கூடங்களின் நடுவில் தோன்றும்கோபுர கலசம்போலத் தோற்றம் அளித்தது. எதைப் பார்த்தாலும் கிருஷ்ணமூர்த்திக்குக் கனவும் கற்பனையுமாக இருந்தன. அவனுடைய உள்ளம் தன் தீராத பசிக்கு விருந்தாக ஒரு நட்சத்திரத்தையோ, ஓர் ஒளிப் புள்ளியையோ பார்த்த மாத்திரத்தில் இரை தேடும் மீனைப் போலப் பளிச்சென்று அதை நோக்கிப் பாயும். அப்புறம் எங்கோ ஓர் ஆழம் காணாத அகட்டில் சென்று உலாவிக் கொண்டிருக்கும்.

உலகத்து ஜடங்களுக்கு இத்தனை மோகனமும், இத்தனை ஆழமும் இதற்கு முன் என்றும் இருந்திருக்க முடியாது என்று தோன்றியது கிருஷ்ணமூர்த்திக்கு. காரணம் மறுநாளையப் பிரிவு; அடுத்த சந்திப்பை வேறு யுகத்துக்கே மாற்றிப் போடுவது போன்ற ஒரு நீண்ட பிரிவு.

## 'மாமா'ங்கம்

"என் மாமா ஓர் 'அல்காப்' பேர்வழி. சோம்பேறித்தனம், போக்கிரித்தனம், அயோக்கியத்தனம் என்பன போன்ற குணங்கள் எல்லாம் அவரிடம் வகைக்குக் கொஞ்சம் உண்டு. காரண காரியமில்லாமலே தம்முடைய மோசமான குணங்களில் ஒன்றைக் காட்ட ஆரம்பித்து விடுவார். எவனாவது ஒருவனுடன் வீண் சண்டை போடா விட்டால் அன்று அவருக்கு என்னவோ போல் இருக்கும்.

மாமாவுக்கு வயது இருபத்தெட்டு; என்னைவிட நான்கு வயது மூத்தவர். அவருக்கு ஏதோ கொஞ்சம் எழுதப் படிக்கத் தெரியும். வேலை எதுவும் கிடையாது. சாப்பிட வேண்டியது, ஊர் சுற்ற வேண்டியது, மடத்தில், துண்டை விரித்துத் தூங்க வேண்டியது, இவரைப் போன்ற ஒரு வேலையற்றவனோடு உட்கார்ந்து தாயம் விளையாட வேண்டியது — இப்படியாக அவர் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தார்;

ஆனால் இந்தமாதிரி வாழ்க்கை நடத்துவதற்குப் பெற்ற தகப்பனோ, அல்லது முப்பாட்டனோ கப்பல் வியாபாரிகளாக இருந்திருக்க வேண்டும். ஆனால் என் மாமாவின் தகப்பனாரோ கப்பல் வியாபாரியுமல்ல; கத்திரிக்காய் வியாபாரியுமல்ல; எட்டு ஏக்கர் கரிசல் மண்ணுக்கு அதிபதி. அவ்வளவுதான். இந்த மாதிரியான மகனை வைத்துக் காப்பாற்ற அவரால் முடிய வில்லை.

## யுகம் கண்ட தம்பதிகள்

இரவு நேரம். நிலா புறப்பட்டு விட்டது. மாளிகையின் பின்புறத்திலே ஆம்பல் இதழ் அவிழ்த்த தடாகத்தின் ஓரத்திலே ஒரு பொன்னூசல். மலர் மாலைகளால் சுற்றப்பட்ட பொற் கயிறுகளில் இணைத்த பலகை, நவரத்தினங்கள் இழைத்த ஸ்வர்ண பீடமாகத் திகழ்கிறது. அசைவது தெரியாமல் அசைந்து ஆடும் அந்தப் பொன்னூசலில், இந்த யுகம் கண்ட தம்பதிகள் ஆடிக் களிக்கிறார்கள். எங்கிருந்தோ இரண்டு பேர்கள் பாடுகிறார்கள். ஒன்று ஆண் குரல், மற்றொன்று பெண் குரல்.

இரண்டும் தம்புராவின் சுருதி ஒலியில் இழைகின்றன. மூன்று ஒலிகளும் ஒன்றுகின்றன. மூவிழைகளால் திரித்த மங்கல நாண் போல இருக்கிறது இசை. பாடுகின்ற குரல்கள் மட்டுமா ஒன்று போல இருக்கின்றன? பாடுகின்றவர்களின் உள்ளங்கள், பாடுகின்றவர்களின் அபிலாஷைகள், பாடுகின்றவர்களின் சகலமுமே ஒன்றுபோலத்தான் இருக்கின்றன. பொன்னூசல் அசைவின்றி நிற்கிறது. இன்னிசையின் நடுவே மதுரம் ஊறிப் பருத்த சொற்கள் தவழுகின்றன. சுருட்டி ராகம் சொற்களை உச்சி முகர்ந்து தழுவுகிறது.

புகழ்பெற்ற
எல்லோரும் விரும்பும்

# மபத்லால்
க்ரூப்

2 X 2 முழு வாயில்களும

லெனோக்களும




நியூ ஷொராக் (ஷொராக்), அஹமதாபாத். நியூ ஷொராக், நாதியாத்.
ஸ்டாண்டர்ட், பம்பாய். ஸ்டாண்டர்ட் (நியூ சைனா), பம்பாய்.
ஸ்டாண்டர்ட், டிவாஸ். ஸஸூன், பம்பாய்.
ஸஸூன் (நியூ யூனியன்), பம்பாய். சூரத் காட்டன், சூரத்
மபத்லால் பைன், நவஸாரி. கல்யாண ஜூட், கல்கத்தா
இந்தியன் டைஸ்டப், பம்பாய்.



# புது வெள்ளம்

அத்தியாயம் 23

## விருந்தோம்பல் விசித்திரம்

அகிலன்

முருகையன் சென்னைக்கு வந்து சேர்ந்து இரண்டு தினங்களாகிவிட்டன. இரண்டாம் நாள்மாலையிலும் முதல்நாளைப் போலவே வற்புறுத்திக் காரில் தூக்கிப் போட்டுக் கொண்டு கடைத் தெருவுக்குக் கிளம்பினார் தாத்தா. உற்சாகமாகவும் உல்லாசமாகவும் பொழுதைக் கழிப்பதாகச் சொல்லி, ஒவ்வொரு இடத்திலும் அவனுடைய சட்டைப்பைக்குள் இருந்த பணத்துக்கு வேட்டு வைத்தார். கண்களைத் திறந்துகொண்டே காசைக் களவு கொடுப்பது போன்ற ஓர் உணர்ச்சி முருகையனைப் பற்றிக் கொண்டது.

இனி மேல் செலவு செய்வதற்கு அவனிடம் பணமும் இல்லை. தொண்ணூறு ரூபாய்களுக்கு மேல் இருந்த பையில் ஒன்பது அணுக்களே மிஞ்சியிருந்தன. அடுத்த ஒரு மணி நேரம் அவரோடிருந்தால், எங்கே தன்னையே ஒரு கடையில் அடகு வைத்து விட்டு உல்லாசம் கொண்டாடுவாரோ என்று அஞ்சி, ''வாருங்கள், தாத்தா! திரும்பிப் போகலாம்'' என்று அழமாட்டாக் குறையாக அவரை வீட்டுக்கு அழைத்தான்.

''சரிதான், போங்க! பட்டிக்காட்டு மாப்பிள்ளையா இருந்துக்கிட்டு என்கிட்டேயே உங்க செட்டும் சிக்கனத்தையும்காட்டுறீங்களே? பெட்டிக்குள்ளே இருக்கிற பணத்தைக்கொஞ்சம்தாராளமா எடுத்துக்கிட்டு வந்திருக்கப்படாது? காப்பிச் செலவுக்கே இப்படிக் கஞ்சத்தனம் பண்ணினு, நாளைக்கு எப்படி எங்க சித்திராவைக் கல்யாணம் செய்துக்கப் போறீங்க?''

'பெட்டியிலே பணம் இல்லை தாத்தா! அதைத் தேடிக் கொண்டு வயிற்றைக் கழுவத்தான் நான் இங்கே வந்திருக்கிறேன்' என்று சொல்லத் துடித்தான் முருகையன். ஆனால் அப்படிச் சொன்னால், காரில் கூட ஏற்றிக்கொள்ளாமல் எங்கே தன்னை நடுத் தெருவில் விட்டு விட்டுப் போய் விடுவாரோ என்று பயந்து மௌனமாக இருந்தான்.

'பாரிஸ் முனை'யின் நடைபாதையைக் கடந்து அவர்கள் காருக்குத் திரும்பிக் கொண்டிருந்த போது, வழியில்தென்பட்ட ஒருவர், ''ஐயோ! என் பணப்பை போய் விட்டதே! பணப்பை போய் விட்டதே! பணப்பையைத் தூக்கிட்டுப் போயிட்டாங்களே!'' என்று கூவிக் கொண்டு அங்குமிங்கும் அலைந்தார்.

'''பிக் பாக்கெட்' பிடியுங்கள்...பிடியுங்கள்!'' என்று சிலர் கத்தினார்கள்.

முருகையனுக்கு அவர் மீது அளவு கடந்த அனுதாபம் ஏற்பட்டது. திருடனைப் பிடிப்பதற்கு முயற்சிகள் செய்தான். திருடியவன் கிடைக்கவில்லை.

''இதெல்லாம் இந்த ஊரிலே பார்த்துக்கிட்டிருந்தா முடியாது மாப்பிள்ளை! வாங்க, நாம் போகலாம்'' என்றார் தாத்தா.

எரிச்சலுடன் அவரைத் திரும்பிப் பார்த்தான் முருகையன். அதே 'பிக் பாக்கெட்' தொழிலைக் கௌரவமாகச் செய்து விட்டு, அருகிலேயே நின்ற அவர் அந்த மறைந்து விட்ட திருடனைவிட மோசமானவராகத் தோன்றினார். திருடியவன் சோற்றுக்கில்லாமல் திருடியிருப்பான். தாத்தாவோ சோறும், துணியும், செலவுக்குப் பணமும் ஓர் இடத்தில் தாராளமாகக் கிடைத்த போதே, சுகத்துக்காக மற்றொருவனை வஞ்சித்து விட்டார்.

சுகபோக வாழ்க்கை என்கிற தொத்து வியாதி மனிதனை எப்படியெல்லாம் மாற்றி விடுகிறது என்றெண்ணிப் பெருமூச்சு விட்டான் முருகையன். 'பெரிய பாளையத்தில் இதே பணத்தைக் கொண்டு இரண்டு மனிதர்கள் இரண்டு மாதங்களுக்கு வாழ முடியும். இரண்டு நாட்களில் அதைக் கரைத்து விட்டதுமல்லாமல் எனக்குக் கஞ்சன் என்ற பட்டப் பெயர் வேறு?'

வீட்டுக்குச் சென்றவுடன் இனிமேல் என்ன செய்வது என்று முருகையனுக்குப் புரியவில்லை. முதல் நாள் சித்திராவுக்கு எழுதி வைத்த கடிதம் தபாலில்

சேர்க்கப்படாமல் இருந்ததால் அதைத் திரும்பவும் ஒரு முறை படித்துப் பார்த்தான். கடிதம் எழுதிய நேரத்தில் அவனிடம் இருந்த திடநம்பிக்கை இப்போது இல்லை. செல்வச் சீமான் மகளான சித்திராவுக்குச் சட்டைப் பையில் ஒரு ரூபாய் கூட இல்லாத ஓர் ஏழை எந்த உரிமையோடு, எந்த உறவோடு கடிதம் எழுதுவது? எரிச்சலுடன் கடிதத்தைச் சுக்குநூறாய்க் காற்றில் கிழித்தெறிந்தான் முருகையன்.

அந்த வீட்டின் ஒவ்வொரு சுவரும், ஒவ்வொரு கதவும், ஒவ்வொரு ஜன்னலும் அவனைப் பார்த்துப் பரிகாசத்துடன் சிரித்தன. 'நீ இதற்கு உள்ளே நுழையக் கூடத் தகுதியற்றவன்! நீ உரிமையற்றவன்! உறவற்றவன்!'

கட்டிலில் குப்புறப் படுத்து யாருக்கும் தெரியாமல் கண் கலங்கி விட்டு, அன்றைக்கு இரவே எப்படியும் சித்திராவின் தமையன் மாணிக்கத்தைச் சந்தித்துத் தான் வந்த காரணத்தைச் சொல்ல முடிவு செய்து கொண்டான். ஏழைமையை வெளியிட்டு, ஒரு வேலை வேண்டுமென்று கேட்பது வெட்கப்பட வேண்டிய விஷயமல்லவே?

அவன் எதிர்பார்த்திருந்த நேரம் தானாகவே வந்தது. இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு அவனது அறைக்கு வந்து சாவகாசமாகப் பேசத் தொடங்கினார் மாணிக்கம்.

''வந்த விருந்தாளியைக் கூடக் கவனிக்க முடியாதபடி எனக்கு வேலைகள் குவிஞ்சு கிடக்குது. பல தொழில்களைச் செய்துக்கிட்டிருக்கிறவன் நான். வீட்டுக்காரிகிட்டே முகம் கொடுத்துப் பேசறதுக்கு நேரமில்லேன்னு அவளுக்கே என் மீது கோபம்'' என்று தம்முடைய பெருமைகளை முதலில் சொல்லிக்கொண்டார் அவர். பிறகு அவனைப் பெருமைப்படுத்துகிற எண்ணத்தோடு, வீட்டில் அவனுக்கு வேண்டிய வசதிகளெல்லாம் கிடைக்கின்றனவா என்று விசாரித்தார். தாத்தா அவனை நன்றாகக் கவனித்துக் கொள்கிறாரா என்றும் கேட்டார்.

தாத்தாவின் கவனிப்பை அவர் கேட்ட போது அவனுக்குச் சிரிப்பு வந்தது. மரியாதையை உத்தேசித்து, ''உங்களுடைய அன்பால் எனக்கு இங்கே ஒரு குறைவுமில்லே'' என்று சொல்லி வைத்தான்.

''ஆமா, கொஞ்சங்கூட வித்தியாசம் பார்க்காமல் இதை உங்கள் வீட்டைப் போலவே நினைச்சுக்குங்க. உங்களுக்கு என்ன வேணுமோ இங்கே கேட்டு வாங்கிக்கலாம். எவ்வளவு நாட்கள் தங்கணுமோ தங்கிக்கலாம். வெளியிலே போகணும்னு கார் இருக்கு; பெரியவர் இருக்கிறார்.''

இவ்வளவு தூரத்துக்குத் தன்னிடம் மதிப்பு வைத்திருக்கும் மாணிக்கத்திடம் எப்படித் தன்னுடைய நிலைமையைச் சொல்வதென்று ஒரு கணம் தயங்கினான் முருகையன். என்றாலும் இன்னும் ஒரு நாள் அங்கே தாமதிக்க வேண்டுமென்றாலும் தாத்தாவைச் சரிக்கட்ட ஐம்பது ரூபாய்களாவது வேண்டும்! ஆகவே கிடைத்த சமயத்தை நழுவ விட விரும்பவில்லை.

''ஒரு முக்கியமான விஷயமாகத்தான் நான் உங்களைப் பார்க்க வந்தேன்.....'' என்று தொடங்கினான்.

மாணிக்கம் தம்முடைய சிறுத்த கண்களால் அவனுடைய முகத்தை ஊடுருவிப் பார்த்தார். அவனுடைய அடுத்த சொல்லுக்காக மௌனமாகக் காத்திருந்தார் அவர்.

''எனக்கு ஒரு வேலை தேடித் தர வேண்டும். உங்களிடம் ஒரு வேலை கொடுத்தாலும் சரி; அல்லது தெரிந்த இடத்தில் என்னை வேலைக்கு அமர்த்தினாலும் சரி.''

திடீரென்று பெரிதாகச் சிரித்தார் அவர். ''நினைச்சது சரியாக நடந்திருக்குது. நீங்க உங்கப்பாகிட்டே கோவிச்சுக்கிட்டு ஊரை விட்டுப் புறப்பட்டு வந்திருக்கீங்க'' என்று சொல்லி விட்டுத் தொடர்ந்து சிரித்தார் அவர்.



''அப்படியெல்லாம் ஒன்றுமில்லே; வந்து.....''

''இதோ, பாருங்க! படிச்ச பிள்ளைகளுக்குப் பட்டிக்காட்டுலே இருக்கப் பிடிக்காதுங்கறதை நான் ஒத்துக்கறேன். ஆனால் அதுக்காக நாமெல்லாம் ஓர் இடத்திலே போய்க் கைகட்டி வேலை

பார்த்துக் கூலி வாங்க முடியாது!..... நாமெல்லாம் பல பேருக்கு வேலை கொடுக்கப் பிறந்தவங்க. நீங்கள் நினைத்தால் உங்களுக்குக் கீழே பத்துப் பேர் வேலை செய்வாங்க. அதுக்கு வேண்டிய ஏற்பாட்டை நானே செய்து வைக்கிறேன்'' என்றார் மாணிக்கம்.

முருகையன் அவர் பேச்சை வாங்கிக் கொள்ளாமல் விழித்தான். அவரே அதை மேலும் விளக்கினார்.

''கிராமத்திலே நிலத்தை வைச்சுக் கிட்டு அழுகிறதிலே இனிமேல் புண்ணியமில்லை. உங்கப்பா பேருக்கு அரை காணி நிலமோ, ஒரு காணி நிலமோ வைச்சுக்கிட்டு. அவர் அங்கேயே தங்கியிருக்கட்டும். நீங்க மற்ற எல்லா நிலங்களையும் வித்து ரொக்கமாகப் பண்ணிக்கிட்டு வந்து சேருங்க. நான் பல தொழில் செய்கிறவன். ஏதோ ஒருதொழிலிலே உங்களைக் கூட்டாகச் சேர்த்துக் கிட்டு, பணத்தைப் போட்டுப் புரட்டலாம். பத்துப் பேருக்கு நீங்க வேலை கொடுக்கிறதை விட்டுட்டு, நீங்க வேலை தேடறதாவது?''

பதிலளிக்க முடியாமல் திணறினான் முருகையன். அவனுடைய நெஞ்சு மேலே உயர்ந்து தொண்டையை அடைத்துக் கொண்டது.

''யோசனை பண்ணுறீங்க, மாப்பிள்ளை! உங்க பணத்தை நான் ஒண்ணும் முழுங்கிவிட மாட்டேன். ஒரு ரூபாய் கையிலே இருந்தால் அதை



இந்தப் பட்டணத்திலே பத்து ரூபாயாகப் பெருக்கி வித்தை காட்டலாம். தாராளமாய் நீங்க என்னை நம்புங்க. நாளைக்கு என் தங்கச்சியையே, உங்களை நம்பிக் கல்யாணம் செய்து கொடுக்க நினைக்கிறவன் நான். உடனே ஊருக்குக் கிளம்பி, நிலத்தை வித்துப் பணத்தை எடுத்துக்கிட்டு இங்கே வந்து சேருங்க.''

தலையைக் குனிந்து கொண்டு, தன் இதயத்துக்குள்ளாகவே கண்ணீர் வடித்தான் முருகையன். அவன் பேசாமல் இருப்பதை தவருக நினைத்துக் கொண்ட மாணிக்கம், ''நான் என்னுடை நன்மைக்காக இதைச் சொல்லலே; எத்தனையோ பேர்கள் என்னோடு கூட்டுச் சேர்ந்து முதல்போடக் காத்துக்கிட்டிருக்காங்க. நீங்க நம்ப பிள்ளையாச்சேன்னு ஒரு வழி காட்டினேன்'' என்றார்.

''இப்போது என்னிடம் ஒரு காணி நிலமும் இல்லை. ஒரு ரூபாய் பணமும் இல்லை. அதனால்தான் வேலை கேட்க வந்தேன்'' என்று தழுதழுத்த குரலில் கூறினன் முருகையன்.

திடுக்கிட்டார் மாணிக்கம். முருகையன் அவரிடம் தங்களுக்கு நேர்ந்த கஷ்டங்களைச் சுருக்கமாகக் கூறினன். அவருக்கு அதன் பிறகு அவன் பேசிய எதுவுமே செவியில் ஏறவில்லை. இக்கட்டான ஒரு கட்டத்தில் அகப்பட்டுக் கொண்டவர் போல், முகத்தைச் சுளித்துக் கொண்டு, அந்த இடத்திலிருந்து விரைவில் நழுவப் பார்த்தார்.

''அப்போ நாளைக்குப் பார்க்கலாம் தம்பி; இப்போ பேசாமல் படுத்துத் தூங்கு!'' என்று சொல்லி விட்டு, சரேலென உள்ளே எழுந்து போனார்.

மரியாதைப் பண்மையோடு பேசிய மனிதரின் பேச்சு, திடீரென்று கீழே போய் விட்டதை முருகையன் கவனிக்காமல் இல்லை. இரவு நேரத்தில் அவன் தூங்க முயன்றான். தூக்கம் கூட அவன் யார் என்பதை அன்று தான் கண்டு கொண்டது போல், அவனிடமிருந்து விலகி விலகிச் சென்றது.

சிறிது நேரத்தில் வீட்டுக்குள் மாணிக்கம், அவர் மனைவி, தாத்தா மூவரும் ஏதோ கூடி ரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். அவர்களுடைய பேச்சின் எதிரொலி மறுநாளே முருகையனுக்குக் கிடைத்த உபசாரத்தில் தெரிந்தது.

தாத்தா அவனுடைய அறைக்குள் வெகு நேரம் வரையில் எட்டிப் பார்க்கவில்லை. மாணிக்கம் காலைப் பலகாரத்தை முடித்துக் கொண்டு தம்முடைய அலுவலுக்குச் சென்றார். வேலைக்காரர்கள் கூடப் பராமுகமாக இருந்தார்கள்.

கார் சவாரி, காப்பி ஓட்டல், கடற்கரை, சினிமாக் கொட்டகை முதலிய எந்த உல்லாசத்துக்கும் தாத்தா அவனை அன்றைக்கு அழைக்க வில்லை. மத்தியானச் சாப்பாடு நடக்கும் போது 'யாரும் வந்து கூப்பிடணும்னு நினைக்காமல் வந்து சாப்பிடறதுதான் நல்லது; எனக்கு வீட்டிலே ஆயிரம் வேலை இருக்கு!' என்று நாசூக்காய்ச் சொல்லி வைத்தார். சாப்பாடு உள்ளே இறங்கவில்லை முருகையனுக்கு. பண்பாடு நிறைந்த வீட்டில் பிறந்து வளர்ந்த பிள்ளை அவன்.

மாலையில் மாணிக்கம் வீட்டுக்கு வந்தார். வந்தவர் முருகையனிடம் நின்று கூடப் பேசாமல், ''எங்களோட தொழில் வெள்ளைக்காரக் கம்பெனிகளோடத் தொடர்பு வச்சிருக்கிற தொழில்; ஜெயிலுக்குப் போயிட்டு வந்த உன்னை வேலைக்கு வைச்சுக்கிட்டா அது எங்களையே பாதிக்கும். வேறு எங்கேயாவது போய் முயற்சி செய்து பார்'' என்று கூறிவிட்டுத் தம் அறைக்குள் நுழைந்து கதவை மூடிக் கொண்டார்.

மாளிகைக்குள் இருந்த முருகையனுக்கு மனித நடமாட்டமற்ற காட்டுக்குள்ளே இருப்பது போல் தோன்றியது: சன்னல் வழியே வெளியில் தெரிந்த சென்னைமா நகரத்தை உற்றுப் பார்த்தான். — பிறகு வீட்டுக்கு வெளியில் நடந்து, பாதையோரமாக வந்து நின்ற 'டவுன் பஸ்'ஸில் ஏறினன். அது எங்கெங்கோ சுற்றி விட்டுத் திருவல்லிக்கேணிப் பக்கம் வந்து நின்றது.

இறங்கி, எங்கு செல்வதென்று தெரியாமல், நடை பாதைக் கூட்டமாகிய மனித வெள்ளத்துடன் கலந்தான். திடீரென்று எதிரில் வந்து கொண்டிருந்த ஒரு மனிதன் அவனை உற்றுப் பார்த்து விட்டு இரு கரங்களாலும் கட்டிக் கொள்ளவே அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

## அத்தியாயம் இருபத்து நான்கு

# சுந்தரத்தின் தங்கை

அழகான ஃகோட்டு, மடிப்புக் கலையாத 'சூட்', பளபளப்பான பூட்ஸ், கண்களில் கண்ணாடி இவற்றோடு விளங்கிய அந்தப் புது மனிதனை உற்றுப் பார்த்தான் முருகையன். அந்த மனிதனோ இன்னும் தன்னுடைய அன்புப் பிடியை நெகிழ விடவில்லை. அவனுக்குச் சுமார் முப்பது வயதிருக்கும்.

# Arvind



**QUALITY FABRICS**

•SANFORIZED•
REGISTERED TRADE MARK
of CLUETT PEABODY & CO. INC., U.S.A.

மர்ஸிரைஸ்ட் சான்பொரைஸ்ட்
வெள்ளை பாப்ளின்
கோல்ட் டிரிங்

மர்ஸிரைஸ்ட் சான்பொரைஸ்ட்
கலர் பாப்ளின் ப்ளூபெர்ட்

மர்ஸிரைஸ்ட் கெஸ்
வேஷ்டிகள்
ராணி ஸ்பெஷல்

மர்ஸிரைஸ்ட்
வேஷ்டிகள்
ராஜா ஸ்பெஷல், ப்ளாட்டினம், காம்ராஜ்




அரவிந்த் மில்ஸ் லிட். அஹமதாபாத்-2

REGISTERED USER OF THE TRADE MARK 'SANFORIZED'



பம்பாய் திரு ஈசுவரன் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி பத்மாவுக்கும் திரு ராமசுவாமிக்கும் பாலக்காட்டுக்கருகில் உள்ள சிற்றூரில் திருமணம் நடந்தேறியது.



முசிரி கல்கி ஏஜண்ட் திரு கே. ராதா கிருஷ்ணன் அவர்களின் மைத்துனி சௌபாக்கியவதி சூரியகுமாரிக்கும் திரு. ரங்கனுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.



நேஷனல் அண்ட் கிரிண்ட்லெய்ஸ் பாங்கி அதிகாரி திரு கே. எஸ். சுப்பிரமணிய அய்யர் அவர்களின் புதல்வி சௌ. வசந்தா திரு கோபாலனை மணம் புரிந்து கொண்டார்.

''முருகையா! எதிர்வீட்டுச் சுந்தரத்தை உனக்குத் தெரியவில்லே?'' என்று ஆர்வத்தோடு கேட்டான் அவன்.

''நீங்களா, அண்ணு!''

சுந்தரம் தங்களைச் சூழ்ந்துள்ள கூட்டத்தை முற்றிலும் மறந்து விட்டு முருகையனைப் பற்றி மளமளவென்று விசாரிக்கத் தொடங்கினன். ஊரில் அவனுடைய தகப்பனர் சிவப்பிரகாசம் நன்ருக இருக்கிருரா என்று திரும்பத் திரும்பக் கேட்டான். அவருடைய உதவிகளைத் தன்னுல் மறக்கவே முடியாதென்றும், அவரால்தான் தான் இந்த நிலைக்கு வந்திருப்பதாகவும் பெருமையோடு கூறிக் கொண்டான்.

ஆம், பெரியபாளைத்தில் முருகையனுடைய வீட்டுக்கு எதிர்வீட்டில் வசித்து வந்த ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன்தான் சுந்தரம். அவனுடைய படிப்புச் செலவு முழுவதுக்கும் சிவப்பிரகாசம் அந்தக் காலத்தில் உதவி வந்தார். கிராமத்திலிருந்து முதல் முதலாகப் பட்டப் படிப்புக்கு வெளியூர் சென்றவன் அவன். ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன்பே அந்தக் குடும்பம் கிராமத்தை விட்டு வெளியூருக்குக் கிளம்பி விட்டது.

அதற்குப் பிறகு, அந்தப் பக்கம் வந்த போதெல்லாம் சுந்தரம் சிவப்பிரகாசத்தைச் சந்திக்காமல் வந்ததில்லே.

''முருகையா! பட்டணத்துக்கு எப்போது வந்தாய்? — வா, உன்னுேடு நிறையப் பேச வேண்டும்'' என்று அவனைப் பற்றிக் கூட்டத்திலிருந்து இழுத்துக் கொண்டு போனுன்.

முருகையன் அதற்கு முன்பு சுந்தரத்துடன் நெருங்கிப் பழகியதில்லே. என்ருலும் அவனுடைய அன்பு அந்தச் சமயத்தில் முருகையனுக்கு எவ்வளவோ பெரிதாகத் தோன்றியது. மௌனமாக அவன் பின்னே சென்ருன்.

''நீ போராட்டத்தில் கலந்து கொண்டு சிறைக்குப் போன மறுநாள் நான் ஊருக்கு வந்தேன். அப்பா என்னைக் கட்டிக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதார். அவரைத் தேற்றுவதற்காக அங்கே இரண்டு நாட்கள் தங்கிவிட்டு வந்தேன். அதற்குப் பிறகு எங்கும் வெளியூர்களுக்குப் போக முடியவில்லே. எனக்குக் குடும்பம் பெருத்து விட்டது.''

அருகிலிருந்த ஒட்டலுக்கு அழைத்துச் சென்று, முருகையனைத் தன்னுடைய அதிகாரம் நிறைந்த உபசாரத்தால் திணற வைத்தான். முருகையனுடைய பிடிவாதம் எதுவும் அவனிடம் பலிக்கவில்லே. — தாத்தாவைப் போல் செய்யாமல், சுந்தரமே 'பில்'லேக் கொடுத்த பிறகுதான் முருகையனுக்கு உயிர் வந்தது.

"வா, கடற்கரையிலே உட்கார்ந்து காற்று வாங்கிக் கொண்டே பேசுவோம்" என்று முருகையனை இழுத்துச் சென்றான் சுந்தரம்.

சுந்தரத்தின் பாசத்தையும் பற்றுதலையும் கண்ட முருகையனுக்கு அவனிடம் எதையும் மறைக்கத் தோன்றவில்லை. உள்ளத்தில் அலை மோதிக் கொண்டிருந்த உண்மைகள் அனைத்தையும் அவனிடம் மனம் திறந்து கொட்டி விட்டான். சுந்தரம் பரிவோடு யாவற்றையும் கேட்டு விட்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்.

"முருகையா! நீ கஷ்டம் தெரியாமல் வளர்ந்த செல்லப் பிள்ளை. அதனால் உனக்கு இதெல்லாம் மலை போல் தோன்றுகிறது. இந்த நிமிஷத்தோடு உன் கவலைகளை விட்டுத் தள்ளு! உனக்கு நான் இருக்கிறேன்! இத்தனை பெரிய உலகத்தில் நாம் வாழத்தானா முடியாது?"

"அண்ணா! இந்த ஆறுதல் ஒன்றே போதுமண்ணா!" என்று கண் கலங்கக் கூறினான் முருகையன்.

"நீ கோழையாக இருந்தால் எனக்குக் கோபம் வந்து விடும். பார்த்துக் கொள்!" என்று கூறிவிட்டுச் சிரித்தான் சுந்தரம். "உடம்பிலே வலுவிருக்கிறது; மூளையிலே தெளிவிருக்கிறது. எதற்கு நீ கலங்குகிறாய்? — இப்போதே என்னுடன் என் பங்களாவுக்குப் புறப்படு. ஒரு வேலை கிடைக்கும் வரையில் என்னோடு தங்கியிரு."

முருகையன் அவனுக்கு நன்றி கூறிவிட்டுத் தலைநிமிர்ந்து உட்கார்ந்தான். சுந்தரத்தின் தோற்றத்திலிருந்தும் பேச்சிலிருந்தும் அவன் வசதிகள் நிறைந்த வாழ்க்கையுடையவன் போல் தோன்றியது. சிலநாட்களுக்கோ வாரங்களுக்கோ அவனுடைய உதவியைப்பெற்றுக்கொள்வதால், அவனுக்கும் சிரமம் இருக்காதென்று நினைத்தான்.

என்றாலும் முருகையனின் மனம் கேட்கவில்லை. "என்னால் உங்களுக்கு எதற்கண்ணா சிரமம்?" என்றான்.

"சிரமமாவது, மண்ணாங்கட்டியாவது! ராஜாவைப்போல் நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். என்னுடைய அரண்மனைக்கு விஜயம் செய்து அங்கிருக்கும் குடிபடைகளையும், மதிமந்திரியையும், மற்றவர்களையும் பார்த்தால் நீயே திகைத்துப் போவாய். அந்த ராஜ்யத்தில் உனக்குத்தானா இடமில்லை?"

பத்து ரூபாய் நோட்டை அலட்சியமாய் அவன் ஓட்டல் மேசையில் வீசியெறிந்துவிட்டுச் சில்லறைகளைப்பொறுக்கிக் கொண்ட காட்சியை முருகையன் நினைத்துப் பார்த்தான். அவன் போட்டிருந்த உடுப்புக்களும் விலை உயர்ந்த



யூனியன் மோட்டார்க் கம்பெனி காரியதரிசி திரு நாகநாதன் அவர்களின் புதல்வர் திரு பாலசுப்பிரமணியனுக்கும் சௌ. வசந்தாவுக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.



கல்கி உதவி மெஷின் போர்மன் திரு சஞ்சீவி நாயுடு அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி பார்வதிக்கும் திரு கஜபதிக்கும் திருமணம் விமரிசையாக நடைபெற்றது.



ரிட்ஸ் அண்ட் ஏர்லேன்ஸ் ஹோட்டல்ஸ் டைரக்டர் திரு கே. எஸ். சீனிவாசன் அவர்களின் மருமான் சௌ. ராஜலட்சுமிக்கும் திரு ராமமூர்த்திக்கும் பம்பாயில் விவாகம் நடந்தது.

உடுப்புக்கள். ஏதோ பெரிய உத்தியோகம் பார்த்துக் கொண்டிருப்பவன் என்று தீர்மானித்தான்.

இருவரும் பேசிக் கொண்டிருந்த போது, ''அதோ அப்பா இருக்கார்! அதோ அப்பா இருக்கார்!'' என்ற குழந்தைகளின் குதூகலக் குரல் கேட்டது. இருவரும் திரும்பினார்கள். மறு கணமே குழந்தைகளின் கூட்டமொன்று அவனை நோக்கி ஓடி வந்தது.

ஒரு குழந்தை அவன் முதுகின் மேல் குதிரை ஏறியது. மற்றொரு குழந்தை அவன் மடி மீது வந்து ஒய்யாரமாக உட்கார்ந்தது. மூன்றாவது குழந்தை மடியிலிருந்த குழந்தையைப் பிடித்துத்தள்ளி விட்டு அந்த இடத்தில் உட்கார்ந்து கொள்ளப் பார்த்தது.

''அப்பா! அப்பா! அப்பா!''

''அப்பா! அப்பா! அப்பா!''

குழந்தைகளுக்குப் பின்னால் ஓர் இளம் வயதுப் பெண்மணி புன்னகை தவழும் முகத்தோடு மெதுவாக வந்து கொண்டிருந்தாள். அவனைச் சுற்றிலும் இன்னும் சில குழந்தைகள் வந்து கொண்டிருந்தன.

''என்ன முருகையா இப்படிப் பார்க்கிறாய்? எல்லாக் குடிபடைகளும் என்னுடையதுதானோ என்று நினைக்கிறாயா? இவர்களில் பாதிப்பேர் அடுத்த சாம்ராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள். முதுகில் இருப்பது ஒன்று, தோளை இழுப்பது ஒன்று, மடியில் கிடப்பது ஒன்று, அதோ வருகிறது பார் அது ஒன்று, ஆக நால் வகைப் படைகள் இப்போதைக்கு...!''

முருகையனுக்குச் சிரிப்பு வந்தது. சிரித்துக் கொண்டே ''அந்த அம்மாள் தான் உங்களுடைய......'' என்று சுந்தரத்தின் முகத்தைப் பார்த்தான்.

''என்னுடைய தங்கை சாந்தா!'' என்றான் சுந்தரம்.

சுந்தரத்துக்கு ஒரு தங்கையிருந்ததாக முருகையனுக்கு நினைவில்லை. என்றாலும் சாந்தாவைத் திரும்பிப் பார்த்துக் கைகூப்பினான் முருகையன். அவளும் கனிவோடு கைகூப்பி வணங்கினாள்.

''இவன் என்னுடைய தம்பி, சாந்தா! பெயர் முருகையன்'' என்றான் சுந்தரம்.

தான் எந்த முறையில் அவனுக்குத் தம்பியோ, அதே முறையில்தான் அவள் தங்கையாக இருக்க வேண்டுமென்று முருகையனுக்குத் தோன்றியது.

சாந்தாவின் முகத்தில் அவளுடைய பெயருக்கு ஏற்ற சாந்தி நிலவியது. அடக்கம் நிறைந்த அமைதியோடும், காண்பவர்களிடம் மரியாதையைத் தூண்டி விடும் பணிவோடும் அவள் நடந்து வந்து, சற்று விலகி நின்றாள். அவர்களுடன் ஒன்றாக உட்காரவில்லை.

''அண்ணாவைக் கடற்கரைப் பக்கம் காணவே முடியாதே! ஏது இன்றைக்குப் புதுமையாக வந்திருக்கிறீர்கள்?''

''இன்றைக்கு ஓர் அருமையான நாள் சாந்தா! எதிர்பாராமல் இவனைச் சந்தித்தேன்; இழுத்துக் கொண்டு வந்து பேசிக் கொண்டிருக்கிறேன். இனிமேல் நம்முடைய குடும்பத்தில் இவனும் ஒருவன். — ஏனம்மா நிற்கிறாய்? உட்கார்ந்து கொண்டு பேசலாமே?''

''குழந்தைகள் என்னை விடமாட்டார்களண்ணா! நீங்கள் பேசிக் கொண்டிருங்கள். நான் தனியாக இவர்களுடைய விளையாட்டைக் கவனிக்கிறேன்!''

குழந்தைகளை அழைத்துக் கொண்டு திரும்பிப் போக முயன்றாள் சாந்தா. சுந்தரம் முன்பு முருகையனிடம் சுட்டிக் காட்டிய மூத்த பெண், ஒரு கணம் தயங்கி நின்று, ''ஏன் அப்பா, அம்மா உங்களை ஆபீஸ் முடிந்தவுடன் வீட்டுக்கு வரச்சொல்லியது நினைவில்லையா?'' என்று கேட்டாள்.

''இதோ கிளம்பி விடுகிறேன் தாயே! உத்தரவை நான் மறக்கவில்லை.''

''ஆபீஸில் யாரிடமோ பத்து ரூபாய் கடன் வாங்கிக் கொண்டு வந்து பால்காரனுக்குக் கொடுக்கிறேனென்றீர்களே! கடன் கிடைத்ததா அப்பா?''

முருகையனுக்கு அந்தப் பெண் குழந்தையின் பேச்சு சுரீரென்று உள்ளத்தில் தைத்தது. சுந்தரமோ கலகல வென்று வாய் விட்டுச் சிரித்துக்கொண்டு அவளைத் தன் இரு கரங்களாலும் வாரி அணைத்தான்.

''நீ பொல்லாத பெண்ணம்மா, பொல்லாத பெண்! புத்திசாலிப் பெண்ணாக இருக்கிறாயே? போய், அக்காளோடு விளையாடு!'' என்று தட்டிக் கொடுத்து அவளை அனுப்பி வைத்தான் சுந்தரம்.

குழந்தைகளுடன் திரும்பிய சாந்தா புன்முறுவலுடன் முருகையனைப் பார்த்து விட்டுத் திரும்பினாள்.

முருகையனுக்குச் சுந்தரத்தின் பெண் கேட்ட கேள்வி மனத்தை விட்டு அகலவில்லை.

''நீங்கள் அந்த ஓட்டலில் செலவு செய்த அந்தப் பணம்....''

''விட்டுத் தள்ளு! பணம் கிடக்கிறது, பணம்!'' என்று அலட்சியமாகக் கூறினான் அவன்.

முதன் முதலாகப் பட்டணத்தில் ஒரு மனிதனைப் பார்த்த தெம்பு சுந்தரத்திடம் முருகையனுக்கு ஏற்பட்டது. அவன் சாந்தா சென்ற திசையில் திரும்பிப் பார்த்தபோது, சிறிது தூரத்தில் அவள் மத்தியில் உட்கார்ந்திருக்க, குழந்தைகள் அவளைச் சுற்றிக் கும்மாளமடித்துக் கொண்டிருந்தார்கள். (தொடரும்)

# நவராத்திரி பிரசாதம்

உபந்யாசம் அன்று அரை மணி நேரம் தாமதித்தே ஆரம்பமாயிற்று. ஏனெனில் அன்று வழக்கத்தைவிட அதிகமாகக் கூட்டம்! நவராத்திரியின் கடைசி நாள். கமகமவென்று மணக்கும் சர்க்கரைப் பொங்கல், வடை, தேங்காய்த் துருவலுடன் கடுகு மிளகாய் தாளித்த கடலைச் சுண்டல் என்றால் கூட்டம்



மிருந்து, பந்தல் நிறைந்து விட்டதில் வியப்பென்ன?

வைதிகமாகப் பஞ்சகச்சம் வைத்துக் கட்டிக் கொண்டிருக்கும் பெரியவர்கள், பாட்டிமார்கள், குழந்தைகளை அழைத்துக் கொண்டு வந்திருக்கும் தாய்மார்கள், சுவாரஸ்யமான உப கதைகளைக் கேட்டு ரஸித்து மகிழ வந்திருக்கும் இளைஞர்கள் - இப்படியாகத்தானே சபை கலகலப்பா யிருந்தது.

உபந்நியாசத்துக்குப் பொறுப்பாயிருந்து, நூறு ஐம்பது என்று பாராமல் தினம் செலவு செய்த பிரமுகர்கள்கூட அன்று உட்கார இடமின்றி நிற்கவும் முடியாமல் பட்ட அவதி கொஞ்சமல்ல. சமயசந்தர்ப்பத்தை உணர்ந்து பாகவதர் சீக்கிரமாகவே உபந்நியாசத்தை ஓட்டிக் கொண்டு போனார்.

......''இவ்வாறாகத்தானே.... சாக்ஷாத் ஜகன்மாதா, ராஜ ராஜேஸ்வரி, லோகநாயகி இந்த நவராத்திரியில் தான் ஸ்ருஷ்டித்த சகல



ஜீவராசிகளுடன் கொலு வீற்று, ஸிம்மாசனத்தில் ஆனந்தமாக அமர்ந்து கொண்டிருக்கிறாள். அந்தக் கொலு என்ன சாமானிய கொலுவா? ஜகஜ்ஜோதியா யிருக்கிற சிங்கம், புலி, கரடி, யானை, மான் முதலிய மிருகங்கள், கருடன், முதல் குருவி வரையில் பலவிதமான பட்சிகள், திமிங்கிலம் முதல் சின்ன மீன்கள் வரையிலும் பலவித நீர்ப் பிராணிகளும், விருட்சங்களும், மனிதர்களும் எல்லாமாக அந்தக் கொலுவிலே தங்களை மறந்து ரொம்பவும் சாதுவாக அமர்ந்திருக்கின்றனவாம். புலியும், பசுவும், பூனையும், எலியும், கருடனும் பாம்பும், அரசனும் ஆண்டியும், போலீஸ்காரனும் திருடனும் பக்கத்தில் பக்கத்தி லிருந்தும் எல்லாம் அமைதியாகப் பயபக்தியாக உட்கார்ந்து கொண்டிருப்பதைப் பார்த்துத் தேவர்கள் எல்லாம் வந்து வந்து பார்த்து ஆனந்திக்கிறார்கள். ஆனந்தித்து விட்டு, தேவிக்குப் பூஜை செய்கிறார்கள். தீபாராதனை செய்கிறார்கள்....''

இந்தச் சமயத்தில் சிவபூஜையில் கரடி புகுந்தமாதிரி பித்தளை ஜோடுத்தவலை ஓசை கேட்டது. உபன்யாசத்தை நிறுத்திவிட்டு உபந்யாசகர் திரும்பிப் பார்த்தார்.

''எனக்குக் கொடுக்கவில்லே, மாமா சர்க்கரைப் பொங்கல்....!'' என்று ஒரு குரல் கேட்டது. அதைத் தொடர்ந்து பல குரல்கள் எழுந்தன. 'எனக்கு மாமா! எனக்கு மாமா!' என்று குழந்தைப் பட்டாளங்களின் கூக்குரல்களும் இடையிடையே எழுந்தன.



''ஸ்வாமி, இங்கே கொஞ்சம் கவனியுங்கள். நான் வாங்கவே இல்லே. தள்ளாதே அப்பா! ஏன் அடிக்கக்கிறீர்கள்? ஒவ்வொருத்தராக வாங்கிக் கொள்ளுங்கள். ஏனய்யா, நீர் மனுஷன்தானா, இப்படியா தள்றது? ஸ்வாமி, இங்கே வடை கொடுக்கல்லே....நெருக்காதே! வாங்கினவர்களே வாங்காதீர்கள்'' என்று பலவித இரைச்சல்.

பிரசாதத்துக்காகப் பந்தலிலிருந்தவர்கள் திடுரென்று பாய்ந்து நாலாபுறமும் ஓடுவதைப் பார்த்த உபந்நியாசகர், ''அமைதி, அமைதி'' என்று கத்திப் பார்த்தார். அவர் முயற்சி பயன்படவில்லே. கதையைச் சீக்கிரமே முடிவுக்குக் கொண்டு வரவேண்டியதாயிற்று.

''...இப்படியாகத்தானே ஜகன்மாதாவோடு சகல ஜீவராசிகளும் கொலு வீற்று, ஒன்பதாவது நாள் பூஜை யெல்லாம் முடிந்து பிரசாதம் வந்ததோ இல்லையோ, அது வரையில் சாந்தமாக உட்கார்ந்து கொண்டிருந்த ஜீவராசிகள் கொலு மண்டபத்திலிருந்து கிளம்பி பிரசாதத்தை நோக்கி ஒன்றை ஒன்று தள்ளிக் கொண்டு ஓடித் தங்கள் பழைய சுபாவத்தை அடைந்தன. புலி புலியாயிற்று. பூனை பூனை சுபாவத்தை அடைந்தது. மனிதன் மனித சுபாவத்தைப் பெற்று விட்டான், கடைசி நாள் பிரசாதத்தைக் கண்டவுடன்'' என்று கூறி முடித்தார்.

—கோக்கி

**டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து, பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.**

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சரியமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள் :
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்

# வட்டமேஜை

## திருந்துவார்களா?

ஆகஸ்டு 27-ந்தேதி இதழின் ''நாகரிலிபியும், தமிழும்'' என்னும் தலையங்கத்திலுள்ள ''டில்லிக்குச் செல்லும் தமிழ்நாட்டு மந்திரிகள் தமிழ்மக்களின் உள்ளத்தைப் பிரதிபலிக்காமல், வடநாட்டு மந்திரிகள் சொல்லுவதற்கெல்லாம் கையைத் தூக்கி விட்டு வருவது தமிழர்கள் செய்த துரதிருஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்'' என்ற பகுதியுடன் அக்டோபர் 8-ந் தேதி மணிபல்லவத்தில் ''என்னிடம் இந்தக் கீழ்மைநிறைந்த கேள்வியைக் கேட்டதற்காகத் தெய்வங்கள் உங்களை மன்னிக்க வேண்டும் என்று, உங்கள் அறியாமைக்காக, உங்கள் பொருட்டு நான் பிரார்த்தனை செய்கிறேன்'' என்ற வாக்கியங்களை இணைத்துப் பார்த்தேன். இவற்றைப் படித்தாவது நமது மந்திரிகள் திருந்துவார்களா என்ற எண்ணமே மேலோங்கியது.

7-10-61
கோவை

த. க. நாதன்

## தேவநாகரி எழுத்து

தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் ''கல்கி'' வார மலர் செய்து வரும் சேவை பாராட்டத்தக்கது. மணிபல்லவம் என்னும் தொடர் கதையின் இனிய நடையும், பொருள் செறிவும், அறிவூட்டும் வாதங்களும் வாசிப்போர் மனத்தைக் கவருமென்பதைச் சொல்லத் தேவையில்லை. அக்டோபர் 8-ந்தேதி இதழில் பன்மொழிப் புலவர் ''தமிழ் மொழிக்கென்று எழுத்து இலக்கியம் எல்லாம் எதற்கு? பாலி வடிவிலோ, தெய்வ மொழி உருவிலோ தமிழையும் எழுதி விட்டால் என்ன?'' என்று கேட்ட கேள்விக்கு இளங்குமரனது பதில் ஒவ்வொரு தமிழன் மனத்திலும் பசுமரத்தாணி போல் பதிந்திருக்கும்.

ஒரு மொழிக்கு அதன் எழுத்துக்கள் ஆடை. அதை நீக்குதல் அம்மொழியை மானபங்கம் செய்வதாகும் என்பது எத்தகைய உண்மை! மனிதன் மிருகங்களைப் போல் மரங்களிலும் குகைகளிலும் வசித்த காலமிருந்தே கண்ணால் கண்ட பொருள்களையும் மனத்தில் தோன்றிய எண்ணங்களையும் குறித்த சப்தங்களே பல்லாயிரமாண்டு பழக்கத்தால் மொழியாக உருவாகியிருக்கின்றன. அறிவு வளர்ச்சியின் பயனாக மேலும் பல்லாயிரமாண்டுகளுக்குப் பின் அம்மொழிக்கு ஏற்றவாறு எழுத்துக்கள் படைக்கப் பெற்றன. மொழிக்கு எழுத்துக்கள் உபகரணங்களேயன்றி, எழுத்துக்களுக்காக மொழி தோன்றவில்லை. எழுத்துக்களுக்குத் தகுந்தவாறு மொழிகளை மாற்றிக் கொள்ள வேண்டுமென்று சொல்வது, அம் மொழிகளைச் சிதைத்து அழித்து விடுவதாகும்.

இந்தி மொழி கட்டாயமாகப் புகுத்தப்படாதென்ற வாக்குறுதி காற்றில் பறக்கிறது. தேசத்தின் பொதுநிதியிலிருந்து ஏராளமான தொகை இந்தியைப் பரப்புவதற்காகச் செலவிடப்படுகிறது. தேவநாகரி எழுத்துக்களைப் பற்றிய வாக்குறுதியும் இப்படித்தான் இருக்குமென்று தமிழன் சந்தேகிக்க இடமிருக்கிறது. மொழிப் பற்று அளவு கடந்திருப்பது நாட்டுக்கு நன்மை பயக்காது என்பதை ஒப்புக் கொள்ளலாம். ஆனால் தமிழன் தன் மொழியைப் பிறர்பால் சுமத்தவில்லையே. பிறமொழி தன்பால் வலுக்கட்டாயமாகச் சுமத்தப்பட்டு, தன்மொழி உருக்குலைக்கப்படுவதைத்தானே எதிர்க்கிறான்? இது தவறா?

தமிழன் பண்பு எத்தகையதென்பதற்கு மதுரையில் நடந்த காங்கிரஸ் காரியக் கமிட்டி நிகழ்ச்சிகளே நல்ல எடுத்துக்காட்டு. ''இந்தியைப் படி, தமிழைத் தேவநாகரியில் எழுது'' என்று சொல்லிக்கொண்டு வந்திருக்கும் வடநாட்டாருக்கு அமோக வரவேற்புக் கொடுத்தான். பூ மழை சொரிந்து திகைக்க வைத்தான். கால் நூற்றாண்டாக நாட்டைச் சுற்றி வரும் இந்திரா காந்தி அம்மையார் சில தமிழ்ப் பெயர்களைக் கற்றுக் கொண்டிருப்பதாகச் சொன்ன பெருமையைக் கேட்டுக் கைதட்டி ஆர்ப்பரித்தான். ஒரு தமிழன் வடநாட்டுக்குச் சென்று ''தமிழைப் படியுங்கள், இந்தியைத் தமிழ் எழுத்துக்களில் எழுதுங்கள். எனக்கும் சில பொருள்களின் பெயர்களை இந்தியில் சொல்லத் தெரியும்'' என்று சொல்வானானால், எவ்வித வரவேற்புக் கிடைக்கும் என்பதைச் சிந்தித்துப் பார்த்தால் தமிழன் பண்பின் சிறப்பைத் தெரிந்து கொள்ளலாம்.

6-10-1961
அருவங்காடு

ஏ. டி. பால்

## பொது லிபிப் பிரச்னை

நமது இந்திய அரசின் 'ஐக்கிய இந்தியா'வுக்கான நடவடிக்கைகள் மிகவும் வருந்தத்தக்க விதத்தில் தோன்றுகின்றன. இந்தியா

அடிமை மனப்பான்மை என்பது பிரிட்டிஷ் ஆட்சியில் இருந்தது மட்டுமல்ல. எல்லாக் காரியங்களிலும் அரசாங்கத்தையே நம்பிப் பிழைப்பதும் அடிமை மனப்பான்மையே யாகும். ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய உள்ளத்தில் சுதந்திர உணர்ச்சியை வளர்த்து வர வேண்டும். தையல் மெஷின் வைத்துக் கொண்டு காரியம் நடத்தினாலும் கையைக் கொண்டு தைப்பதை மறந்து விடலாகாது. மெஷின் கெட்டுப் போனவுடனே, எல்லா வேலைகளும் நின்று போகும் நிலையில் இருக்கலாகாது. அரசாங்கம் என்பது ஒரு யந்திரமேயன்றி மக்களுடைய தன்னம்பிக்கையையும் சுதந்திரத்தையும் அழித்துவிடும் பிசாசாகப் போய்விடக் கூடாது.—ராஜாஜி

வைப் பிரிவினையின்றி ஐக்கியப்படுத்த வேண்டும், பிரிவினைச் சக்திகளை ஒழிக்க வேண்டும் என்ற கொள்கைகளைப் பாராட்டுகிறேன். ஒன்றுபட்ட பாரதம் என்று நினைக்கும் போதே மனம் மகிழ்கிறது. ஆனால் அதற்கான வழிமுறைகள் அர்த்தமற்றவை. பிரிவினைச் சக்திகளை மேலும் வளர்ப்பவை. உதாரணமாக, 'பொது லிபி'ப் பிரச்னையை எடுத்துக் கொள்வோம். தேவநாகரி லிபியில் நாம் தமிழ் மொழியை எழுதிடல் அதன் பழம் பெருமையையும் தனித் தன்மையையும் அழித்து விடும். நம் தமிழ்ப் பெண்களை மேல் நாட்டார்போல் உடுத்தச் சொல்வது போல்தான் இருக்கிறது. 'பொது லிபியும்'. இது ஒரு தேவையற்ற குழப்பம். நாட்டை ஒன்றுபடுத்த எண்ணினால் ஆங்கிலத்தைப் பொதுமொழியாக் கட்டுமே.

இதை நினைத்து வருந்துகையில்தான் சஞ்சீவ் போல் திரு மணிவண்ணன் அவர்கள் அக்டோபர் 8-ந்தேதி 'மணிபல்லவ'த்தில் இளங்குமரன் - பன்மொழிப் புலவர் வாதம் எழுதியிருக்கிறார்.

7-10-61
மதுரை
சேஷாத்திரி

## காப்பி விஷயம் கசக்கிறது

சென்னை மயிலாப்பூரில் இந்திய காப்பி போர்டின் கிளையில் இந்த மாதத்திலிருந்து திடீரென்று 'ரோபஸ்டா' என்ற மட்டரகக் காப்பிக்கொட்டை ஒரு பவுண்டு வாங்கினால் தான் இரண்டு பவுண்டு சாதாரண அல்லது உயர் ரகக் காப்பிக்கொட்டை தரமுடியு மென்று பிடிவாதம் செய்கிறார்கள். இதனால் அவர்கள் விற்பனை பாதிக்கப்படுவதோடு ஜனங்களின் மனக்கசப்பும் வளர்கிறது. சர்க்காரே ஏகபோக வியாபார உரிமை பெறும் பொழுது, வர்த்தக உரிமை எவ்வளவு பாதிக்கப்படும் என்பதற்கு இது ஓர் உதாரணம். இதனால்தான் பெர்னார்டு ஷா அவர்கள், ''நேர்மையில்லாத சர்க்கார் தேசியமயமாக்கும் பணியில் ஈடுபடும்பொழுது சமதர்மக் கொள்கைகளில் ஜனங்கள் நம்பிக்கை இழந்துவிடுவார்கள்'' எனக் கூறியிருக்கிறார்.

இந்திய காப்பி போர்டு 'ரோபஸ்டா'வைப் பிரசாரம் செய்வதற்குக் கட்டாயத் திணிப்பு ஒரு வழி என்று கருதினால் அது அவர்களுடைய 'வர்த்தக அறியாமை'யைத் தான் குறிக்கும்.

4-10-61
மயிலாப்பூர்
கே. பி. எஸ். மணி

## பாரபட்சம் ஏன்?

மதுரையில் காங்கிரஸ் மகாநாடு நடைபெற்றது. அதில் நேரு பெருமகனார் காங்கிரஸ் தலைவர்களில் ஒருவர் என்ற முறையில் கலந்து கொண்டார். அவர் ஆற்றிய உரையினை வானொலியில் ஒலிபரப்பினார்கள். ஆனால் சுதந்திரக் கட்சி மகாநாட்டில் பேசிய திரு ராஜாஜி அவர்களின் பேச்சினையோ, அல்லது தி. மு. க. மகாநாட்டில் பேசிய திரு அண்ணாத்துரை அவர்களின் சொற்பொழிவினையோ வானொலி நிலையத்தார் ஒலிபரப்பவில்லை. நாட்டின் பொதுச் சொத்தான வானொலி நிலையம் பாரபட்சம் காட்டலாமா?

கோயமுத்தூர்
2-10-61
கு. மருதாசலம்

## நன்கொடை நாடகம்

'நன்கொடை நாடகம்' என்ற தலைப்பின் கீழ் தாங்கள் எழுதியிருக்கும் தலையங்கத்தின் கருத்துக்களை நியாயத்தை உணர்ந்த அனைவரும் வரவேற்பார்கள் என்பதில் என்னளவும் சந்தேகமில்லை. இந்தியாவின் தலைசிறந்த பதவியான பிரதம மந்திரி பதவியைத் தாம் வகிக்கும்போது காங்கிரஸ் கட்சியின் தேர்தல் நிதிக்காக ஊர் ஊராகப் போய்ப் பணம் சேகரிப்பது முதற் குற்றம். கொடுக்கும் தன்மையைப் பரிகசித்து விட்டு, கொடுப்பதைப் பெற்றுக் கொள்வது இரண்டாவது குற்றம். 'கொடுத்தால் காங்கிரஸ் கட்சிக்கே கொடுங்கள்—மற்றக் கட்சிகளுக்குக் கொடுப்பதாக இருந்தால், காங்கிரஸ் கட்சிக்குக் கொடுக்க வேண்டாம்' என்று அவர் சொல்லுவது ஒரு விதத்தில் பயமுறுத்தலாகவும், மற்றொரு விதத்தில பரிகசிக்கத் தக்கதாகவும் இருக்கிறது.

கொழும்பு
5-10-61
என். கருணாநிதி

# மணிபல்லவம்

## 18 - சொல் இல்லாத உணர்வுகள்

அகன்ற வீதியில் சோழர் கோநகரத்தின் இராக் காவலர்கள் அளவாக அடிபெயர்த்து நடக்கும் ஓசை மட்டுமே கேட்டுக் கொண்டிருந்தது. பட்டினப்பாக்கத்துப் பெருமாளிகையில் இருளும் மௌனமுமே தங்களுக்குள் பரம இரகசியமாகக் கலந்து பேசிக் கொண்டு ஏதோ சதி செய்வது போலப் பயங்கர அமைதி நிலவியது. சுரமஞ்சரி தன் மாடத்தில் தன்னோடு இருளில் சிறை வைக்கப்பட்டிருந்த வசந்தமாலையைக் கேட்டாள்:

''வசந்தமாலை! வாழ்வதில் எதுவும் சுகமாகத் தெரியவில்லையானால் சாவதில் அந்தச் சுகம் இருக்கலாமோ என்று எண்ணிச் சாகத் தவிக்கும் துடிப்பு உனக்கு எப்போதாவது ஏற்பட்டிருக்கிறதோ...?''

வசந்தமாலை திடுக்கிட்டாள். அப்பால் என்ன இருக்கிறதென்று புரிந்து கொள்ள முடியாது சுற்றிலும் மூடியிருந்த இருளைப் போலவே இந்தக் கேள்வியும் இருந்தது. இந்தக் கேள்வியில் நிரம்பியிருக்கும் வார்த்தைகளுக்கு என்ன பொருள்? ஒரு பொருளும் அமையாமல் வார்த்தைகள் இருக்க முடியாது. சில சமயம் வார்த்தைகளே தாங்கிக்கொள்ள முடியாத அளவுக்குக் கனமான பொருள் இருப்பதும் உண்டு. அப்படி ஏதோ ஒரு கனமான துயரம் தன் தலைவியின் சொற்களில் இருப்பதை மெல்ல மெல்ல உணர்ந்தாள் வசந்தமாலை. அழுகை ஒலியை அடையாளமாகக் கொண்டு இருளில் தலைவி இருந்த இடத்தை அநுமானம் செய்தவாறு வசந்தமாலை நெருங்கி வந்தாள். அருகில் மண்டியிட்டு அமர்ந்து கொண்டு மெல்லக் கேட்டாள்:

''சாவதைப் பற்றிய நினைவு உங்களுக்கு இப்போது எதற்காக அம்மா வந்தது?''

''நைந்துபோன மனத்துக்கு எதை நினைப்பது, எதை நினையாமல் விருப்பது என்ற எல்லைகளே இல்லையடி, தோழீ! ஒவ்வொரு விநாடியும் அணு அணுவாகச் செத்துப் போய்க் கொண்டிருப்பதைவிட ஒரேயடியாகச் சாவது சுகம்தானே? பூக்குடலையிலிருந்து புறப்பட்ட அந்தப் பாம்பு என்னைத் தீண்டியிருக்கக் கூடாதோ?'' என்றாள் சுரமஞ்சரி.

வசந்தமாலை இப்போதும் தன் தலைவியிடம் பேசுவதற்குத் தகுதியான சொற்கள் தனக்குக் கிடைக்காமல் தவித்தாள். அவளுடைய அநுபவத்தில் பலமுறை இப்படிச் சொற்கள் கிடைக்காமல் தவிக்க நேர்ந்திருக்கிறது. எதிர்பாராத உணர்ச்சிகளை ஏற்று மறுமொழி கூறுவதற்குச் சொற்கள் துணை செய்யாமல் போய் நீந்தத் தெரியாதவள் வெள்ளத்தினிடையே குதித்தது போல் மயங்கினாள் அவள். 'துக்கம், பயம், தவிப்பு, காதல், வேட்கை போன்ற சில உணர்ச்சிகளை முழுமையாகப் பேசுவதற்கு ஏற்ற முழுமையான மொழி ஒன்று உலகத்தில் இன்னும் ஏற்படவில்லை போலிருக்கிறது, தோழீ!' என்று தன் தலைவி எப்



நா. பார்த்தசாரதி

போதோ தன்னிடம் சொல்லியிருந்த வாக்கியத்தை நினைத்துக் கொண்டாள் வசந்தமாலை. அவளுடைய மௌனத்தைக் கலைத்துக்கொண்டு மீண்டும் கரமஞ்சரியின் கேள்வி எழுந்தது.

''என்னடி, வசந்தமாலை! நான் கேட்ட கேள்விக்கு இன்னும் நீ பதில் சொல்லாமல் இருக்கிறாய்?''

''என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை, அம்மா! உங்களுடைய இந்தக் கேள்விக்கு மறுமொழி சொல்வதற்கு என்னிடம் சொற்கள் இல்லை. அதற்குத் தகுந்த சொற்களை நான் தேடிக் கொண்டிருக்கிறேன். 'உணர்ச்சிகளைப் பரிபூரணமாகப் பேசுவதற்கென்று முழுமையான மொழி எதுவும் உலகத்தில் இருப்பதாகத் தெரியவில்லை' என்று நீங்கள் அடிக்கடி சொல்வீர்களே! அதைத்தான் இப்போது நான் உங்களிடம் சொல்ல வேண்டியிருக்கிறது.''

''சில வெண்கல மணிகளுக்கு நடுவிலுள்ள நாவு அறுந்து போகும். அப்படி நாவறுந்த பின்பு அவற்றிலிருந்து நாதம் பிறவாது. உற்சாகம் அற்றுப் போன என் மனமும் இப்போது அப்படித்தான் நாக்கிழந்த மணியைப் போல இருக்கிறது. என்னுடைய வேட்கை சிறிது சிறிதாக வளர்ந்து தணியாத்தாகமாகியும் அதை நிறைவேற்றிக் கொள்ள முடியாமல் ஏமாந்து நிற்கிற காரணத்தால் என் வேட்கை தீர வேண்டும். அல்லது நானே தீர்ந்துவிட வேண்டும்' என்ற முடிவுக்கு நான் வந்தாயிற்றடி, வசந்தமாலை!''

'' தன்னையே அழித்துக் கொள்ளத் துணியும் அளவுக்கு அப்படி ஒரு வேட்கையும் உண்டா அம்மா?''

''உனக்குத் தெரியாதடி வசந்தமாலை! வேட்கை என்ற தமிழ்ச்சொல்லுக்கு, 'எதை அநுபவிக்கத் தவிக்கிறோமோ அதை அடைந்தாலன்றித் தீராத உணர்வு' என்று பொருள் விரியும். இரண்டு மனங்களுக்கு நடுவில் ஒன்றை மற்றொன்று தழுவ நெருங்கும் வேட்கைக்கு 'ஒருவர் ஒருவரை இன்றி அமையாமை' என்று அகப்பொருள் நூல்களில் பதசாரம் சொல்லி யிருக்கிறார்கள், தோழீ!''

''எந்தப் பதத்துக்கு எந்த நூலில் எப்படிப் பொருள் சொல்லியிருந்தால் என்ன அம்மா? மனத்தில் முதிர்ந்து முற்றி முறுகியவைகளாகக் கன்றிப் போன உணர்ச்சிகளின் ஆழத்தை அளப்பதற்கு ஒரு மொழியிலும் சரியான பதங்கள் இருப்பதாகத் தெரியவில்லை என்று நீங்கள் பலமுறை சொல்லியது தான் நிலைத்த உண்மையாக நிற்கும் போல் இருக்கிறது.''

''வசந்தமாலை! இந்த வேட்கைமுள் மனத்தில் தைத்த நாளிலிருந்து நான் தான் எல்லா வேதனைகளையும் பட்டுக் கொண்டிருக்கிறேன். இதற்குக் காரணமானவர் என்னவோ இந்த விநாடிவரை ஒரே விதமாகத்தான் இருக்கிறார். எதற்கும் அடிமைப்படாத இரும்பு மனிதர்களைக் கூட அன்புக்கு அடிமைப்படுத்தலாம் என்று அறநூல் ஆசிரியர்கள் கூறியிருக்கிறார்கள். ஆனால் என்னுடைய மனத்தின் வேட்கையைப் பிறப்பித்தவராகவும், வேட்கையாகவும், வேட்கையைத் தீர்க்கும் மருந்தாகவும் — எல்லாமாகவும் அமைந்திருக்கிற சுந்தர இளைஞரோ, அன்பைக்கூடப் பிறரிடமிருந்து ஏற்றுக் கொள்ளத் தயங்கும் அளவுக்குத் தன்மானம் உள்ளவராக இருக்கிறாரே. இன்றைக்கு நாளங்காடியில் நடந்த நிகழ்ச்சி அவருடைய தன்மானத்தில் கோபத்தையும் கலந்திருக்கும்....என் தந்தையாரின் சதிக்கு உடந்தையாக இருந்துகொண்டு நானே அவரைச் சூழ்ச்சியால் கொல்ல விரும்புகிறேன் என்றுகூட அவர் நினைத்திருக்கலாம்...''

''நிச்சயமாக அவர் அப்படி நினைத்திருக்க மாட்டார் அம்மா! உங்கள் மனம் அளவற்றுக் கலங்கிப் போயிருக்கிற காரணத்தால் நீங்களாகவே அவருடைய குணத்தை மாற்றி மாற்றி நினைத்துக் கொண்டு வீணாக வருந்துகிறீர்கள். கோபதாபங்களுக்கு ஆட்படுகிற சிறிய மனிதராக அவர் இப்போது தோன்றவில்லை. அப்படி ஆட்படுகிறவராயிருந்தால் நாளங்காடிக் கூட்டத்தில் உங்கள்மேல் எறியப்பட்ட கற்களைத் தம் உடம்பில் தாமே தாங்கிக் கொண்டிருக்க மாட்டார் அவர். வேகமாக மலையுச்சிக்கு ஏறிச் சென்றவன் அதற்கு அப்பால் பயங்கரமான பள்ளத்தாக்கைத் தவிர வேறொன்றுமில்லை என்று அறிந்து கொண்டு மறுபடியும் சமநிலைக்கே திரும்பி வந்தாற்போல உடல் வலிமையால் ஒரு காலத்தில் அகங்கார ஆடம்பர ஆணவங்களின் உச்சிக்குப் போய் விட்டு எளிமைக்குத் திரும்பிய அநுபவ ஞானியாகத்தான் இப்போது தோன்றுகிறாரம்மா அவர்! உங்களைக் கருவியாகப் பயன்படுத்திக் கொண்டு அவருக்கு இந்தக் கெடுதல் செய்தவர்கள் ஒரு நாளும் நன்றாயிருக்க மாட்டார்கள். அந்த நச்சுப் பாம்பு நாளங்காடியில் ஒருவரையும் தீண்டவில்லையானாலும் உங்கள் மனத்தில் அவருக்காக அவரையே பொருளாகக் கொண்டு பிறந்திருக்கும் வேட்கையைத் தீண்டி அதில் இழைந்திருக்கும் உறவினுள் நஞ்சைக் கலந்ததைப் போல ஆக்கி விட்டது.''

''வசந்தமாலை! அந்த உறவு பிறந்த முதல் நாளிலிருந்து இன்றுவரை அவரிடம் ஒரே தன்மையுடையதாய் மாறாமலே இருக்கும் குணம் ஒன்றை நான் தொடர்ந்து கவனித்துக் கொண்டு வருகிறேன். 'என்னிடமிருந்து எதையும் ஏற்றுக் கொள்ளாமை' என்ற குணம் தான் அது. அவர் யவனமல்லனை வெற்றி கொண்டு தோளில் முல்லை மாலை அசைய என் பல்லக்கெதிரே நின்றுகொண்டே நான் பரிசளித்த மணிமாலையை ஏற்றுக் கொள்ள மறுத்தார். பின்பொருநாள் வெள்ளியுருக்கி வார்த்து நீட்டினாற் போன்ற வெண்தாழை மடலில் செம் பஞ்சுக் குழம்பையும் என் உள்ளத்து உணர்வின் நளினங்களையும் குழைத்துக் குழைத்து எழுத்துக்களாய்த் தீட்டி நான் எழுதிய மடலையும், மடலின் விருப்பத்தையும் சேர்த்தே ஏற்றுக் கொள்ள மறுத்தார். அதன்பின் புயலும் மழையுமாயிருந்த பயங்கர இரவு ஒன்றில் கப்பல் கரப்புத் தீவின் நடுவே என்னுடைய மனத்தின் மெல்லிய உணர்வுகளையே காணிக்கைகளாக ஏந்திக்கொண்டு நான் மலர்ந்து மணம் பரப்பி நின்றபோது ஏற்றுக் கொள்ள மறுத்தார். இப்படித் தொடர்ந்து மறுத்துக்கொண்டே இருப்பதற்கு எவ்வளவு நெஞ்சு உரம் வேண்டும் என்று நினைத்துப் பார்க்கும்போது அவருடைய அந்த வலிமைக்கு முன்னால் நானும் என்னுடைய வேட்கையும் அணுவாகத் தேய்ந்து சிறுத்துப் போய் விட்டது போல் தோன்றுகிறதடீ! 'மனத்தை இடைவிடாமல் அரித்தெடுக்கின்ற காரணத்தினால் ஆசைதான் பெரு நோய்' என்று எனக்கு முன்பே நிமிர்ந்து நின்று கொண்டு துணிவோடு சொல்கிற ஞான வீரரிடம் போய் என்னுடைய ஆசையை நான் சொல்வதற்கான வார்த்தைகள் எந்த மொழியிலாவது இருக்க முடியுமா என்பதுதான் இப்போது என் பயமாயிருக்கிறதடீ, வசந்தமாலை!''

சுரமஞ்சரி ஒவ்வொரு சொல்லிலும் அழுகை தேங்கி நிற்க — ஒவ்வொரு சொல்லுமே தனித்தனியாகவும், வாக்கியமாகவும் பிரிந்தும் சேர்ந்தும் அழுவது போலவே பேசினாள். பக்கத்தில் இருளோடு இருளாக மண்டியிட்டு அமர்ந்திருந்த வசந்தமாலையிடமிருந்து தன்னுடைய இந்தப் பேச்சுக்குப் பதில் இல்லாமற் போகவே சுரமஞ்சரி பேச்சை நிறுத்தினாள்.

''என்னடீ வசந்தமாலை! நான் சொல்வதையெல்லாம் கேட்டுக் கொண்டு வருகிறாயோ, இல்லையோ?''

''...................''

இந்தக் கேள்விக்கும் வசந்தமாலையிடமிருந்து பதில் இல்லாமற் போகவே சுரமஞ்சரி தன் முகத்தை வசந்தமாலையின் முகத்தருகே கொண்டு போய் மூச்சுக் காற்றோடு மூச்சுக் காற்றுக் கலக்க முடிந்த அண்மையில் தோழி அப்போது அந்த மாடத்தின் இருளில் எதை அப்படி உற்றுக் கவனிக்கிறாள் என்று துழாவினாள். தலைவியாகிய தன் பேச்சையும் பொருட்படுத்தாமல் உதாசீனம் செய்து விட்டு உற்றுக் கவனிக்கும் அளவுக்கு அப்படி முக்கியமாக வசந்தமாலையின் பார்வைக்கு என்ன கிடைத்திருக்க முடியும் என்ற சந்தேகத்தோடு தோழியின் பார்வை சென்ற திக்கிலேயே தன் பார்வையையும் பின்தொடர விட்டாள் சுரமஞ்சரி. அப்படிச் சென்ற பார்வை தனக்கு இலக்காக வாய்த்த இடத்தில் போய் நின்றதும் அங்கே தென்பட்ட காட்சியிலிருந்து பயமும் நடுக்கமும் பிறந்தன. வசந்தமாலைக்கு வாய் அடைத்துப் போன காரணம் இப்போது சுரமஞ்சரிக்கும் புரிந்தது. சுரமஞ்சரியும் வாய் அடைத்துப் போனாள். பேசும் முயற்சிக்காக நாக்குப் புரள மறுத்தது. கண்கள் நிலைகுத்தி இமைக்கவும் மறந்தன.

பார்வை சென்ற திக்கிலே இருளின் நடுவில் அந்தரத்தில் தொங்கும் நெருப்புப் பொறிகளைப் போல் இரண்டு சிவப்பு இரத்தினங்கள் பளீரென்று மின்னிக் கொண்டிருந்தன. கறுப்பு உடம்பில் இரத்தம் வழிவது போல் செவ்வொளி விரித்து இருளின் கடுமையைத் துளைத்துக் கொண்டு பாயும் ஆற்றல் வாய்ந்த அத்தகைய இரத்தினங்கள் அந்தப்பெரு மாளிகையில் தன் தந்தையாரின் ஊன்று கோல் பிடியான யாளி முகத்தில் மட்டுமே உண்டென்பதைச் சுரமஞ்சரி நினைத்தாள். உணர்ந்தாள். அதன் விளைவாகப் பயந்தாள்.

## 19 - சுந்தரமணித் தோள்கள்

ஆலமுற்றத்துப் படைக்கலச் சாலைக்குத் திரும்பி வந்த பின்னும் நெடு நேரம் வரை முருகுதபட்டரைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான் இளங்குமரன்.

'அறிவின் மிகுதி காரணமாக மனத்தில் உண்டாகிற செருக்கை இழக்கக் கூடாது என்று எண்ணி எண்ணி அந்த இறுமாப்பையேவளர்த்துமேலும்மேலும்

தசை நோவு, கீல்வாதம், மார்புச்சளி ஆகியவற்றை, சீக்கிரமாகக் குணம் பெறச்செய்ய தடவுக




# நோபின்

கல்கெமிகோவின் நோவு நிவாரண மருந்து

சொறிசிரங்குகள், பருக்கள், கொப்புளங்கள், கட்டிகள், புண்கள், காயங்கள் முதலியவற்றிற்கு

# மார்க்வெண்டம்

நீம் க்ரீம்




"மார்கோ" சோப்பு உற்பத்தியாளரான கல்கெமிகோவின் தயாரிப்புகள்

CF-8TM-

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

---

பளபளக்கும் தர மேன்மையை நீங்களே தெரிந்து கொள்ளலாம்






# Spartan

ஆட்டோ-லாக்கேர்ஸ்....

வர்ணத்தின் நிறத்திற்கு உறுதி, உபயோகிப்பதில் எளிமை, நீண்ட கால சோபிதம், நீடித்த பளபளப்பு மற்றும் சீரான தர மேன்மை

அடிஸன் பெயின்ட்ஸ் & கெமிகல்ஸ் லிட்., செம்பியம், சென்னை-11

மெம்பர்: இந்தியன் பெயின்ட் அசோஸியேஷன்

PS (F) 6

Why tell him its processed ... he's convinced its Fresh!

PRINCE

# ஸ்பென்ஸரின்

பதம் செய்யப்பட்ட பழங்களுடன்

# விருந்தை

மேலும் சிறப்புறச் செய்யுங்கள்




புதிது என அவர் நம்பும்போது பதம் செய்தது என ஏன் சொல்ல வேண்டும்.

எப்போதும் புத்தம்புதியதாகவே இருக்கின்றன, பதம் செய்யப்பட்ட பழங்கள்!

உங்களுக்குப் பிடித்தமானதைத் தேர்ந்தெடுக்க ஸ்பென்ஸரின் புருட்காக்டெயில்ஸ், செர்ரிஸ் மாம்பழத் துண்டுகள், லிச்சிஸ், அன்னாசிப்பழத் துண்டுகள், திராட்சைப்பழம் முதலியன

எப்பொழுதும் ஸ்பென்ஸரின் உயர்ந்த தயாரிப்புக்களையே கேளுங்கள்

Processed by SPENCER & CO. LTD. IN THEIR MODERN PROCESSING PLANT AT KANPUR U.P.

ஸ்பென்ஸர் கம்பெனிக்காக கான்பூரிலுள்ள நவீன இயந்திர சாதனத்தில் பதம் செய்யப்படுகின்றன

பெருக்கிக் கொள்ள ஆசைப்படும் அறிவாளிகளைத்தான் நேற்று வரை இந்த நாளங்காடியில் நான் சந்தித்தேன். தான் தனக்குப் பெருமையாக விரும்பி வளர்த்துக் கொண்ட அகங்காரமே ஒரு நிலைக்கு மேல் தனக்கும் அடங்காதபடி மதமாகப் பெருகி விடும்போது அதை அந்த விநாடி வரை வளர்த்து வந்தவன் பரிதாபத்துக்கு உரியவனாகி விடுகிறான். கல்வியின் மிகுதி காரணமாகவும் மனித மனத்தில் பெருமிதம் உண்டாகலாம் என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். வீரத்துக்குத்தான் 'பெருமிதம்' என்பது மற்றொரு பெயர். பெருமிதமாவது மற்றவர்களினும் உயர்ந்து தான் பேரெல்லையில் நிற்றல். அறிவாளியாக இருப்பவன் பேரெல்லையில் நிற்பதை மற்றவர்கள் உணர்ந்து அவன் உயரத்தையும் தங்கள் தாழ்வையும் நினைத்து வியப்பதுதான் நியாயமான பெருமிதம். அப்படி இல்லாமல் 'நான் பேரெல்லையில் உயர்ந்து நிற்கிறேன்'— என்று பெருமிதத்துக்குச் சொந்தக்காரனே தன்னை வியந்து கொள்ள முற்படும் போதுதான் பெருமிதம் மெல்ல மெல்லப் பேதமையாக மாறுகிறது' — என்று எண்ணியவனாக நெருப்புப் பிடித்த வீட்டுக்குள் சிறைப்பட்டிருந்த வரைப் போன்று அகங்கார மதத்திலிருந்து விடுபடத் துடித்த முருகப்பட்டரின் முகத்தை நினைவுக்குக் கொணர்ந்து தந்தபடியே சிரித்துக் கொண்டான் இளங்குமரன்:

மருள் மாலை நேரத்துக் கடற் காற்று ஆலமுற்றத்துப் படைக்கலச் சாலையில் மரங்களையும், செடி கொடிகளையும், அவற்றின் காய், கனி, பூங்கொத்துக்களையும் ஆட்டி அசைத்துக் கொண்டிருந்தது. இளங்குமரன் படைக்கலச் சாலையின் தோட்டத்தில் நினைவுகள் வரிசையாய் அடுக்கும் மன நிலையோடு உலாவிக் கொண்டிருந்தான். மண்ணின் கூந்தலைப் போல் தரையில் சுருண்டு கொடியோடிப் பரந்து படர்ந்திருந்த அறுகம் புல்வெளியில் புள்ளி மான்கள் உலாவிக் கொண்டிருந்தன. அந்த மான்கள் தலை நிமிரும்போது தற்செயலாய் அவற்றின் கண்கள் மட்டுமே தனியாக நகர்ந்து முன் வருவன போல் தோன்றும் அழகை இளங்குமரன் கண்டான். இன்னொரு புறம் இந்த மண்ணின் எண்ணற்ற அழகுகளைக் காண்பதற்காகவே தன் வண்ணத் தோகையெல்லாம் கண்ணாகி நின்றாற் போல் மயில் ஒன்று கலாபம் விரித்து ஆடிக் கொண்டிருந்தது. ஆலமுற்றத்துக் கோயில் மதிலுக்கும் அப்பால் கடல் நீல நிறத்துக் கோல எழிற் கொள்ளை




"உங்களிடம் நேற்று இருபது ரூபாய்க் குடை வாங்கினேனே! அது மகா மட்டம் போலிருக்கு!"

"ஏன் சார்? அது நல்ல உயர்ந்த ரகமாச்சே? என்ன ஆகிவிட்டது?"

"நேற்று ஒரு ஓட்டலில் மறந்து வைத்துவிட்டேன்! இன்றும் அது வைத்தபடி அங்கேயே இருந்தது என்றால் என்ன அர்த்தமாம்?"

யாக எல்லையற்றுப் பரந்து தெரிந்தது. தோட்டத்தில் உலாவிக் கொண்டே தன் போக்கில் நிமிர்ந்த இளங்குமரன் முல்லை தன்னை நோக்கி வருவதைக் கண்டு திகைத்து நின்றான். மாலையில் படைக்கலச் சாலைக்கு வந்து தன்னைக் காண்பதாகத் தன்னிடம் நாளங்காடியில் வளநாடுடையார் கூறியிருந்தது இப்போதுதான் அவனுக்கு நினைவு வந்தது. புறப்படும்போது வளநாடுடையாரும், அவர் மகளும் சேர்ந்து புறப்பட்டு வந்திருக்க வேண்டுமென்றும் வளநாடுடையார் நீலநாகமறவரோடு பேசச் சென்ற பின் முல்லை தனியாகத் தன்னைத் தேடிக்கொண்டு தோட்டத்துக்கு வருகிறாள் என்றும் இளங்குமரன் புரிந்து கொண்டான்.

முல்லை தொலைவில் வரும் தோற்றத்தைக் கொண்டே அன்று அவள் அதிகமான சிரத்தையோடு தன்னை அலங்காரம் செய்து கொண்டு வந்திருக்கிறாள் என்பதை இளங்குமரன் அறிந்து கொள்ள முடிந்தது. எதிரே தன்னை நோக்கி அவள் ஒவ்வொரு முறை சிலம்பு ஒலிக்கும் பாதங்களைப் பெயர்த்து வைக்கும் போதும் அப்படிப் பாதம் பெயர்த்து மிதித்து நடக்கின்ற மண்ணின்மேல் ஒரு புதிய அழகை ஊன்றிக் கொண்டே

நடந்து வருவதுபோல இருப்பதை இளங்குமரன் கண்டான். உடனே காரணமின்றியோ அல்லது காரணத்துடனே அவனுக்கு விசாகையின் நடை நினைவுக்கு வந்தது. 'இந்த மண்ணில் ஊன்றி நடக்க மாட்டேன்' என்பதுபோல் பிரவாகத்தில் மிதக்கும் பூவாக நடந்து வரும் விசாகையையும், இந்த மண்ணில் ஒவ்வோர் அடி பெயர்த்து வைக்கும் போதும் ஒரு புதிய அழகை ஊன்றிக் கொண்டு நடப்பது போல் நடந்துவரும் முல்லையையும் ஒப்பிட்டு எண்ணி, அந்த எண்ணத்துக்கும், நினைவுக்கும் மனத்துக்குள்ளிருந்து கிடைக்கும் முடிவை அவன் பெறுவதற்குள்ளேயே முல்லை அவனுக்கு மிக அருகில் வந்து விட்டாள்.

''என் தந்தையும் நானும் வந்தோம். ஆலமுற்றத்துத் தாத்தாவும் தந்தையும் பேசிக் கொண்டே கடற்கரைப் பக்கமாகப் போய் விட்டார்கள்...நான் மட்டும்.......?''

பலமில்லாதவன் வீசி எறிந்த கல் குறி வைத்த இலக்குக்கு முன்னாலேயே தளர்ந்து கீழே விழுந்து விடுவதைப் போல் முல்லையின் பேச்சும் தைரியமாகத் தொடங்கப்பட்டுத் தைரியம் நடுவிலேயே தளர்ந்து போனதால் இப்படித் தயங்கி நின்றது.

இளங்குமரன் அவள் முகத்தை உற்றுப் பார்த்து விட்டுப் புன்னகை செய்தான். அவனுடைய பார்வையைத் தாங்கிக் கொள்வதற்கே பயமாயிருந்தது அவளுக்கு. அவனோ பார்வையோடு விட்டு விடாமல் அவளைத் தன் வார்த்தைகளையும் தாங்கிக் கொள்ள வைத்தான்:

''நீயும் கடற்கரைப் பக்கமாகப் போயிருக்கலாமே, முல்லை! உனக்கு மட்டும் கடற்கரைக் காற்றின் மேல் இது ரென்று இவ்வளவு வெறுப்பு இன்றைக்கு எப்படி ஏற்பட்டது?''

''முதன்மையான விருப்பமாக எதை விரும்புகிறோமோ அதுவே கைநழுவிப் போகிறபோது இரண்டாம்பட்சமான எல்லாவற்றையும் வெறுக்க வேண்டியதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்?'' என்று இளங்குமரனுக்குப் பதில் சொல்லிவிட்டுத் தான் சிறிது தைரியமாகவே பேசி விட்டதாக உள்ளூறப் பெருமையும் பட்டுக் கொண்டாள் முல்லை. நாளங்காடியில் அவனுக்கு நெல்லிக்கனியளிக்கும் போது பயந்தது போல அவன் முகத்தைப் பார்ப்பதற்கே பயப்படாமல் இங்கே இப்போது தான் சற்றுத் துணிந்தே அவனுடன் பேசலாமென்று தோன்றியது அவளுக்கு. அவனும் துணிவாகவே அவளைக் கேட்டான்:

''நீ முதன்மையாக விரும்பியது எது? இரண்டாம் பட்சமாக விரும்பியவை எவை? முதன்மையாக விரும்பியது ஏன் கிடைக்கவில்லை அதற்காக இரண்டாம்பட்சமாக விரும்பியவற்றை நீ வெறுப்பானேன்? என்று தெரியாமல் நான் உன்னுடைய கேள்விக்கு மறுமொழி சொல்வது சாத்தியமில்லையே முல்லை!'' என்றான் இளங்குமரன்.

''சாத்தியமிராதுதான். என்னுடைய இந்த இரண்டு கைகளாலும் எனக்கு மிகவும் வேண்டிய ஒருவருடைய தோள்களில் புண்பட்டபோதெல்லாம் மருந்து தடவிக் காயத்தை ஆற்றினேன் நான். இப்போது இவ்வளவு காலத்துக்குப் பின் அந்தத் தோள்களில் காயம்பட்ட தழும்பும் தெரியவில்லை. அவை சுந்தர மணித் தோள்களாகப் பொன் நிறம் பெற்று மின்னுகின்றன. ஆனால் ஒரு காலத்தில் அந்தத் தோள்களுக்கு மருந்திட்டு அவற்றைக்



காத்தவனுடைய கைகளுக்கு இன்று வரை அந்தத் தோள்கள் நன்றி மறந்தவையாகவே இருக்கின்றன என்பதை நினைப்பதுதான் தாங்கிக்கொள்ள முடியாத வேதனையாயிருக்கிறது ஐயா!''

முல்லை இப்படி இன்னும் குழந்தைத் தன்மை மாறாமல் தான் சொல்ல வந்த விஷயத்தைச் சிறு பின்னைக் கதை போலப் பின்னிப் பின்னிச் சொல்லியதைக் கேட்டு இளங்குமரன் மேலும் சிரித்தான்.

''முல்லை! இன்று நீ யாரைக் குறை சொல்கிறாயோ அந்த மனிதன், 'மார்பிலும் தோளிலும் காயம் படுவதைக் கவிகள் விழுப் புண்கள் என்று கூறிப் புகழின் முத்திரைகளாகப் போற்றியிருக்கிறார்கள். ஆகவே நீ இவற்றை மருந்திட்டு ஆற்ற வேண்டாம்' என்று சொல்லி அந்த நாளிலேயே உனக்கு எச்சரிக்கை செய்தது உண்டா, இல்லையா? அன்று நீ, அவன் தனக்கு மருந்திட வேண்டாமென்று மறுத்ததையும் பொருட்படுத்தாமல் அவனுக்கு மருந்திட்டுக் காயங்களை ஆற்றி விட்டு இன்று இவ்வளவு காலத்துக்குப் பின்பு வந்து மறுபடியும்



உன் சொற்களால் அதே மனிதனுடைய மனத்தைக் காயப்படுத்தலாமா? இது உனக்கு நியாயமா? அன்று ஆற்றிய காயத்துக்கு நீ இன்று வந்து பயனை எதிர்பார்ப்பதும் பண்பில்லையே? பிரதி பலனை எதிர்பார்த்துச் செய்யும் காரியங்கள் உயர்ந்தவைகள் அல்லவே? அப்படிப் பயனை எதிர்பார்த்துச் செய்யும் நோன்புகளைச் 'சில விரதங்கள்' என்று பெயரிட்டுச் சமய நூல்கள்கூடக் குறைவாகத்தானே மதிப்பிடுகின்றன?''

''நான் சமய நூல்களைப் படிக்கவில்லை. இந்த உலகத்தில் நான் படித்துத் தெரிந்து கொண்டிருக்கிற ஒரே விஷயம் அன்புதான். அந்த அன்பை உங்களோடு வாதிட்டுத் தோற்கவும், நான் விரும்பவில்லை....''

நாளங்காடியில் சமயவாதிகளின் பெரிய பெரிய கேள்விகளை யெல்லாம் அழகாகவும், ஆணித்தரமாகவும் கூறிய மறுமொழிகளின் மூலம் வென்ற இளங்குமரன் பேதைமை ஒன்றைத் தவிர வேறெதுவும் கற்றறியாத முல்லை என்னும் இளம் பெண்ணுக்கு முன்னால் இப்போது தயங்கினான், திகைத்தான்.

'இந்த உலகத்தில் நான் படித்துத் தெரிந்து கொண்டிருக்கிற ஒரே விஷயம் அன்புதான்!' என்று சொல்லிக் கொண்டே கண்ணீரும், அழுகையும் பொங்க எதிரே வந்து நிற்கும் இந்தப் பெண்ணுக்கு இன்று நான் என்ன பதில் சொல்வது?' என்று அவன் மனத்தில் பெரிதாய் ஒரு கேள்வி எழுந்தது.

அன்புக்குச் சமயம் ஏது? வாதம் ஏது? தருக்கம் ஏது? எந்தப் பிரமாணத்தைச் சொல்லி அதை எப்படி மறுப்பது? அவனுக்கான பதிலைத் தேடுவது போல் எதிரே நிற்கும் முல்லையின் மனத்தைப் போலவே மேலே நிர்மலமாய்க் களங்கமற்றிருந்த ஆகாயத்தைப் பார்த்தான் இளங்குமரன். யாருக்குச் சொல்வதற்குப் பதில் கிடைக்காமல் அவன் ஆகாயத்தில் அதைத் தேடிக்கொண்டிருந்தானோ, அவள் அவனுடைய சுந்தரமணித் தோள்களை அவையே தனக்குப் பதில்கள் என்பது போலப் பார்க்கலானாள். கடற்காற்று ஆனந்தமாக வீசிக் கொண்டிருந்தது. மயில் இன்னும் நன்றாகத் தோகை விரித்து ஆடிக் கொண்டிருந்தது. முல்லைக்கும் இளங்குமரனுக்கும் நடுவில் நின்ற குட்டிப் புள்ளிமான் ஒன்று தலைநிமிர்ந்து மைதீட்டினாற்போல ஓரங்களில் கருமை மின்னும் தன் அழகிய நீள்விழிகளால் இருவரையும் மாறி மாறிப் பார்த்தது. குனிந்து அந்த மானின் கண்களைப் பார்த்த இளங்குமரன் முல்லையைப் பார்க்கவில்லையானாலும் அவள் கண்களிலும் அதே மருட்சி கலந்த அழகுதான் இருக்குமென உணர்ந்தான். (தொடரும்)

# செல்லல் தவிர்த்திடுவாய்!

மின்னல் வகிடெடுத்து மேகக்குழல் தொடுத்துக்—கரும்
பின்னற் சடைமடித்துப் பெண்ணென் றுருக்கொடுத்துப்—புதுப்
பொன்னின் நிறம்படைத்துக் கன்னங் கனிந்திருக்கக்
கன்னித் திறம்பிறந்து மின்னிச் சிறந்திருக்க—இள
மொட்டவிழும் பருவத்துக் கட்டழகு பட்டழகு—நெற்றிப்
பொட்டழகு மிக்குயர நிற்குமெழில் கற்சனியச்
சொற்கனியும் பொருள்கனியக் கவிகனியக் கனித்திருக்கும்—கைப்
பெட்டியுடன், மனநிற்கக் கால்நடக்கும் மதிவதனி!
நீலக் கரையிட்டலை நீளக் கடலெதிரே—தனி
நீலக் கரையிட்டலை கோலத் துகிலெழிலீ—
கண்கள் மிகநெருங்க இருகால்கள் தனிபிரியச்—சிறு
பெண்கள் பெற்றமனை மீரும்போ கனகல்லோ
பூட்டுத் திறவாத பெட்டியிலே மனக்கொள்ளை
போட்டுத் திறைகொடுத்த பிள்ளை யருகிருக்கச்
செல்லும் கால்களொடும் செல்லாக் கண்களொடும்
மெல்லத் தயங்கிவரும் செல்லக் கயல்விழியே—நீ
செல்லல் தவிர்த்திடுவாய் செல்லல் தவிர்த்திடுவாய்!

அட்டைச் சித்திரம்: விஜு

* கவிதை—மணிவண்ணன்

STAINLESS STEEL WITH SILVER FINISH !



மின்சாரத்தில் இயங்கும்

# எவர்ஸில்வர் இட்லிகுக்கர்

*நீங்கள் நம்பலாம்...*

சந்தேகமே இல்லை... இது சுலபம் - மின்சாரத்தில் இயங்கும் இந்த இட்லி குக்கர் சில நிமிடங்களில் 12 இட்லிகளைத் தயாரித்துத் தருகிறது. மிகச் சுலபமாக, காலத்தை வீணாக்காமல், வீட்டு எஜமானிகள் உண்மையில் உபயோகப்படுத்துவது இதையேதான்.

Sreeco

- வீடுகள், ஹோட்டல்கள், காண்டீன்களுக்கு இன்றியமையாதது.
- ஈரத்துணியால் துடைத்தால் போதும் கரி நீங்கி பளபளப்பாகி விடுகிறது!

கேட்லாக் இலவசம்

## ஸ்ரீனிவாஸா என்ஜினியரிங் கோ.,

உலோகத் தகடு சாமான்கள், ஸ்க்ரு மெஷின் பாகங்கள்,
எவர்ஸில்வர் பிட்டிங் தயாரிப்பவர்கள்.
162, மவுண்ட் ரோட், மதராஸ்-2.
தொழிற்சாலை: A-7, இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், கிண்டி, மதராஸ்-32.

# திருப்தி

## விந்தன்

நண்பர் நட் - 'நட்'டாவது 'போல்'டாவது என்று நினைக்காதீர்கள்! 'நடேசன்' என்ற பெயரைத்தான் 'நட்'என்று இரத்தினச் சுருக்கமாகச் சுருக்கி வைத்துக்கொண்டிருக்கிறார் நண்பர்!

காரணம், தமிழ் நாட்டில் பிறந்தும் தமிழில் கவிதை எழுதுவதை அகௌரவமாக எண்ணி, அவர் ஆங்கிலத்தில் கவிதை எழுத ஆரம்பித்து விட்டது தான்!

இதனால் ஆங்கில நண்பர்கள் மட்டுமல்ல; ஆங்கில நாணயங்களான பவுன், ஷில்லிங், பென்ஸும் அவருக்குத் தாராளமாகக் கிடைத்து வந்தன.

எனினும், அந்த நோபல் பரிசை, உலகம் முழுவதும் ஒரே நாளில் தன்னை அறிமுகப்படுத்தி வைத்துவிடும் சக்தி வாய்ந்த அந்த நோபல் பரிசை—ஒரு முறையேனும் தட்டிக்கொண்டு விட வேண்டும் என்ற கட்டுக்கடங்காத ஆசை அவருக்கு. இதனால் அந்தப் பரிசுக்குரிய கவிதை ஆண்டு வரும்போதெல்லாம் அதை ஆவலுடன் எதிர்பார்ப்பதும், எதிர்பார்த்து ஏமாற்றமடைவதும் அவருக்கு வழக்கமாயிருந்துவந்தது.

ஃ

ஒரு நாள், ''வீடு வேண்டும்; பெரிய வீடாக வேண்டும்!'' என்றார் நண்பர் நட், கையை அகல விரித்துக் காட்டி.

''நீங்கள் நான்கு பேர்தானே இருக்கிறீர்கள்? இப்போதிருக்கும் வீடு போதவில்லையா, உங்களுக்கு?'' என்றேன் நான்.

''எங்களுக்காகக் கேட்கவில்லை நான். லண்டன் நண்பர் பட் என்பார் வரப்போகும் வசந்த காலத்தின்போது இந்தியாவுக்கு வருகை தரப் போவதாக எழுதியிருக்கிறார். கிடைத்தற்கரிய அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, நான் அவருக்கு ஒரு நாள் விருந்து வைக்கலாமென்று நினைக்கிறேன். இப்போதிருக்கும் வீடு அதற்குத் தகுதியாயிருக்குமென்று தோன்றவில்லை. எனவேதான்....''

''பாக்ஸ் ரோடில் ஏதோ ஒரு பங்களா காலியாயிருப்பதாகச் சொன்னார்கள். சாயந்திரம் வேண்டுமானால் வாருங்கள்; போய்ப் பார்த்துவிட்டு வரலாம்.''

சொன்னது சொன்னபடி, அன்று மாலை குழந்தை விண்ட்டருடன் நண்பர் நட் வந்தார். மூவரும் பாக்ஸ் ரோடுக்குச் சென்றோம். வழியில், ''சாவியை வாங்கிக் கொண்டு விட்டீர்களா?'' என்றார் நண்பர்.

''வாங்கிக் கொண்டு விட்டேன்!'' என்றேன் நான்.

பார்ப்பதற்கு அழகாய்த்தான் இருந்தது பங்களா: ஆனால் கிழக்குப் பார்த்த வாசல்......

''தெற்குப் பார்த்த வாசலாயிருந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்!'' என்று தம் முதல் குறையை வெளியிட்டார் நண்பர்.

''கிழக்குப் பார்த்த வாசலும் நல்லது தான்!'' என்றேன் நான்.

''வாசலில் வேப்ப மரமல்லவா இருக்கிறது? பூவரசு வைத்திருந்தால் விசேஷமாக இருந்திருக்கும்!'' என்று நண்பர் தம் இரண்டாவது குறையை வெளியிட்டார்.

''அதனாலென்ன, நீங்கள் வந்தபிறகு வேண்டுமானால் பூவரசம் கொண்டுவந்து வைத்துக்கொள்ளுங்களேன்!''

''வீட்டின் அகலம் எத்தனை அடி இருக்குமென்று நினைக்கிறீர்கள்?''

''ஏன்?''

''இருபத்தைந்து அடி இருந்தால் மனைவி மாண்டு போவாளாம்.!''




''உங்கள் தீபாவளி ஸ்வீட்டை ஒரு மாதம் கழித்து எனக்குப் போடுவதை விட, இப்பொழுதே ஏதாவது ஒரு ரேட் பேசிக் கொடுத்துடுங்க! என் மாப்பிள்ளை; பெண்ணுக்கு வேண்டும்!''



''ஐயய்யோ! மாப்பிள்ளை கோபித்துக்கொண்டு போகிறாரே; எங்கேதான் போகிறாரோ?''

''இங்கே குழாயிலே தண்ணி வந்து ஸ்நானம் பண்றதுக்குள்ளே காசிக்கே போய்க் கங்கா ஸ்நானம் பண்ணிட்டு வரேன்னுதான் போகிறாரம்மா!''

''கவலைப்படாதீர்கள்; முப்பது அடிக்குக் குறையாது!''

''நீளம்?''

''நாற்பத்து நான்கு அடி இருக்கலாம்......!''

''ஐயையோ! கண்ணே போய் விடுமாமே?''

''ஆபத்துத்தான்! கொஞ்சம் பொறுங்கள்; கையாலேயே அளந்து பார்த்துவிடுகிறேன்!'' என்று அளந்து பார்த்துவிட்டு, ''சரியாக நாற்பத்திரண்டு!'' என்றேன்.

''சந்தோஷம்; அஷ்ட லட்சுமிகளும் குடியிருப்பார்கள் என்பது சாஸ்திரம்!''

'' எல்லா வகையிலும் ஆங்கில நடை உடை பாவனைகளைப் பின்பற்றும் நீங்கள், நமது சாஸ்திரத்தில் இவ்வளவு தூரம் நம்பிக்கை வைத்திருப்பீர்கள் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை......!''

''நெற்றியில் நாமத்தைப் போட்டுக் கொண்டு, தலையில் 'ஹாட்'டையும் வைத்துக் கொள்கிறார்களே, அந்த வகையில் சேர்த்துக்கொள்ளுங்களேன், என்னை!'' என்றார் அவர், பலமாகச் சிரித்துக் கொண்டே.

நானும் பதிலுக்குச் சிரித்துக் கொண்டே கதவைத் திறந்தேன்.

''மாடிப் படி ஹாலிலேயே இருக்கிறதா, நல்லதுதான்!''

''நல்ல வேளை, பின்பக்கம் இருந்தால் நன்றாக இருக்கும் என்று சொல்லாமல் இருந்தீர்களே?''

''தெற்குப் பார்த்தாற் போல் இரண்டு ஜன்னல்கள் வைக்கவே வைத்தார்கள்; அவற்றை இன்னும் கொஞ்சம் பெரிதாக வைத்திருக்கக் கூடாதோ?''

''வைத்திருக்கலாம்; அப்புறம்?''

''மெட்ராஸ் டெர்ரஸுக்குப் பதில் பாம்பே டெர்ரஸ் போட்டிருந்தால் இந்த மரங்கள் கண்ணை உறுத்தாது!''

''ம், அப்புறம்?''

''இன்னும் எத்தனையோ குறைகள்; இருந்தாலும்.....''

இந்தச் சமயத்தில் அவருடைய குழந்தை விண்ட்டர் ஓடோடியும் வந்து, ''அப்பாப்பா! எனக்கு வீடு ரொம்பப் பிடித்துப் போய்விட்டது, அப்பா! அதோ இருக்கிறது பாருங்கள் மாடிப் படி, அந்த மாடிப் படிக்குக் கீழே இருக்கும் சந்தில் நான் ஒளிந்து கொண்டு விட்டால், அண்ணா மான்ஸெஹால் என்னைப் பிடிக்கவே முடியாது, அப்பா!'' என்றான் உற்சாகத்துடன்.

''பார்த்தீர்களா, இந்த வீட்டைப் பற்றி உங்களுக்கு எத்தனையோ குறைகள்! உங்கள் குழந்தைக்கோ ஒரு குறையும் தோன்றவில்லை; தனக்குக் கிடைத்த ஒரு மாடிப் படிச் சந்தை வைத்துக் கொண்டு, 'வீடே எனக்கு ரொம்ப ரொம்பப் பிடித்துப் போய் விட்டது!' என்கிறான், திருப்தியுடன்!'' என்றேன் நான்.

அவ்வளவுதான்; ''எக்ஸெலெண்ட் ஐடியா, ப்ரில்லியண்ட் ஐடியா!'' என்று ஒரே கத்தாகக் கத்திக்கொண்டே, துள்ளுத் துள்ளென்று துள்ளிக் குதிக்க ஆரம்பித்துவிட்டார் கவிஞர் நட்.

''என்ன! என்ன வந்துவிட்டது, உங்களுக்கு?'' என்றேன் நான் ஒன்றும் புரியாமல்.

''சந்தேகமேயில்லை! இந்த ஆண்டு நோபல் பரிசு எனக்குத்தான்!'' என்றார் கவிஞர், மீண்டும் மீண்டும் துள்ளித் துள்ளிக் குதித்தபடி.

''வாங்கும்போது வாங்கிக் கொள்ளுங்களேன்; அதற்காக இப்போதே 'குதி குதி' என்று குதிப்பானேன்?''

''உங்களுக்குத் தெரியாது, ஸார்! இப்படி ஒரு 'ஐடியா' இதுவரை 'ஸ்ட்ரைக்' ஆகாமல்தான் எப்போதோ வாங்கியிருக்க வேண்டிய நோபல் பரிசை நான் இன்னும் வாங்காமலிருக்கிறேன்! கடைசியில், என் கண்மணியாலல்லவா அந்த 'ஐடியா' எனக்கு 'ஸ்ட்ரைக்' காகி யிருக்கிறது?'' என்று சொல்லிக்

கொண்டே குழந்தையைத் தூக்கி 'முத்து, முத்து' என்று முத்த ஆரம்பித்து விட்டார் கவிஞர்.

''அப்படி என்ன ஐடியா ஸார், திடீரென்று உங்களுக்கு 'ஸ்ட்ரைக்'காகிவிட்டது?'' என்று கேட்டேன், நான்.

''மனிதன் பேராசை பிடித்தவன்; அவனுக்கு என்ன கிடைத்தாலும் திருப்தி என்பதே ஏற்படுவதில்லை. மேலும் மேலும், 'இது கிடைக்கவில்லையே, அது கிடைக்கவில்லையே!' என்று கிட்டாத பொருள்களுக்காகக் கொட்டாவி விட்டுக்கொண்டே இருக்கிறான்; ஆனால் குழந்தைகள்—கல், மண், கதவிடுக்கு, மாடிப் படி சந்து—எது கிடைத்தாலும் திருப்தியடைந்துவிடுகின்றன. இந்த அற்புதமான கருத்தை ஆதார கருதியாக வைத்து, அபூர்வமான காவியம் ஒன்று எழுதினால் நோபல் பரிசு எனக்குக் கிடைக்காமல் வேறு யாருக்கு ஸார், கிடைத்துவிடும்?'' என்றார் அவர், மிடுக்குடன்.

''நல்ல வேளை! என்னிடம் சொன்னதுபோல் வேறு எந்தக் கவிஞனிடமாவது இந்தக் கருத்தைச் சொல்லிவிடாதீர்கள்; அவன் உங்களை முந்திக் கொண்டு விடப்போகிறான்!'' என்று நான் அவரை எச்சரித்து வைத்தேன்.

''ஆமாம், ஆமாம்; நான் இந்தக் காவியத்தை எழுதி முடிப்பதற்கு முன்னால் நீங்களும் வேறு யாரிடமும் சொல்லிவிடாதீர்கள்!'' என்று என்னையும் பதிலுக்கு எச்சரித்துவிட்டுச் சென்றார், அவர்.









நாலைந்து மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் கடற்கரைக்குப் போய்விட்டுக் கவிஞர் 'நட்'டின் வீட்டு வழியாக வந்து கொண்டிருந்தேன்.

வானத்தை நோக்கியபடி, கவிஞர் வாசலில் நின்றுகொண்டிருந்தார்.

''என்ன மிஸ்டர், நட்! காவியத்தை எழுதி முடித்து விட்டீர்களா?'' என்றேன் நான், பழகிய தோற்றத்துக்காகப் பார்த்தவுடன் ஏதாவது பேச வேண்டுமே என்பதற்காக!

''நீங்களா? வாங்க ஸார், வாங்க! இன்னும் நாலே நாலு அடிகள்தான் பாக்கியிருக்கின்றன. அதைப் பற்றித்தான் இப்போதும் யோசித்துக் கொண்டிருக்கிறேன்!'' என்றார் அவர்.

''மன்னியுங்கள்; நல்ல சமயத்தில் வந்து உங்கள் கற்பனைக்குத் தடையாக இருந்துவிட்டேன்!'' என்று நான் அவருக்கு வருத்தம் தெரிவித்துவிட்டு, மேலே நடந்தேன்.

அப்போது 'ஓ' என்று அலறிக்கொண்டிருந்த குழந்தை விண்டருடன் அவருடைய மனைவி அங்கு வந்து, ''இவளை என்னவென்று கேட்டீர்களா?'' என்றாள், சிரித்துக்கொண்டே.

''என்னவாம், என் கண்ணுக்கு?'' என்றார் கவிஞர், நோபல் பரிசுக்கு வித்திட்டுத் தந்த தன் அருமைக் குழந்தையை அன்புடன் வாங்கி அணைத்துக் கொண்டபடியே.

''வானத்தில் இருக்கும் நிலவைப் பிடித்து இவளுக்குத் தர வேண்டுமாம்; அப்போதுதான் இவள் சாப்பிடுவாளாம்!''

அவ்வளவுதான்; தலையில் இடி விழுந்ததுபோல் அதிர்ச்சியுற்ற கவிஞர் நட் குழந்தையை இறக்கிக் கீழே விட்டுவிட்டு அவசரம் அவசரமாக உள்ளே சென்றார்; பூர்த்தி பெறாத மனோரதம்போல் பூர்த்தி பெறாமலிருந்த அந்தக் கருத்தோவியத்தை எடுத்துக் கொண்டு வந்து சுக்குநூறாகக் கிழித்து எறிந்துவிட்டு, ''போச்சு; என் முயற்சி அத்தனையும் வீணாய்ப் போச்சு! — என்ன பேராசை இந்தக் குழந்தைகளுக்கு? இவையும் மனிதர்களைப் போலவே கிட்டாத பொருள்களுக்கெல்லாம் கொட்டாவி விடுகின்றனவே! — இனி நோபல் பரிசாவது, எனக்குக் கிடைக்கப் போவதாவது?'' என்றார் பெருமூச்சுடன்.

''மனிதக் குழந்தைதானே? பிறக்கும் போதே பேராசையும் சேர்ந்து பிறந்துவிட்டாற் போலிருக்கிறது!'' என்று சொல்லிவிட்டு நகர்ந்தேன், நான்.



**சோப் உபயோகிப்பதால்**
**கூந்தல் சோபையை**
**இழக்கிறது**

# 'ஹேலோ'

**கூந்தலைப் பளபளப்பா**
**கச்செய்கிறது!**

ஹேலோ ஒரு சோப்போ,
எண்ணெய் பசையுள்ள
கிரீமோ அல்ல—சோபையை
இழக்கச் செய்யும் சோப்பின்
கரைபடிவதில்லை!



ஏராளமான நுரையை
உண்டாக்குகிறது—கூந்தலை
அலசுவதில் தனிப்பட அலசி
சுத்தம் செய்யவேண்டிய
அவசியமில்லை!



தலையிலும் கூந்தலிலும்
உண்டாகும் அருவருப்பான
பொருட்களைப் போக்குகிறது!



கூந்தலை மிருதுவாகவும் கையில்
அடங்கும்படியும் செய்கிறது—
இயற்கையான சோபையுடன்
பளபளப்பாகவும் இருக்கச்
செய்கிறது—உலர்த்து
போவதில்லை,அரிப்பதுமில்லை
உபயோகிக்க ஆரம்பித்த
முதல் நாளிலிருந்தே
ஹேலோ உங்கள் கூந்தலைப்
பளபளப்பாக
இருக்கச் செய்கிறது!







**அமெரிக்காவில்,**
**ஏராளமாக**
**விற்பனை**
**யாகும்**
**ஷாம்பு**

மறைந்துகிடக்கும் உங்கள் கூந்தலின் அழகை ஹேலோ பிரகாசிக்கச் செய்கிறது.

---

பண்டிட் டி. கோபாலாச்சார்லுவின்

# ஸ்ரீஹேம்ருதம்

ஆரோக்யத்துக்கும் பலத்துக்கும்

ஆயுர்வேதாஸ்ரமம் (பிரைவேட்) லிட்.
மதராஸ்



# கோலினஸ்

## சூப்பர் ஒயிட் டெண்டல் க்ரீம்

## இந்தியாவின்

# புன்னகை ராஜாவின்

## பற்பசை!

ஆம், அவர் தைரியமாகச் சிரிக்க முடியும். அவருடைய பற்கள் பளபளக்கும் வெண்மையானவை. அவர் மூச்சில் மணம் கமழ்கின்றது. அவர் இந்தியாவின் புன்னகை ராஜா—பல்லாயிரக்கணக்கான போட்டியிட்டவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர். அவருடைய புன்சிரிப்பின் அழகைக் கெடுக்கக்கூடிய சொத்தைப் பற்கள் அவரிடமில்லை, ஏனென்றால், மூன்று சுத்திகரணிகளையுடைய, சிறந்து நுரைத்து, பல்லிடுக்குகளிலிருந்துகொண்டு பற்சிதைவை ஏற்படுத்துவதற்குக் காரணமான கிருமிகளை விளைவிக்கும் ஆகாரத் துணுக்குகளை அறவே அகற்றக்கூடிய கோலினஸ் சூப்பர் ஒயிட் பற்பசையை அவர் உபயோகிக்கிறார்.

கோலினஸ் சூப்பர் ஒயிட் டெண்டல் க்ரீமை உபயோகியுங்கள் — இந்தியாவின் புன்னகை ராஜாவின் பற்பசை இதுவே! பற்சிதைவை அறவே ஒழிக்கவும், உங்கள் மூச்சில் நறுமணங்கமழவும், உங்களுக்கு வெண்மையான, பளபளக்கும் பற்களை அளிக்கும் பற்பசை இதுதான்.

உங்கள் பல் டாக்டர் கூறுவார்— வேறெந்தப் பற்பசையும் உங்களுக்கு இதைவிட அதிகத் திருப்தியை அளிக்காது.



# திருக்குறுங்குடி அழகியநம்பி

**தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்**

மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்களில் வாமனாவதாரம் ஒன்று. வாமனன் என்றால் குறுகிய வடிவினன் என்பது நமக்குத் தெரியும். இந்த வாமனனே பின்னர் திரிவிக்கிரமனாக வளர்ந்தான் என்பதையும் அறிவோம். இந்த வாமனாவதாரத்தைக் கவிச் சக்கரவர்த்தி கம்பன் அழகாகப் பாடுகிறான். நமக்குத் தெரிந்த கதைதானே. மண்ணுலகில் மகாபலி என்ற பெயரோடு மகாசக்தி வாய்ந்த அரசன் ஒருவன் ஆள்கிறான். நல்ல குணசீலன். ஆட்சியையும் திறம்பட நடத்துகிறான். அவனது சீலம் காரணமாகவே வானுலகம் பூவுலகம் எல்லாம் அவன் ஆணைக்குள் வந்து விடுகிறது. இதன் பின் அவன் ஓர் அரிய யாகத்தையும் செய்ய முற்படுகிறான். இந்த யாகம் நிறைவேறினால் மகாபலிக்கு இன்னும் எவ்வளவோ சக்தி வந்து விடுமே என்று தேவர்கள் அஞ்சுகிறார்கள். திருமாலிடம் சென்று முறையிடுகிறார்கள். மகாபலிக்கு முக்தியை அருள வேண்டும் என்று அவருக்குமே ஆசை. அதற்காக அவர் காசிப முனிவருக்கு அவர் மனைவி அதிதி வயிற்றில் பிள்ளையாக அவதரிக்கிறார். பிறக்கும் போதே குள்ளமான வடிவத்தோடு பிறக்கிறார். அந்தக் குள்ள வடிவத்துக்குள்ளே வரம்பில்லாத பூரண தத்துவங்கள் எல்லாமே அடங்கிக் கிடக்கின்றன. எது போல என்றால் கம்பன் கேள்வி கேட்டுக் கொண்டு, அதற்கு விடை சொல்கிறான். கோடி கோடி வருஷங்களாக ஆலமரத்தில் உள்ள அற்புத தத்துவங்கள் எல்லாம் பரம்பரையை ஒட்டி, விடாமல் வந்திருக்கின்றன. இன்னும் எத்தனையோ கோடி வருஷங்கள் தலைமுறை தலைமுறையாக நிற்கவும் போகின்றன. அற்புதத்தில் அற்புதம் என்னவென்றால் எவ்வளவோ விரிந்தும் ஆதி அந்தம் என்றெல்லாம் இல்லாத இந்த ஆலின் தத்துவம் எல்லாம், தெள்ளணீர்க் கயத்துச் சிறு மீன் சினையினும் சிறியதான ஒரு வித்துக்குள்ளே அடங்கிக் கிடப்பதுதான். குறள் வடிவமும் அப்படித்தானே. பேரண்டத்திலுள்ள தத்துவங்களை யெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டிருந்தது அந்த வாமன வடிவம். இத்தனையையும் சொல்கிறான் கம்பன்.

காலம் தனித்து உணர்
 காசிபனுக்கும்
வால் அதிதிக்கும் ஓர்
 மாமகவாகி
நீல நிறத்து
 நெடுந்தகை வந்துஓர்
ஆல்அமர் வித்தின்
 அருங்குறள் ஆனான்.

என்பது பாட்டு. இந்த வாமனன்—குறளன் தோன்றிய தலம்தான் குறுங்குடி. குறுகிய வடிவினனான வாமனன் பிறந்த குடியே குறுங்குடி என்றாகிறது. வாமன க்ஷேத்திரம் என்று பெயர் பெறுகிறது. அக்குறுங்குடியிலே அழகிய நம்பி வந்து கோயில் கொள்கிறான். அந்தத் திருக்குறுங்குடி நம்பி கோயிலுக்கே செல்கிறோம் நாம் இன்று.

திருக்குறுங்குடி திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஒரு சிறிய ஊர். திருநெல்வேலி ஜங்ஷனுக்குத் தெற்கே பத்தொன்பது மைல் சென்றால் நாங்குநேரியைச் சேருவோம். நாங்குநேரி ஊருக்குள் போகாமல் ஊருக்கு வடபுறத்திலே மேற்கு நோக்கிச் செல்லும் பாதையில் திரும்பினால் கொஞ்ச தூரம் சென்றதும் இரண்டு பாதைகள் பிரியும். வடமேற்கு நோக்கிச் செல்வது களக்காட்டில் கொண்டு சேர்க்கும். தென் மேற்கு நோக்கிச் செல்லும் பாதையே குறுங்குடிக்குச் செல்லும். நாங்குநேரி வரை நல்ல ரோடுதான். அதன் பின் அவ்வளவு நல்ல ரோடு இருக்காது. திருநெல்வேலி ஜங்ஷனிலிருந்து பணகுடி செல்லும் பஸ் ஒன்றைக் குறுங்குடி வழியே திருப்பி விடுகிறார்கள். ஆனதால் பஸ்ஸிலேயே செல்லலாம். வழியில் உள்ள ஏர்வாடி, நம்பித் தலைவன் பட்டயம் என்ற ஊர்களையும் இடைவரும் நம்பியாற்றையும் கடந்தே குறுங்குடி சென்று சேர வேணும். தென்புறமாகக் கோயிலைச் சுற்றிக் கொண்டு வந்தால் நீண்டு உயர்ந்த மதில் தெரியும். மதிலை ஒட்டி நல்ல தென்னை வைத்து வளர்த்திருக்கிறார்கள். மலையை அடுத்த பிரதேசமானதால் நல்ல குளிர் சோலைகளும் இவ்வூரில் நிரம்பியிருக்கும். காரில் போகிறவர்கள் வடக்கு மதிலில் உள்ள ஒரு பாதை வழியாக நுழைந்து கோபுர வாயிலுக்கே சென்று விடலாம். மற்றவர்கள் கிழமாட வீதி வந்து கோயிலுள் நுழையலாம். பிரதான வாசலில் கோபுரம் இல்லை. அந்த வாசல் வழி நுழைந்து மட்டை அடி மண்டபத்தையும் கடந்து வந்தால் ரதி மண்டபம் வந்து சேர்வோம். அந்த மண்டபமே திருக்குறுங்குடி ஜீயர் மடத்தின் முகப்பு மண்டபமாக இருக்கிறது. அங்கு சிற்ப வடிவங்கள் உள்ளன. ரதி, அர்ச்சுனன், கர்ணன், தடாதகை முதலிய வடிவங்கள் எல்லாம் நல்ல காத்திரமானவை. இவைகள் எல்லாம் நமக்குக் கிருஷ்ணாபுரத்துச் சிற்பங்களை நினைவுபடுத்தும். இந்த மண்டபத்தை அடுத்த வீதியையும் கடந்தால் கோயிலின் பிரதான கோபுர வாயிலுக்கு வருவோம். கற்சுவர்களில் எல்லாம் எண்ணிறந்த சிற்ப வடிவங்கள். ஆதலால் இந்தக் கோபுரத்தையே சிற்ப கோபுரம் என்பார்கள். இந்தக் கோபுர வாயிலைக் கடந்தால் துவஜஸ்தம்ப மண்டபம் வந்து சேருவோம். இந்த மண்டபத்தின் வடபுறத்திலே தான் மணவாள மாமுனிகள் சந்நிதி இருக்கிறது. அந்தச் சந்நிதிக்கு முன் அழகான மண்டபம் ஒன்று உண்டு. அங்குள்ள தூண்களில் எல்லாம் அழகு அழகான சிற்ப வடிவங்கள். நரசிம்மனது கோலம் இரண்டு. வழக்கமாக நாயக்கர் சிற்பத்தில் காணும் குறவன் குறத்தி வேறே. அநுமனது வடிவம் எல்லாம் இருக்கும். நல்ல காத்திரமான வடிவங்கள்.



நரசிம்மர் — கற்சிற்பம்

நுணுக்க வேலைப்பாடுகள் நிரம்பியவை. ஆனால் இந்த மண்டபத்தில் வௌவால்களும் தூசிகளும் ஆக்கிரமித்துக் கொண்டு கால் வைத்து நடக்க முடியாதபடி அசுத்தம் செய்து வைத்திருக்கும் என்பதையும் தெரிவித்து விடுகிறேன்.

துவஜஸ்தம்ப மண்டபத்தில் ஓர் அதிசயம். அங்குள்ள துவஜஸ்தம்பம், சந்நிதிக்கு நேரே இராது. கொஞ்சம் வடபக்கமாக விலகி இருக்கும். இது என்ன திருப்புன்கூரில் நந்தி விலகிய மாதிரி இருக்கிறதே என்று கேட்கத் தோன்றும் நமக்கு. உடனே அர்ச்சகர் சொல்வார், 'ஆம். இங்கும் நம்பாடுவான் என்னும் பக்தனுக்காகத்தான் ஸ்தம்பம் விலகியிருக்கிறது' என்று. அது யார் நம்பாடுவார் என்று தெரிந்து கொண்டே மேலே நடக்கலாம். குறுங்குடியை அடுத்த மகேந்திர கிரியிலே பாணர்கள் வாழ்கின்றார்கள். இவர்கள் யாழ் வாசிப்பதில் வல்லவர்கள். இவர்களில் ஒருவன் குறுங்குடி நம்பியைக் காண வருகிறான், கார்த்திகை மாதம் சுக்லபக்ஷம் ஏகாதசியன்று. வழியிலே பசியோடிருந்த பிரமராக்ஷஸன் ஒருவன் இவனைப் பிடித்துக் கொள்கிறான். நம்பியைத் தரிசித்த பின் வந்து தான் அவனுக்கு இரையாவதாகச் சொல்லி விட்டு விடைபெற்றுக் கோயில் வாயிலில் வருகின்றான். இங்கு வந்து கோயில் வாயிலில் நின்று நம்பியைத் தரிசிக்க முயல்கிற போது கோயிலில் கொடி மரம் மறைக்கிறது. பக்தி சிரத்தையோடு பாடுகிறான். நம்பியும் பாணனுக்கு மறைக்காமல் இருக்கக் கொடி மரத்தை நகரச் சொல்கிறார். அதன் படியே அதுவும் நகர்ந்து, நம்பியைப் பாணன் தரிசிக்க வகை செய்கிறது. இதனால் மெய் புளகித்த பாணனும்,

எங்ஙனமோ அன்னைமீர்காள்
என்னை முனிவதுநீர்?
நங்கள் கோலத்திருக்குறுங்குடி
நம்பியை நான்கண்டபின்
சங்கினோடும் நேமியோடும்
தாமரைக் கண்களோடும்
செங்கனி வாயொன்றினோடும்
செல்கின்றதென் நெஞ்சமே.

என்ற திருவாய்மொழிப்பாசுரத்தைக் கைசிகப் பண்ணில் அமைத்துப் பாடுகிறான். பாட்டை அவன் பாடப் பாட நம்பியும் மகிழ்ந்து அவனை 'நம்பாடுவான்' என்றே அழைக்கிறான். தன்னைப் பாடிய நம்பியை 'தம்மைப் பாடியவன்' என்று நம்பி அழைத்ததில் வியப்பில்லைதானே! நம்பாடுவான் என்ற பாணன் பாட்டை விரைவாகப் பாடுவதைக் கேட்ட நம்பி, காரணம் வினவ; தான் பிரமராக்ஷஸனுக்குக் கொடுத்து வந்த வாக்கைச் சொல்கிறான். நம்பியின் அருளால் பிரமராக்ஷஸனது பசி நீங்கி விடுகிறது. அவன் தன்னிடம் வந்த நம்பாடுவானைப் புசிக்க மறுக்கிறான். இடை வந்த நம்பி சமாதானம் செய்து, ஒரு பாட்டின் கான பலனைத் தத்தம் செய்யுமாறு நம்பாடுவானிடம் சொல்கிறார். இதனாலேயே இத்தலத்தில் கைசிக ஏகாதசி விசேஷச் சிறப்பாக நடக்கிறது என்பர். கொடி மரம் நகன்றதற்கும், கைசிக ஏகாதசி ஏற்பட்டதற்கும் காரணம் தெரிந்து கொண்டு நேரே நம்பியைத் தரிசிக்கச் செல்லலாம். குலசேகரன் மண்டபத்துக்கு முந்திய பத்தியில் ஒரு பெரிய மணி தொங்குகிறது. அந்த மணியிலே ஒரு பாடல் பொறித்திருக்கிறது.

செய்துங்க நாட்டுச் சிறைவாய்மன்
ஆதித்தன் தென்வஞ்சியான்
வியலொன்ற சில கல்யாணன்
கன்னி விசாகம் வந்தோன்
நயமொன்று கொல்லம் அறுநூற்று
நாற்பத்து நாலில் அன்பால்
அயனும் பணிய மணியளித்தான்
நம்பிக்கு அன்புகொண்டே.

என்பது பாட்டு. இதிலிருந்து திருவிதாங்கோட்டு மன்னன் ஒருவன் நம்பியின் பக்தனாய் விளங்கி இம்மணியைக் கோயிலுக்கு அளித்திருக்கிறான் என்பதைத் தெரிந்து கொள்கிறோம். குலசேகரன் மண்டபத்தில் நின்றே மூலவராய் நின்ற அழகிய நம்பியைத் தரிசிக்கலாம். நல்ல அழகான வடிவம். அவரது மேனி உள்ளே சிலையும் வெளியே சுதையுமாக இருக்கிற கோலம். அதனால் தைலக் காப்புத்தான் நடக்கிறது. உபயநாச்சியார், மார்க்கண்டேயர், பிருகு எல்லாம் உடன் எழுந்தருளியிருக்கிறார்கள். கருவறையை அடுத்த கட்டில்தான் வைஷ்ணவ நம்பி என்ற உத்சவர் இருக்கிறார். இவர் பக்கலில் உபநாச்சியார், நீளாதேவி, குறுங்குடிவல்லித் தாயார் எல்லாம் இருக்கிறார்கள். இவரை வைஷ்ணவ நம்பி என்பானேன் என்றால் அதுதான் உடையவர் இட்ட தாஸ்ய நாமம் என்பார்கள். ஸ்ரீ பாஷ்யகாரராம் ராமானுஜர் இத்தலத்துக்கு வந்தபோது இந்த நம்பி ஒரு சிஷ்யன் போல் வந்து அவரிடம் பஞ்ச சம்ஸ்காரம் செய்து கொண்டு

உபதேசம் பெற்றார் என்பது வரலாறு. அந்த ராமானுஜர் இட்ட பெயரே வைஷ்ணவ நம்பி என்பதாகும். அழகிய நம்பியையும் வைஷ்ணவ நம்பியையும் தொழுது வெளி வந்து பிராகாரத்தை ஒரு சுற்றுச் சுற்றினால் தென் பக்கத்தில் லட்சுமி நரசிம்மனும், ஞானப் பிரானான லட்சுமி வராகனும் தனித் தனிக் கோயிலில் இருப்பர். குறுங்குடி வல்லித் தாயாருக்கும் ஒரு தனிக் கோயில் உண்டு. மேலப் பிராகாரத்தில் தசாவதாரப் பெருமான், ஸ்ரீனிவாசன், ஆண்டாள் எல்லாம் காட்சி கொடுப்பர். இவர்களையெல்லாம் தரிசித்துக் கொண்டு வடக்குப் பிராகாரத்தில் நடந்து தெற்கே திரும்பினால் அங்கு ஒரு கோயில். அக்கோயிலில் சிவபிரான் லிங்க உருவில் இருப்பார். இவரையே மகேந்திர கிரிநாதர் என்றும் பக்கம் நின்ற பிரான் என்றும் அழைக்கின்றனர்.

இக்கோயிலுள் நடராஜர், சிவகாமி, சோமாஸ்கந்தர், சுப்பிரமணியர், பிள்ளையார் எல்லாரும் செப்புச் சிலை வடிவில் குடும்பத்தோடு எழுந்தருளியிருக்கின்றனர். இவருக்குப் பக்கத்திலேயே கால பைரவருக்கும் தனிச் சந்நிதியிருக்கிறது. இது வரை நமது க்ஷேத்திராடனத்தில், பெரிய பெரிய சிவன் கோயில்களில் விஷ்ணு இடம் பிடித்திருப்பதைத்தான் கண்டிருக்கிறோம். இத்தலம் ஒன்றிலேயே பெரியதொரு பெருமான் கோயிலில் சிவனும் பக்கம் நிற்கும் பிரானாக இருக்கிறார். சைவ வைஷ்ணவ பேதங்கள் எல்லாவற்றையும் அகற்ற நம் முன்னோர்கள் எப்படியெல்லாம் முயன்றிருக்கிறார்கள் என்பதை நாம் அறியும் போது மகிழ்ச்சி ஏற்படுகிறதல்லவா? இந்தப் பக்கம் நிற்பவர் பக்கத்திலேயே வீற்றிருந்த நம்பியும் பள்ளி கொண்ட நம்பியும் தனித்தனிக் கோயிலில் இருக்கிறார்கள். இவர்கள் பக்கத்தில் பூமியில் அழுத்தப் பெற்ற மகாபலியும் இருக்கிறான், தலையைக் கொஞ்சம் பூமிக்கு வெளியில் நீட்டிக் கொண்டு. கோயிலுள் நின்ற நம்பி என்னும் அழகிய நம்பி, வைஷ்ணவ நம்பி, வீற்றிருந்த நம்பி, பள்ளி கொண்ட நம்பியை எல்லாம் பார்த்து விட்டோம். இன்னும் கம்பீரமான நம்பி ஒருவன் உண்டு. அவன் மலைமீது ஏறி நிற்கிறான். அவனை மலை மேல் நம்பி என்பர். அவன் கோயில் கொண்டுள்ள இடம் இக்கோயிலில் இருந்து ஐந்து மைல் தொலைவில் இருக்கிறது. இரண்டு மூன்று மைல் வரை தான் வண்டிகள் செல்லக் கூடும். அதன்பின் இரண்டு மைல் நடந்தே செல்ல வேணும். அங்கே ஏழு எட்டடி உயரத்தில் மலைமேல் நம்பி சிலை உருவில் கம்பீரமான கோலத்தோடு நிற்பான். வசதியும் காலில் சக்தியும் உள்ளவர்கள் இவனையும் தரிசித்துத் திரும்பலாம்.

இவ்வளவு சொல்லி விட்டீரே, அந்த வாமனனாய் குறுங்குடிக்கே பெயரளித்த குறுகிய வடிவினனது வடிவைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே என்று நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது. அந்த வாமனர், கோயிலுக்குத் தெற்கே நாலு பர்லாங்கு தொலைவில் உள்ள சக்கிரத்திலுள்ள சந்நிதியில் இருக்கிறார். ஏன் அவருக்குப் பிரதான கோயிலில் இடம் கொடுக்காமல் ஒதுக்கி



கோயில் கோபுரம்

வைத்திருக்கிறார்களோ, தெரியவில்லை. நாம் அவரையும் ஒதுக்காமல் அங்கும் சென்று வணங்கியே வீடு திரும்பலாம்.

குறுங்குடி நம்பியைப் பெரியாழ்வார், திருமழிசை ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார் நால்வரும் மங்களாசாஸனம் செய்திருக்கிறார்கள். இந்நம்பியின் அனுக்கிரகத்தாலேயே நம்மாழ்வார் திரு அவதாரம் செய்தனர் என்பது வரலாறு. திருவாலித் திருநகரியில் பிறந்து பல தலங்கள் சென்று பரந்தாமனைப் பாடிப் பரவிய திருமங்கை மன்னன் இங்கு வந்துதான் திருநாட்டுக்கு எழுந்தருளியிருக்கிறார். அவரது கோயில் வடகிழக்கே அரை மைல் தூரத்தில் இருக்கிறது.

கோயில் அமைப்பு, மண்டபம், சிற்பங்களை எல்லாம் பார்த்தால் விஜய நகர நாயக்க மன்னர்கள் காலத்தில் இக்கோயில் விரிவடைந்திருக்க வேணும் என்று தெரிகிறது. திருக்குறுங்குடி அழகிய நம்பி உலாவில் இருந்து, உதயமார்த்தாண்டர் என்ற அரசர் தம் பெயரால் சமர்ப்பித்த பத்தனின் மோக ராமதேவர் என்பவர் தம் பெயரால் அமைத்த தனிப் பீடத்திலே நம்பி எழுந்தருளியிருக்கிறார் என்று அறிகிறோம். உதயமார்த்தாண்டர் சேர மன்னனாக இருத்தல் வேண்டும். ஒரு தாமிர சாஸனம் மூலம் விஜயநகரத்து அரசர்களுள் வேங்கட தேவ மகாராஜர் என்பவரும் இக்கோயிலில் அரிய திருப்பணிகள் செய்திருக்கிறார் என்று தெரிகிறது. இவையெல்லாம் ஆராய்ச்சியாளர்களுக்கு விட்டு விடுவோம். நாம், நம்பாடுவார் பாடிய நம்பியைத் தரிசித்து அதனால் அடையும் இன்பப் பேறுகளைப் பெற்ற திருப்தியோடேயே திரும்பி விடுவோம்.

# அவன் பிழைத்த பிழைப்பு

என். மகாலிங்கம்

அவனுக்கு அவசியமாக இப்போது ஒரு கவளம் சோறு தேவை. அடுத்தபடி அவசியமாக மூன்று கவளங்கள் சோறு தேவை. இது அவனுக்கும், வீட்டில்-பிளாட்பாரத்தில்—இருக்கும் அவன் மனைவிக்கும் அவளிடம் அவன் தோற்றுவித்த இரண்டு உயிர்களுக்குமாக அவன் சேர்த்துப் போட்ட கணக்கு. சாலை சரிந்து வந்து பிளாட்பாரத்தோடு சேரும் இடத்தில் நீண்டு கிடக்கும் சிறு கால்வாயில் தேங்கிக் கிடக்கும் கழிவுநீருக்கு மேல் வரை வந்து நீட்டிக் கொண்டிருந்த அவன் கால்களின் மீது கொஞ்சம் கொஞ்சமாக ஆறிக் கொண்டிருந்த இரண்டு மணி வெய்யில் 'சுள்' ளென்று அடித்துக் கொண்டிருந்தது. நீரிலும் அவன் காலிலுமாக மாறி மாறி உட்காரும் கொசுக்களுக்காகக் கூட அவன் தன் கால்களை இழுத்துக் கொள்ளவில்லை. இந்த வெய்யில் அவனை என்ன செய்துவிட முடியும்?

பசி இருக்குமளவுக்கு அவனுக்குப் பொறுமையும் இருந்தது. முதலில் கொஞ்ச நேரம் கூப்பிட்டுக் கூப்பிட்டுப் பார்த்த வயிற்றுக்கு அவன் பதிலே சொல்ல வில்லை. நடக்கிறது நடக்கட்டும் என்று படுத்து விட்டான். வயிறும் அலுத்துப் போய்த் தன் ஓலத்தை அடக்கிக் கொண்டு விட்டது. இருந்தாலும் அடிபட்ட பெண்சாதியைப் போல் அதன் உள் முணுமுணுப்பு இன்னும் அடங்கவில்லை.

அவன் மனைவியும் முழுங்கால் கட்டி முகவாயை இடிக்கப் பக்கத்திலேயேதான் படுத்துக் கிடந்தாள். தலைமாட்டில் ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கப்பட்டிருந்த கரியேறிய பானைகளிலிருந்து சுலபமாக வேற்றுமைப்படுத்தி அறிய முடியாத இரண்டு குழந்தைகள்.... மூலைக்கொன்றாகச் சுருண்டு கிடந்தன. அந்தப் பானை மாதிரியே இரண்டுக்கும் 'குறு' வயிறு. தோலை உரிக்காமலேயே எலும்பை எண்ணி விடலாம் போல மார்புக் கூடு!

''யம்மாவ்....பசிக்குது...'' இந்தக் கூப்பாட்டுக்குப் பெற்றவள் பதில் சொல்லவே இல்லை. இரண்டாவது முறை கூப்பிட்டதற்கு இன்னொரு குழந்தை விழித்துக் கொண்டு, ''பசிச்சா சோறு துன்னுடா...'' என்று யோசனை கூறியது. பிறகு இரண்டு குழந்தைகளுமாக ஒவ்வொரு பானையாக மெள்ளக் கீழே இறக்கி வைத்து விட்டு, கையை விட்டுப் பார்த்தன. ஒன்றில் கொஞ்சம் உப்பும், இன்னொன்றில் காலையில் தெருக் குழாயிலிருந்து பிடித்து வந்த தண்ணீரையும் தவிர மீதிப் பானைகளெல்லாம் காலி.

''டேய், தண்ணி குடிடா, பசிக்காது!'' என்றது இரண்டாவது குழந்தை. அது கொஞ்ச நேரத்துக்கு முன் பசியைப் போக்கிக் கொள்ளச் செய்த காரியம்தான் அது!

பசியாற வழி தெரியாததின் விளைவாகக் குழந்தைகள் இரண்டும் பெற்றவளின் தலைமாட்டில் வந்து உட்கார்ந்து கொண்டு மாறி மாறியும் சேர்ந்தும் பிலாக்கணம் பாடியும் அவளை எழுப்ப முயன்றன. எழுந்தால் அவைகளைச் சமாதானப்படுத்த வேண்டிய பொறுப்பை ஏற்றுக் கொண்டாக வேண்டுமே என்ற பயத்தினால் அவள் தூங்குவது போல் பாசாங்கு செய்து கொண்டிருந்தாள். குழந்தைகள் விடவில்லை. அவள் பரட்டைத் தலைக்குள் விரலை விட்டு இழுத்தன. குச்சி குச்சியாக இருந்த கைகளினால் விழுந்த அடி அவள் முதுகில் சுரீர் என்று உரைத்தது.

''அட, சே....என்ன புள்ளேங்கடா!..... பொணம் புடுங்கிக் கழுகுங்க மாதிரி.'' அவள் பொறுக்க முடியாமல் எழுந்து உட்கார்ந்து 'அவன்' தோளை உலுக்கினாள்.

''இந்தா, புள்ளைங்க கத்தறது காதுலே உளுவலே?''

''உன்னைத்தானே கூப்பிடுது...'' அவன் திரும்பிப் படுத்துக் கொண்டான்.

அவள் பதில் பேசவில்லை. எழுந்து உட்கார்ந்து கொண்டு, ''என்னை என்ன செய்யச் சொல்றே?'' என்பது போல் அவனைப் பார்த்தாள். அவன் என்ன செய்ய வேண்டும் என்பதை அவள் வாயை விட்டுச் சொல்லவில்லை. அவன் இப்போது செய்ய வேண்டியதற்காகப் பகல் பன்னிரண்டு மணி வரையில் என்னென்ன செய்தான் என்பது அவளுக்குத் தெரியாததல்ல.

பலபல வென்று பொழுது விடிவதற்கு முன்னாலேயே கூடையைத் தூக்கிக் கொண்டு கொத்தவால் சாவடிக்கு ஓடி விட்டான். பெரும்படியாகக் கறிகாய் வாங்குகிறவர்களுக்கு ஒத்தாசை செய்தால் கால் அரை ஏதாவது கிடைக்கும். ஆனால் கொத்தவால் சாவடிக்குள் கூலியாக லைசென்ஸ் பெற ஓர் அணா வேண்டுமே! ஓரணா இருந்தால்தான் உள்ளே நுழையலாம். இல்லாததிலிருந்து உள்ளதை உண்டாக்கும் வித்தை அவனுக்குத் தெரியவில்லை. மார்க்கெட்டுக்கு வெளியே வருபவர்களை, ''கூலி வேணுமா, சார்?'' என்று கேட்டுப் பார்த்தான். பத்து ரூபாய்க் காய்கறியானாலும் கைக்கு நான்கு பைகளாகச் சுமந்து கொண்டு போனார்களே தவிர, ஒருவராவது அவனைக் கூலிக்கு, உதவிக்கு அழைக்க வில்லை. 'ஓரணா சம்பாதிக்க ஒருத்தொருத்தன் என்ன பாடுபட வேண்டியிருக்கு...இதுக்குப் போய்க் கூலி வைக்கிறதாவது?' என்று அவர்கள் எண்ணிக் கொண்டு போனது அவனுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. பன்னிரண்டு மணி வரை வியர்த்தமாகக் கால் வேறு கடுக்கக் கடுக்கக் குறுக்கும் நெடுக்குமாகக் கூட்டத்தில் அலைந்ததுதான் மிச்சம்.

சோர்ந்து போய் வீட்டுக்குத் திரும்பிய அவனைக் கேட்காமல் அவன் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல் சொல்லி விட்டு முடங்கி விட்டான் அவன். இப்போது...



''சந்தேகத்தின் பேரில் இந்த ஆசாமியைக் கைது செய்தேனுங்க. ஊர் பழநியாம்: பேர் மொட்டையனாம்....''

எழுந்திருந்து. ''நான் வெளியே போறேன். புள்ளைங்களைச் சமாதானமாப் பார்த்துக்க'' என்று கூறிவிட்டு வெளியே கிளம்பினான்.

இரண்டு மணி நேரமாக அவன் கால் படாத வீதி இல்லை. இத்தனை நேரமாக ஊதியத்துக்காகத் தொழிலைத் தேடி அலையும் முயற்சியில் வெற்றி பெறாதது. பிழைப்புக்காக எந்த வழியையும் மேற்கொள்ளச் செய்யும் ஒரு மன இயல்பை அவனிடம் தோற்றுவித்திருந்தது. ஆனால் ஒரு வழியும் அவனுக்குப் புலப்படுவதாக இல்லை. வானத்தில் வெயில் இறங்கி இறங்கி அவன் பசியை ஏற்றிக் கொண்டிருந்தது.

'பளிச்'சென்று ஓர் எண்ணம் அவன் மனசைத் தொட்டது. அப்படிச் செய்து பார்த்தால் என்ன? அதற்கான தோற்றம் தன்னிடம் இருக்கிறதா என்று தன்னையே ஒரு முறை பார்த்துக் கொண்டான். பரட்டைத் தலை; தாடி மீசை வளர்ந்த முகம்; புழுதி படிந்த மேனி....வாளையியாகக் குழிந்த வயிறு: பழுப்பேறிய அரை வேட்டி—எல்லாமே இருந்தன. மனத்தைத் தவிர! இல்லை. மனசுகூட இப்போது வந்து விட்டது. பழக்கம்தான் இல்லை. பழகினால் தானாக வந்து விடுகிறது. முன்பே, தனக்கு இந்த யோசனை தோன்றாததற்காகச் சிறிது வருத்தப்பட்டு விட்டு ஒரு வீட்டுப் படியேறினான் அவன்.

''அம்மா, தாயே! சாப்பிட்டு இரண்டு நாளாவுதம்மா...கொஞ்சம் சோறு இருந்தாப் போடுங்கம்மா! புண்ணியம் உண்டு...'' அவனுக்குக் குரல் எழும்பவே தகராறு செய்தது.

வீட்டுக்குள்ளிருந்து அவனுக்குப் பதில் வந்தது. ''ஏம்பா, நீ என்ன அதிசயப் பிச்சைக்காரனாயிருக்கே! நாலு மணிக்கு வந்து பிச்சை கேக்கறே...போயிட்டு வா, போ!''

பசிக்கும்போதுதான் பிச்சைக்காரர்கள் பிச்சை யெடுப்பார்கள் என்று அவன் இது வரையில் நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால் பிச்சையெடுப்பதற்குக் கூட ஒரு குறிப்பிட்ட நேரம் இருக்கிறது என்பது அவனுக்கு இன்றுதான் தெரிய வந்தது.

படியை விட்டுக் கீழே இறங்கி நான்கைந்து வீடுகள் தள்ளி இன்னொரு வீட்டில் ஏறினான். கூப்பிட்டு இரந்தான். ஒரு தடவையிலேயே அவனுக்குக் குரல் பழக்கப்பட்டுப் போயிருந்தது. தான் ஒரு பரம்பரைப் பிச்சைக்காரனோ என்று சந்தேகிக்கும் அளவுக்குக் குரல் அவ்வளவு இயற்கையாக இருந்தது. அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது.

ஆனால் பிச்சைதான் நயாபைசாகூடக் கிடைக்க வில்லை.

அவன் உடம்பெல்லாம் கூனிக் குறுகத் திரும்பினான். பிச்சையெடுப்பதில்கூட வெற்றி பெறுவது இவ்வளவு கஷ்டமாக இருக்கும் என்று அவன் நினைக்கவே இல்லை. இந்தச் சோதனையைச் செய்து பார்க்காமலேயே இருந்திருக்கலாம். இப்போது இஷ்டமில்லாததை, பழக்கமில்லாததைச் செய்து விட்ட அவமானம்தான் மிச்சம்.

வெயில் முழுவதும் இறங்கி விட்டது. இனியும் அதிகரிக்க முடியாத அளவுக்கு அவனுக்குப் பசியும் ஏறி விட்டது.

கால் வலி பொறுக்க மாட்டாமல் நடைபாதையின் ஓரமாக உட்கார்ந்தான் அவன். வீட்டு நினைவு வந்ததும் உடனேயே 'சட்'டென்று எழுந்து விட்டான். எதிரே லட்சம் லட்சமாகப் பசியற்றுப் போகும் ஜனக் கூட்டத்திலே ஒருவர் செய்த பாக்கியம்கூட 'அவனும்' குழந்தைகளும் செய்ய வில்லையா? அவன் கண்களில் படும் ஒவ்வொருவரும் சிரித்துக் கொண்டோ, சிரிக்காவிட்டால் சோர்வற்ற முகத்துடனேயோதான் நடந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் யாரையாவது ஒருவரை வருத்தப்படச் செய்வதின் மூலம் வீட்டில் அவளையும் குழந்தைகளையும் சந்தோஷப்படுத்தினால் என்ன? நான்கு உயிர்கள் பட்டினி கிடப்பதைப் பார்த்ததும் உள்ளத்தில் சலனமின்றிப் போகும் உலகத்தை வேறு எப்படித் தண்டிப்பது? அவன் துணிந்து விட்டான்!

அடுத்த ஐந்து நிமிஷங்களில் அவன் நினைவு செயலாகி விட்டது. ஜன நடமாட்டம் அதிகமில்லாத சந்து திருப்பத்துக்குப் போய் மடியிலிருந்து பர்ஸை எடுத்துப் பார்த்தான். எத்தனை சுலபமாக முடிந்து விட்டது காரியம்? தனக்கு உதவி அவசியம் என்பதினாலேயே இந்தக் காரியத்தைத் தெய்வம் சுலபமாக்கி விட்டதாகத் தோன்றியது அவனுக்கு. பிரஸ் பித்தானை எடுத்து விட்டு இடது கையால் வலது கையில் கவிழ்த்துக் கொண்டான்.

பர்ஸிலிருந்து ஒரு பைசாகூட விழவில்லை. ஓர் அறையில் கத்தையாகத் திணிக்கப்பட்டிருந்த காகிதங்களை எடுத்துப் பார்த்தான். ஒன்றுவது ரூபாய் நோட்டு இல்லை. எல்லாமே என்னென்னவோ குறிப்புக் காகிதங்கள். இந்த சனமான காரியத்தைச் செய்ததற்குத் தண்டனையாகத் தோன்றியது அவனுக்கு. சே, அற்பமான செயல்! மீண்டும் முயற்சி செய்து பார்க்க அவனுக்குத் துணிவு இல்லை. இஷ்டமும் இல்லை. கையிலிருந்த பர்ஸை நடுத் தெருவில் வீசியெறிந்து விட்டு அவன் மேலே நடந்தான்.

பொன்னிருந்த இடத்தில் பூனைப் போல் தெருவெல்லாம் விளக்குப் போட்டு விட்டார்கள். அவன் வீட்டை விட்டு வந்து நான்கு

மணி நேரத்துக்கு மேல் இருக்கும். இப்போது மணி ஆறரையோ அல்லது ஏழோ ஆகிறது. அவன் ஒரே குறிக்கோளோடு வழி தெரியாமல் நடந்து கொண்டிருந்தான். மனசு மட்டும் வெறுங் கையோடு வீட்டுக்குப் போவதில்லை என்று உறுதிப்பட்டிருந்தது. அங்கே போய், 'பெயர் நீங்காத பிணமாக' 'அவை' துவண்டு கிடப்பதை அவனால் பார்க்க முடியாது. அவைகளைப் பற்றிய நினைவு தரும் துன்பத்தையும் அவனால் விலக்க முடியவில்லை. தெய்வத்தை நம்பி அவன் மேலே நடந்தான்

கோவில் வாசலில் ஏகக் கூட்டம். இருக் குளத்தைச் சுற்றிலும் கைப்பிடிச் சுவரைப் பற்றியபடி ஜனங்கள் மொய்த்துக் கொண்டிருந்தார்கள். படிகளிலும் பலர்....அவனும் ஆவலால் உந்தப் பெற்றவனாக இடுக்குத் தெரிந்த இடத்தில் தலையை நீட்டி, ''என்னங்க?'' என்றான். பக்கத்தில் யாரோ யாருக்கோ அறிவித்துக் கொண்டிருந்த விஷயத்தில் அவன் கேள்விக்கான பதிலும் இருந்தது. ''அதோ, அந்தத் தென்னை மரத்துக்குப் பக்கத்திலே தெரியுதே, மஞ்ச வீடு, அந்த வீட்டுப் புள்ளையைக் காலையிலேயிருந்து காணோமாம். அது இன்னொரு பையன்கூட மத்தியானமா படித்துறையிலே விளையாடிக்கிட்டிருந்ததை யாரோ பார்த்தாங்களாம்..... பையனை இன்னும் காணலே. ஒரு சமயம் தப்பித் தவறிக் குளத்திலே விழுந்திருப்பானோன்னு சந்தேகப்படறாங்க. கூட விளையாடிக்கிட்டிருந்த பையன் யாருன்னு தெரியலே.... இறங்கிப் பார்க்கச் சொல்லலாம்னு, ஆளு கிடைக்கலே....!''

அவன் தலையைத் திருப்பி ஜனக் கூட்டத்தில் அடர்த்தியாக இருந்த ஓர் இடத்தைப் பார்த்தான். அங்கேதான் காணாத பையனுடைய உறவினர்கள் இருப்பார்கள் என்று அவன் சம்சயித்தது அருகே நெருங்கியபோது சரியாகி விட்டது. ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி; அவள்தான் பையனைப் பெற்றவளாக இருக்க வேண்டும். வேதனையும் வேண்டலுமாகப் படிக்கட்டில் உட்கார்ந்து பிரலாபித்துக் கொண்டிருந்தாள். அவள் கணவராகத் தென்பட்டவர் அவளைச் சமாதானப் படுத்துவது இயலாத காரியம் என்று உணர்ந்தவர் போல் குளத்தில் இறங்கிப் பார்க்க ஆள் கிடைப்பாரா என்று பக்கத்தில் யாரிடமோ விசாரித்துக் கொண்டிருந்தார். இன்னும் நான்கைந்து உறவினர்கள்....பையனைப் பற்றிய குணதிசயங்களையெல்லாம் அவர்கள் கூறுவதைச் சுற்றிலும் பலர் நின்று கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

குளத்தைப் பார்த்தான் அவன். முந்திய இரண்டு நாட்களும் பெய்த மழையில் நான்கைந்து படிகள் ஏறியிருந்தது நீர். மற்றவர்கள் எதிர்பார்ப்பதைத் தன்னுள் கொண்டிருக்கிறதா இல்லையா என்று தீர்மானிக்க முடியாதபடி ஞானிபோல், முட்டாள் போல் நீர் மட்டம் அமைதியாக இருந்தது. தனக்கு மட்டும் பிரத்தியேகமான சக்தி படைத்த கண்கள் கிடைத்து விட்டன போல், குளத்து நீரை ஊடுருவிக் கூர்ந்து பார்த்தான் அவன். அவனுக்கும் மற்றவர்களைப் போல் உயிர்ச் சத்துப் போன உடல் ஒன்று நீருக்கு அடியிலே கிடக்கிறதா இல்லையா என்று தெரியவில்லை










கண்ணே, நீ கொடுத்த
ஹல்வா வாயில்
ஒட்டிக்கொண்டது!

# மனக்கொதிப்பும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன



"நம் வயிறும், மூளையும் நரம்புகளின் மூலம் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு முறையும் நாம் மனக் கொதிப்பினாலோ அல்லது கவலையினாலோ பாதிக்கப்படும்பொழுது இந்த நரம்புகள் ஜீரணம் செய்வதை தற்காலிகமாக தடுப்பதுடன் ஆட்ரினலின் என்ற சக்திவாய்ந்த அமிலத்தை வெளிப்படுத்தி ரத்தத்துடன் கலக்கிறது. இந்த அமிலம் ஓடியாடி வேலை செய்வோருக்கு மனக்கொதிப்பை எதிர்த்துப் போராட உதவுகிறது. ஆனால் மற்றவர்கள் விஷயத்தில் இது தீமையைப் பயக்குவதுடன் அவர்கள் ஜீரண சக்தியையும் குறைக்கிறது. அதனால்தான் வியாபாரத் துறையிலுள்ளவர்களில் 10 பேர்களில் 6 பேர் அஜீரணத்திற்குள்ளாகி, அதன் விளைவாக சாப்பிட்டபின் வயிற்று வலியினால் கஷ்டப்படுகிறார்கள்.






ஹ்யூலட்ஸ் மிக்சர் வயிற்றுவலியை விரைவாகவும் அடியோடும் நிவர்த்திக்கிறது. எரிச்சலை உண்டாக்கும் அமிலத்திலிருந்து இரைப்பையின் சுவற்றைக்காப்பாற்றுவதோடு உணவை நன்றாக கரைத்து ஜீரண சக்தி ஏற்படுவதற்கும் உதவுகிறது. 80 வருஷங்களுக்கு மேலாக உலகத்திலுள்ள எல்லா டாக்டர்களும் சிபாரிசு செய்யும் மருந்து இதுவே. குழந்தைகளின் வயிற்று உபாதைகளையும் தீர்க்கவல்லது ஹ்யூலட்ஸ் மிக்சர்.

வயிற்றுக் கடுப்புக்கு அபினி கலந்த ஹ்யூலட்ஸ் மிக்சரை உபயோகியுங்கள்.

## "ஹ்யூலட்ஸ் மிக்சரை

உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து நான் நன்றாக சாப்பிட முடிகிறது."



ஸி.ஜே. ஹ்யூலட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
66/A, நைனியப்ப நாயக்கன் தெரு, மதறாஸ்-1



திரு ஏ. கே. மணவாளன் அவர்களின் புதல்வி பேபி லக்ஷ்மியின் நடன அரங்கேற்றம் சென்னை செயிண்ட் மேரி மண்டபத்தில் சிறப்பாக நடந்தேறியது.

தான்! ஆனால் மற்றவர்களுக்குத் தெரியாமல் அவனுக்கு மட்டும் அங்கே தெரிந்தது பிழைக்க ஒரு வழி. இருள் படர்ந்திருக்கும் இந்த நேரத்தில் அவன் நிலையில் இருக்கும் உடல் பலவீனத்தைப் பொறுத்த வரைதான் — யாரும் மேற்கொள்ளத் துணியாத செயல்தான்! அவன் நிலையில் இருக்கும் பெண்டாட்டி பிள்ளைகள் மேல் உள்ள பற்றைப் பொறுத்த வரைதான் யாரும் மேற்கொள்ளத் துணியும் செயல்தான்!

''அஞ்சு ரூவா தர்றியா, சாமி! நான் இறங்கிப் பார்க்கறேன்?'' காணாத பையனுடைய தந்தையை அணுகிக் கேட்டபோது மூன்று உயிர்களைக் காக்கும் முயற்சியில் ஓர் உயிர் போய் விட்டால் என்ன செய்வது என்ற கவலை அவனிடம் துளிக்கூட இல்லை. பட்டினிச் சோர்வும், குளத்து ஆழமும் அவன் தீர்மானத்தைப் பாதிக்கவில்லை.

பையனைப் பெற்றவர் நிமிர்ந்து தம் எதிரே நின்ற பலவீனத் தோற்றத்தைப் பார்த்தார். அவருக்கே ஒரு விநாடி தயக்கமாக இருந்தது. ஒரே ஒரு விநாடிதான். பிறகு...ஓர் உடல் இருக்கிறதா என்று பார்க்கச் செய்யும் முயற்சியில் பிறிதொரு உயிர் போய் விடுவதைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. அவர் வேலை அவருக்கு!

''உனக்குப் புண்ணியம் உண்டுப்பா.... கொஞ்சம் இறங்கிப் பாரு. நீ கேட்ட பணம் தரேன்'' என்றார் அவர்.

''புள்ளை இருந்தாலும் இல்லாட்டியும் தரணும்.'' தன் வேண்டுகோளின் விரசத் தன்மையை உணராமலேயே கேட்டான் அவன். அவன் பணமுடை அவனுக்கு!

அவர் மனத்தைச் சுளித்துக் கொண்டு சரி என்பது போல் தலையை ஆட்டினார். அவர் விரும்புவதே அதுதானே! தான் இப்போது அவனை மேற்கொள்ளச் செய்யப் போகும் செயலில் அவனுக்கும், தனக்கும் இதோ கரையில் எதையோ அரைகுறையாக எதிர்பார்த்து நிற்கும் அத்தனை பேருக்கும் தோல்வி கிட்ட வேண்டும், ஏமாற்றம் ஏற்பட வேண்டும் என்பதுதானே அவர் பிரார்த்தனை?

மூலைக் கச்சத்தை இறுக்கிப் பின்னால் சொருகிக்கொண்டு, தண்ணீருக்குள் அழுந்திக்கிடந்த பாசி பிடித்த படிகளில் கைகளை ஊன்றி ஒவ்வொன்றாக இறங்கினான் அவன். கணுக்கால் முழங்காலைத் தாண்டி இடுப்பளவு வந்து விட்டது தண்ணீர். பச்சை பசேல் என்று சாயத்தைக் கரைத்து நிரப்பியதைப் போல் நிறம். இதில் மூழ்கி எழுந்து வந்து விட்டால் அவனுக்கும் அவன் குடும்பத்துக்கும் பசி மூழ்கி ஒழிந்து விடும். தண்ணீருக்குள் மூழ்குவதற்கு முன்னால் அவனுக்கு என்னவோ போல் இருந்தது. திரும்பித் தலையை உயர்த்திப் படிக்கட்டுகளில் உட்கார்ந்திருப்பவர்களை ஒரு முறை பார்த்தான். 'பளிச்'சென்று அவன் கண்களைக் கவர்ந்தது இருந்தும் இல்லாததுமான வேதனையிலேயே மூழ்கி விருந்த பையனின் தாயார்தான்!

அவள் விரும்பும் முடிவு அவன் கையில் இருப்பதாக உணர்ந்தவள் போல் 'மூழ்கி வெறும் கையோடு எழுந்து வர வேண்டும்' என்று பரிதாபம் கலந்த பார்வையால் அவனை வேண்டிக் கொண்டிருந்தாள் அவள். என்ன செய்தாலும் அவனுக்குக் கூலி கிடைத்து விடுவது என்னவோ நிச்சயம். இருந்தாலும் குளத்துக்குள் பையன் இருக்கக் கூடாது என்ற தன் விருப்பத்தை, 'பையன் குளத்துக்குள் விழுந்திருக்க மாட்டான்' என்று நிச்சயமாகத் தெரிந்து விட்டது போல் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் அவன். கால்களுக்குமுன்னே வந்து சேர்ந்திருந்த பாசிப் படலத்தை இரண்டு கைகளும் விலக்கின. சோர்வைப் பற்றி நினைக்காததினால்தானோ என்னவோ சோர்வே தெரியவில்லை அவனுக்கு!

மறுகணம் இதுவரை தன் மீது மொய்த்துக் கொண்டிருந்த நூற்றுக் கணக்கான கண்களுக்கு அவன் இல்லாதவனாகி விட்டான். உயிரோடு அவன் குளத்தின் வயிற்றுக்குள்ளே இருந்தான். ஒன்று...இரண்டு மூன்று.... யாரும் எண்ணவில்லைதான்! இருந்தாலும் கடிகாரத்தின் டிக் டிக் வேகத்தோடு அறுபது எண்ணம் ஆகி யிருக்கும். பிறகு? கரையை விட்டுக் கொஞ்சம் தள்ளி அவன் தலை மட்டும் தனியாக முளைத்தது போல் நீர் மட்டத்துக்கு மேலே தெரிந்தது.

''ஏம்பா, கால்லே ஏதாவது தட்டுதா?'' கரையிலிருந்தபடியே ஈனஸ்வரத்திலே கேட்டார் பிள்ளையின் தகப்பனார்.

''நீங்களா எதுக்காக இதெல்லாம் கேட்கிறீர்கள், அபசகுனம் மாதிரி?'' அழுகைக் கிடையிலும் கணவனைக் கடிந்து கொண்டாள் பெற்றவள்.

அவனுக்கு ஐந்து ரூபாய் கிடைப்பது நிச்சயமாகி விட்டது. மனத்தில் பெண்டாட்டி பிள்ளைகள் பசியாறிவிட்ட திருப்தி. நீர் வழிந்து கொண்டிருந்த முகத்தில் அதன் சாயல் தெரியவில்லை. கொஞ்ச நேரம் கால் தரையில் பாவாமல் முகம் மட்டும் மேலே தெரியக் கைகால்களை ஆட்டி ஓய்வு எடுத்துக்

கொண்டான். பட்டினி கிடப்பது பழக்கம் தான் என்றாலும் இந்த மாதிரி வேலைக்கெல்லாம் அவன் புதுசு. ஒவ்வொரு தடவையும் பட்டினியைப் போக்குவதும் போக்கிக் கொள்வதும் அவனுக்குப் பழக்கம்தான். என்றாலும், இப்போது இந்தத் தொழிலை மேற்கொள்ளாதிருப்பதன் மூலம் மூன்று உயிர்களைக் காப்பாற்ற முடியாத புதிய பழக்கம் அவனிடம் ஏற்பட்டு விட்டால்...? அவன் அதை விரும்பவே இல்லை......! பெண்டாட்டி பிள்ளைகள் மேல் அவனுக்கு அத்தனை ஆசை!

மீண்டும் அவன் தண்ணீருக்குள்ளே போய் விட்டான். அதே அறுபதுக்கு மேற்பட்ட கணங்கள்.....! பிறகு....? நீர் மட்டத்துக்கு மேலே ஒரு தலை தெரிந்தது. இல்லை... இரண்டு தலைகள்...கரையில் நின்று பார்த்துக் கொண்டிருந்தவர்கள் வயிற்றைச் 'சொரேர்' என்றது. நடக்கக் கூடாததுதான்! யாரையோ கண்டிப்பது போல் எல்லோருமே முணுமுணுத்துச் சொன்னார்கள். யாரை?

''ஐயோ! என் கண்ணே! போயிட்டியா!'' தாயார்க்காரி இருந்த இடத்திலிருந்து நான்கைந்து படிகள் உருண்டு கீழேயிருந்த அகன்ற படி ஒன்றில் விழுந்தாள். பெற்றவர் தடதடவென்று ஓடி வந்தார். அவன் ஒரு கையால் கனத்த உடலை இழுத்தபடியே நீந்தி வந்து கரையில் ஏறினான். பையனின் உடலை இரண்டு கைகளிலும் ஏந்தி வந்து அகன்ற படியிலே கிடத்தியபோது இத்தனை நேரமாக அவனிடமிருந்து விடைபெற்றுப் போயிருந்த சோர்வு அவனை மீண்டும் வந்து பற்றிக் கொண்டு விட்டது. ஒரு படியில் தலையை வைத்தபடி கீழே சரிந்து விட்டான். கண்கள் மட்டும் பார்த்துக் கொண்டேயிருந்தன.

பெற்றவள் தலை தலையாக அடித்துக்கொண்டு கதறினாள். ஆண்மையின் மனோதிடம் அமுக்கி விட்டது போக மீதி வேதனை கண்ணீராகப் பொழிய நின்று கொண்டிருந்தார் பெற்றவர். பால் வடியும் முகத்தில் சேறும் தண்ணீரும் வடிய, தன்னை இயங்கச் செய்த ஏதோ ஒன்றைப் பறி கொடுத்து விட்டு பிறருக்கு வேதனைப் பாரமாகிக் கிடந்தான் பையன். சுற்றி நின்ற கூட்டம் விலக்கில்லாமல் கண்களைத் துடைத்துக் கொண்டது. யாரோ போனதற்கு யாரோ அழுவானேன்? உயிருக்கு உயிர் தொடர்பு உண்டோ...?

''நீ ஒருத்தன் எங்களுக்கு இருந்தது அந்த நாசமாப் போற தெய்வத்துக்கு அதிகமாத் தோணித்தாடா?'' பெற்றவளுக்கு அழவே சக்தி இல்லை. அவன் கைகளை ஊன்றி மெள்ள எழுந்து வந்தான். யார் போனால் என்ன? யார் அழுதால் என்ன? அவனால் காப்பாற்றப்பட வேண்டி அவன் இருக்கிறான். அவன் குடும்பம் இருக்கிறது. எல்லாருக்குமிடையிலும் வந்து நின்றுகொண்டு பார்த்தான். சற்று நேரத்துக்கு முன் யாருக்கும் தெரியாமல் இருந்த உண்மையைத் தெரிய வைத்து விட்ட அவனை யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை. வாழ்க்கையின் இறுதி உண்மையை விளக்கிக் கொண்டு கிடந்த உடல்தான் எல்லாருடைய கவனத்தையும் ஈர்த்தது. அவன் அசையாமல் பார்த்தான். கண்ணை எடுக்காமல் மனத்தை எடுக்காமல் பார்த்தான். இந்தச் சோகம் அவசியமா? அழுதழுது முகம் வீங்கி மேலும் அழ முடியாமல் விம்மும் பெற்றவள்,— நிகழ்ந்து விட்டதை மௌன விமரிசனம் செய்யும் சோகச் சித்திரமாக நிற்கும் பெற்றவர், சிறிது நேரம் வேற்றுமைகளை மறக்கச் செய்து ஒருமுகமாக மனிதத் தன்மையைக் காட்டச் செய்யும் 'இறப்பி'ன் சக்திக்கு இலக்காகி விட்ட நூற்றுக்கணக்கான பேர்கள்!

''இந்தாப்பா...'' இயந்திரகதியில் மடியில் வேட்டித் தலைப்பில் வைத்திருந்த பர்ஸிலிருந்து ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து அவனிடம் நீட்டி, அவன் மனத்தைச் சூழ்ந்திருந்த நினைவிலிருந்து பிய்த்தெடுத்தார் பெற்றவர்.

அவன் வெற்றுக் காகிதம் மாதிரி எதுவும் துலங்காத முகத்தோடு அவரைப் பார்த்தான். அவனுக்கு இப்போது பணம் தேவைதான். அவசியம் தேவைதான். அதைச் சக்தி உள்ளவர்தான் கொடுக்கிறார். அதுவும் பிச்சை எடுக்காமல், திருடாமல் உழைப்புக்கு ஊதியமாகத்தான் வருகிறது. இருந்தும் அதை மறுக்கச் செய்யும் ஏதோ ஓர் உள்ளுணர்வுக்கு அவன் இப்போது இரையாகிவிட்டான்!

''வேண்டாங்க!'' அவன் உடலில் வழிந்த தண்ணீரோடு கண்ணீரையும் சேர்த்து வழித்து விட்டுக் கொண்டான். உப்பு நீரும் தண்ணீரும் வேற்றுமை பிரித்தறிய முடியாதபடி ஒன்று கலந்து அவன்மீது நீர்க்கோலமிட்டன. ஊதியம் தரும் தொழில்களை நல்லது கெட்டது என்று பிரித்தறிய என்ன அவசு இருக்கிறது?

கூட்டத்தை விலக்கிக் கொண்டு சோர்விலும் தள்ளாடியபடி வெளியே நடந்தான் அவன். இனி பிழைக்கவும் பிழைப்பிக்கவும் அவன் வழி தேடியாக வேண்டும்!



''ஏண்டி, நம்ப லீலா இப்போ வெல்லாம் பச்சைப் புடவையே கட்டிக்கிறா?''

''அவள் ஒரு ரயில்வே 'கார்டை'க் காதலிக்கிறாளாம்...!''

ரீடா கூந்தலைப் பாதுகாக்கும்

தொல்லைகளைத் துரிதமாகவும்
திறமையாகவும் நீக்குகிறது.

ரீடாவை உபயோகித்து மயிர்க்கால்களுக்குப் போஷாக்குத் தருவதால் உங்கள் கூந்தல் நீண்டு வளர்ந்து மிருதுவாகவும் பளபளப்பான கருமை நிறத்துடனும் காணப்படும். இதிலுள்ள மருந்துச்சத்துக்கள், மயிர் கொட்டுதலை நிறுத்தி, பொடுகைபபோக்கி, நரைக்காமல் பாது காக்கும். புட்டியிலுள்ள ரீடாவைத் தேங்காய் எண்ணெய், கடுகு அல்லது நல்லெண்ணெயில் கலந்து எப்போதும் உபயோகியுங்கள். காரிருள் போன்ற கருங்கூந்தல் அழகை நிச்சயம் நீங்கள் பெறலாம். ரீடாவை உபயோகிப்பதுடன் உங்கள் நண்பர்களுக்கும் சிபாரிசு செய்யுங்கள்.



# ரீடா

கவர்ச்சி தரும் கூந்தலின் ரகசியம்

ரீடா கம்பெனி, சென்னை-1.

R.6 TM

# படித்துப் பாருங்கள்



## ஸப்தரிஷி நாடி

(ஏழு முனிவர்கள் கூறிய ஜோதிடம்)

தர்மம், அதர்மம் செய்தவர் முறையே நற்பயனையோ கெட்ட பயனையோ அடையும்படி செய்கிறார் பகவான். நாம் முன் ஜன்மங்களில் செய்த தர்மம், அதர்மம், இவற்றையும் அதனால் இப்பிறவியிலும், வரும் பிறவியிலும் அடையப்போகும் பயன்களையும் கூறுவதே ஜோதிட நூலாகும். இந்த நூலை முனிவர்கள் கூறியுள்ளனர். ஜோதிடம் கூறுகிறவர்கள் நல்ல தவமுள்ளவர்களாயிருக்கவேண்டுமென்றும், ஜோதிடம் கேட்பவர்கள் தர்மத்தையும், நற்செயல்களையும், பெரியோர்களையும், தெய்வத்தையும் நன்கு நம்பினவர்களாய் இருக்க வேண்டுமென்றும் முனிவர்கள் கூறியிருக்கின்றனர்.

இக் கலியிலும் முறைப்படி ஜோதிடத்தைக் கூறும் பெரியோர்களும், முறைப்படி கேட்பவர்களும் இருக்கின்றனர். இதைக் கண்கூடாகக் கண்டு பலர் நற்செயல்களையும், பெரியோர்களையும், தெய்வத்தையும், தர்மத்தையும் ஆதரித்து வருகின்றனர். ஜோதிட நூல்களில் பலவகை உண்டு. அவைகளில் 'நாடி' என்னும் ஜோதிட நூலில் தெய்வத்தை முன் வைத்து முனிவர்கள் பலன் கூறியுள்ளனர். நாடி என்றால் ஒரு லக்னத்தை நூறு பங்காகப் பிரித்துப் பயன் கூறுவதே! இந் நூலின் வாயிலாகப் பல நுணுக்கமான விஷயங்களை அறிந்து கொள்ளலாம். நாடி நூல்கள் பல உள்ளன. அவைகளில் 'ஸப்த ரிஷி நாடி' என்பது மிகச் சிறந்ததாகும். இதில் அம்பாளைத் தலைவியாக வைத்து ஸர்வக்ஞர்களான ஏழு முனிவர்கள் தமிழ்ப்பாக்களின் மூலம் பயனைக் கூறியுள்ளனர்.

இந்நூலை அரசாங்கத்தில் வெளியிட ஆரம்பித்தது நம் நாட்டின் பெருமையைக் காப்பதற்கேயாகும். முனிவர்களின் தவமும், மொழியுமே நம் நாட்டின் பெருமை. இந்நூலை மொழிபெயர்த்து வெளியிடத் தேர்ந்தெடுத்த ஸ்ரீ சந்திரசேகர தீக்ஷிதரின் அறிவையும், பெருமையையும் எவரும் மறக்க முடியாது. இப் பாட்டுக்களின் கருத்தை எளிய நடையில் மொழிபெயர்த்த வழுத்தூர் ஸ்ரீ ரங்கநாதன் அவர்களின் அறிவும், படிப்பும் யாவராலும் போற்றத் தகுந்ததாகும்.

கன்யா லக்னத்தில் பிறந்தவர்களின் கிரஹ நிலைக்குத் தகுந்தவாறு பயன் கூறும் ஸப்தரிஷி நாடி என்னும் நூல் இப்பொழுது அச்சாகி வெளி வந்துள்ளது. கன்யா லக்னத்தில் பலர் பிறந்திருக்கலாம். அவர்களுடைய பிறந்த காலத்தில் கிரகங்கள் எந்தெந்த ராசிகளில் அமைந்துள்ளனவோ அவற்றைக் கொண்டு பல ஜாதகங்களைக் கணித்து கட்டங்களை அமைத்து இந்நூலில் அவைகளின் பயனைக் கூறியுள்ளனர். இந்நூலில் கன்யா லக்னத்தில் பிறந்தவர்களின் சில ஜாதகங்களே விளக்கிக் கூறப்பட்டுள்ளன. இதற்கு முன்பு மேஷ லக்னம் முதல் சிம்ம லக்னம் முடிய ஸப்தரிஷி நாடி நூலை வெளியிட்டதாகத் தெரிகிறது. முனிவர்கள் நமக்காகக் கூறிய இம்மாதிரியான நூல்களைக் கிடைத்தவரை பாதுகாத்து அச்சிட்டு வெளியிட்டது நமது பாக்கியமேயாகும். மேலும் இந்நூலில் கன்யாலக்ன ஜாதகத்தின் கிரஹ நிலைக்குத் தகுந்தவாறு பலன்களைச் சொன்னதுடன் தோஷங்களும் அவற்றுக்குத் தகுந்த பரிகாரங்களும் கூறப்பட்டுள்ளன. மறைகளின் ஆறு அங்கங்களில் ஜோதிடமும் ஓர் அங்கமாகும். ஆகவே அவைகளில் கூறிய தர்மம், ஸத்யம், தெய்வ நம்பிக்கை, பெரியோர்களிடத்தில் பணிவு இவைகளைக் கைப்பற்றியவர்களுக்கு கிரஹங்கள் பிரதிகூல பலன்களைக் கொடுக்கும் நிலையில் அமைந்திருந்தாலும், கெட்ட பயனை அளிக்காது என்பதை அன்பர்கள் நினைவில் கொள்ள வேண்டும். இம்மாதிரி நற்குணமற்றவர்கள் அவைகளின் பயனை இப் பிறவியிலும் மறு பிறவியிலும் அடைந்தே தீருவார்கள் என்பது மறைகளின் உட்கருத்தாகும். எல்லாவற்றையும் துறந்து காடு சென்றவர்களும், ஜோதிடம் அறிந்த பெரியோர்களைக் கண்டு தன் தன் ஜாதகப் பயன்களைக் கேட்பார்கள். இவ்விதம் அவைகளை அறிவதன் நோக்கம் கிரஹங்கள் நல்ல பயனை அளிக்கும் முறையில் நற்செயல்களைச் செய்வதற்கேயாகும் என முனிவர்கள் கூறுகின்றனர்.

இந்நூலை இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ் சிறந்த முறையில் அச்சிட்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.



ஸ்ரீ சந்திரசேகர தீக்ஷிதர் அவர்களும், ஸ்ரீ ரங்கநாதன் அவர்களும் இம்மாதிரி பல நூல்களை வெளியிடப் பகவான் அருள்புரிய வேண்டுகிறேன்.

—செங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்

பிரசுரம் : கவர்ன்மெண்ட் ஓரியண்டல் மானுஸ்கிரிப்ட்ஸ் லைப்ரரி, சென்னை-5. விலை ரூ. 31.50.

## பொழுதுபோக்கு விளையாட்டு

குழந்தைகள் மண்ணையும், கல்லையும் வைத்துக் கொண்டு விளையாடுகிறார்கள். உலகில் பல பாகங்களிலும் விளையாட்டுக்கென்றே கோடிக்கணக்கில் செலவிட்டு பொம்மைகள் தயார் செய்யப்படுகின்றன. சொப்புப் பொம்மைகள் வைத்து விளையாடாத பெண் குழந்தைகளே கிடையாது. கட்டை, குச்சி, கோல் வைத்து விளையாடாத ஆண் குழந்தைகளே கிடையாது. பாண்டி, கோலி, கண்ணாமூச்சி, நாலுமூலைத்தாச்சி இப்படி எல்லாம் விளையாடினவர்கள்தான் நாம் அனைவரும்.

முன்பு மாதர்கள் சோழி, சொக்கட்டான், கட்டம், பல்லாங்குழி போன்ற ஆட்டமெல்லாம் ஆடுவார்கள். இந்தக் காலத்தில் 'கேரம்' போன்ற அனேக விளையாட்டுக்கள் இருக்கின்றன. வீட்டுக்கு வெளியே ஆடும் டென்னிஸ், பாட்மிண்டன், ஹாக்கி முதலிய விளையாட்டுக்கள் இருக்கின்றன.

விளையாட்டு நம்முடன் பிறந்து, வளர்ந்த ஓர் அரிய கலை.

''பொழுதுபோக்கு விளையாட்டு'' புத்தகத்தில் சின்னச் சின்ன விளையாட்டுக்கள் தெளிவாக எழுதப்பட்டிருக்கின்றன. அந்தந்த விளையாட்டுக்குரிய சட்டதிட்டம், முறைகள் அதற்குத் தேவையான பொருள்களெல்லாம் எளிமையான தமிழில் எழுதியிருப்பது பாராட்டத் தக்கது. தவிர கிராமிய நடனங்கள், கும்மி கோலாட்டம் பற்றிய விவரங்கள், அவற்றுக்குரிய பாடல்கள் எல்லாம் நல்ல முறையில் அமைந்திருக்கின்றன. விடுகதைகள் சேர்த்திருப்பது நல்ல பொழுது போக்காகும்.

உபயோகமுள்ள இந்தப் புஸ்தகத்தைத் தென்மொழி புத்தக டிரஸ்ட்டார் வெளியிட்டிருக்கிறார்கள்.

ஆசிரியர்கள் : எல்.கே. கோவிந்தராஜுலு. ஸ்ரீமதி டி. ஜே. ஜோசப். பிரசுரம்: அருணோதயம்: சென்னை ; விலை ரூ. 2-10.

## பூஞ்செடிகள்

பள்ளிப் பாடங்களை practice, theory எனப் பிரிக்கிறார்கள். ஒவ்வொரு பாடத்திலும் செயல் அநுபவம் முக்கியமெனக் கருதப்படுகிறது. இயற்கையைப் பற்றி ஒரு நல்ல புத்தகம் எழுத வேண்டுமானால் அதற்குச் செயல் அநுபவர் (practical knowledge) இருந்தால் நன்றாகவும் தெளிவாகவும் எழுத முடியும் என்பதற்கு இப்புத்தகம் எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

ஆசிரியர் அநுபவம் பெற்றவர் மட்டுமல்ல; பழைய இலக்கியங்களில் நம் ஆன்றோர்கள் மலரின் வளர்ச்சியில் எவ்வளவு மகிழ்ச்சி பெற்றார்கள் இயற்கையோடு ஒன்றி எப்படி வாழ்ந்தார்கள் என்பதை யெல்லாம் ஓர் ஆராய்ச்சியே செய்து இப்புத்தகத்தை எழுதியிருக்கிறார். நம் பழம்பெரும் இலக்கியத்திலுள்ள மலரைப் பற்றி அநேக பாடல்கள் ஆங்காங்கு பொருத்தமாக அமைத்திருக்கிறார்.

ஒவ்வொரு மலரின் பெருமையும் பெயரும் சுவையுடன் விவரிக்கப் பட்டிருக்கின்றன; விதைகள் நடுவதிலிருந்து படிப்படியாக அதனுடைய வளர்ச்சி, அதற்குத் தேவையான மண், அதற்கு வரும் நோய்களுக்குப் பாதுகாப்பு முதலிய எல்லா விவரங்களும் ஒவ்வொருவரும் புரிந்து கொள்ளும்படி படவிளக்கத்துடன் எழுதப்பட்டிருக்கின்றன. ஒரு நல்ல மலர்த் தோட்டம் போட விரும்பினால் 'பூஞ்செடிகள்' என்ற இந்தப் புத்தகம் நம்மிடம் இருந்தால் போதுமானது. அத்துடன் சொந்தமான நிலமும் வேண்டும்.

—வசுமதி ராமசாமி

இதன் ஆசிரியர் : மு. அருணாசலம், பாரி நிலையம், 59 பிராட்வே, சென்னை-1. விலை ரூ. 3-00.

## வியாசர் அருளிய மகாபாரதம்

உலகப் பெருங் கதைகளில் மிகப் பெரியது மகாபாரதம். அது வேத வியாஸரால் நூறாயிரம் சுலோகங்களில் கூறப்படுகிறது. வால்மீகி ராமாயணத்தைப் போல் நாலு மடங்கு பெரியது. அதில் எத்தனையோ உப கதைகள், பழமொழிகள், உபந்நியாஸங்கள், விமர்சனங்கள், தோத்திரங்கள் அடங்கியிருக்கின்றன. தர்மத்தைப் பற்றிய வரையில் பாரதத்தில் இருப்பது வேறு நூல்களில் இருக்கலாம், ஆனால் அதில் இல்லாதது வேறு எங்குமில்லை என்பது உண்மை. வியாஸர் கதை சொல்லும் பாணியில் நாடகம், ஸம்பாஷணை, வினாவிடை எல்லாம் கையாளப்படுகின்றன. வியாஸர் கவி, தீர்க்கதரிசி, வேதாந்தி, தர்ம ஸ்தாபகர், மகாபாரதம் ஐந்தாவது வேதம் எனவும் அதனுள் அமைந்த பகவத்கீதை உபநிஷத்தெனவும் போற்றப்படுவதே அதன் பெருமைக்குச் சான்றாகும். ஸத்தியம், தருமம், தியாகம், கொடை, வீரம், பக்தி, நன்றி மறவாமை, கர்ம பலன் ஆகிய அனைத்தையும் பற்றிய விளக்கங்களைக் காணலாம்.

நாற்பது ஆண்டுகளுக்கு முன் ம. வீ. ராமானுஜாச்சாரியார் வியாஸ பாரதம் முழுவதையும் தமிழாக்கி வெளியிட்டார். ராஜாஜி வியாசர் விருந்தில் அதை எளிதில் எல்லோரும் படிக்கக்கூடிய வகையில் கல்கியின் மூலம் தமிழுலகுக்கு அளித்தார். இன்னும் சற்று விரிவாக நான்கு பகுதிகளில் புதிதாக (ஒவ்வொன்றும் சுமார் 400 பக்கம்) அ. லெ. நடராஜன் அளிக்கிறார். இப்போது வெளிவந்துள்ள முதல் பகுதியில் ஆதிபர்வமும் சபாபர்வமும் அடக்கம். சகுந்தலை உபாக்கியானம், நளோபாக்கியானம் போன்ற பெருங் கதைகள் தனி நூல்களாக வரும். இனிய தமிழ் நடை, மலிவு விலை, அழகிய பதிப்பு.

காமகோடிபீடாதிபதிகள் ஸ்ரீமுகத்தில் கூறியுள்ளபடி எவ்வளவு தரம் எழுதினாலும் எவ்வளவு தரம் படித்தாலும் அலுக்காதது பாரதம்.

— அண்ணா

வானதி பதிப்பகம், தியாகராயநகர் சென்னை-17. மலிவு விலைப் பதிப்பு ரூ. 2.50.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor, T. Sadasivam.

# நாளொரு மேனியாய்

# சரும எழில் மேம்பாடு

# புதிய ரெக்ஸோனா துணையே

ரெக்ஸோனா சோப்பின் மிருதுவான நுரையில் அடங்கியுள்ளது கேடில்-எழிலூட்டும் பற்பல எண்ணெய்கள் இணைந்த விசேஷத் தைலமான கேடில் சருமத்தினூடே சென்று, அதை மென்மையுடனும், மழமழப்பாகவும் மிளிரச் செய்து.... உங்கள் மேனி வனப்பை ஓங்கச் செய்கிறது. எடுப்பான நறுமணத்தினால் உங்களை மணிக்கணக்கில் புது மலர்ச்சியுடனிருக்கச் செய்கிறது. உங்கள் அன்றாட அழகுசாதனத்துக்குகந்தது ரெக்ஸோனா.




புதிய மேலுறை, புதிய வடிவழகு, புதிய பச்சை வர்ணம் ஆகியவற்றோடு கூடிய புதிய ரெக்ஸோனாவை நீங்கள் விரும்புவீர்!

**புதிய ரெக்ஸோனா—**
**உங்கள் சருமத்திற்கு அனுகுணமானது.**

RP. 169-X52 TM

ஆஸ்திரேலியாவிலுள்ள ரெக்ஸோனா ப்ரொ. லிமிடெட், சார்பாக இந்துஸ்தான் லீவர் லிமிடெடினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

